# கல்கி

பாக். ராணுவப் புரட்சி:
இந்திய உளவுத்துறை
தூங்கி விட்டதா?



KALKI
24.10.99
ரூ. 4.50





## பெண்கள் திருவிழா!



# தீபங்களில்
# மின்னும் அழகு
# ஆடையில் விஞ்சும்
# அழகு!

நாகரீகத்தைப்
பிரதிபலிக்கும் ஆடைகளின்
கலைக்கூடம்
குமரன் சில்க்ஸில்
எழில்மிகு
வண்ணக்கோலமாய்...
வண்ணக்களஞ்சியமாய்...
• திருமண பட்டுச்
சேலைகள் • மைசூர் சில்க்
• பிரிண்டட் சில்க் சாரீஸ்
• ஃபேன்ஸி காட்டன்
சாரீஸ் மற்றும் பிளவுஸ்
• ஷர்ட்டிங் • சூட்டிங்
• கட்பீஸ் ரெடிமேட்
பிரிவுகளில்
ஆண்களுக்கான
அனைத்து முன்னணி
ஜீன்ஸ் மற்றும் ரெடிமேட்
ஷர்ட்ஸ் • டீ-ஷர்ட்ஸ்
பெண்களுக்கான ஃப்ராக்
• சுடிதார் • மிடி மற்றும்
அனைத்தும் ஒரே இடத்தில்
ஏராளமான ரகங்களில்,
மிகவும் நியாயமான
விலையில், 100%
மன திருப்தியில்,
வேண்டியதைப் பெறலாம்.
வேறெங்கும் அலையாமல்.

ஆடைகளில் எல்லோருக்கும் எல்லாமுமே



# குமரன் சில்க்ஸ்

73-74, புதுமார்க்கெட் வீதி, திருப்பூர் - 641 604. போன் : 742888
558-560, ஒப்பணக்கார வீதி, கோயமுத்தூர் - 641 001. போன் : 391555

ஜனரஞ்சகமான ஜவுளி மாளிகை

Visit us at : www.kumaransilkscbe.com

SASI 180 99

# மும்பைப் புலியின் உறுமலுக்குப் பயப் படுமா டெல்லி?



• தாக்கரே



• சுஷ்மா

● முன்பு ஜெ. கூட்டணி கொடுத்த அழுத்தங்களைப் போல், இம்முறை வாஜ்பாயிக்கு இல்லையென்றாலும் கூட்டணிக் கட்சிகள் தங்கள் கோரிக்கை மனுக்களை நீட்டாமலில்லை. முதல் கோரிக்கை நிதித்துறைக்காகத் தி.மு.க.விடமிருந்து வந்தது. முரசொலி மாறனுக்கு நிதித்துறை கேட்பதையறிந்ததும் தெலுங்கு தேசம், முன்னாள் ரிசர்வ் வங்கி கவர்னரும் இப்போதைய ஆந்திர ஆளுநருமான ரங்கராஜனுக்கே நிதித்துறை வேண்டுமென்றது. பிரதமர் இருவரையும் வேண்டிக் கேட்டுக் கொண்ட பிறகுதான் தெலுங்கு தேசம் பின் வாங்கியது. அது பின் வாங்கியதும் தி.மு.க மறுபடியும் கோரிக்கை வைத்தது. தி.மு.கவைச் சரிக்கட்டுவதற்காக பிரதமர் ஒரு பிரத்யேக விருந்துக்கு ஏற்பாடு செய்தார். அதில் மாறனும் கலைஞரும் கலந்து கொண்டனர். பிரதமரோடு அத்வானியும் குஜராத் முதல்வரும் கலந்து கொண்டனர். அதில் 'கருணாநிதியின் கருணை'யை எதிர்பார்ப்பதாகப் பிரதமர் கேட்டுக் கொண்ட பிறகுதான்-மாறனுக்கு வணிகத்துறையோடு தொழில்துறையும் உண்டு என்று முடிவான பிறகுதான், "நாங்கள் பிரதமரிடம் எங்கள் எம்.பிக்களின் பட்டியலை மட்டுமே கொடுத்துள்ளோம். அமைச்சர்களையும் இலாகாக்களையும் அவரே முடிவு செய்வார்!" என்று அறிக்கை விட்டார் கலைஞர்.

● அமைச்சர் பதவிக்காக டில்லியில் உண்ணாமல் உறங்காமல் அலைந்து கொண்டிருந்தார் திருநாவுக்கரசு. இவருக்காக பி.ஜே.பி. தலைமையிடம் செல்வாக்குள்ள ஒரு பத்திரிகையாளரும் சிபாரிசு செய்தார். 'கூட்டணிக் கட்சி ஒவ்வொன்றுக்கும் ஒரு அமைச்சர் பதவி தரப்படும்' என்று பி.ஜே.பி. சொன்னதால், தமது எம்.ஜி.ஆர். அ.தி.மு.கவும் கூட்டணிக் கட்சிகளில் ஒன்றுதானே என்று டெக்னிக்கலாகவும் வாதாடிப் பார்த்தார். ஆயினும் பா.ம.கவும் ம.தி.மு.கவும் இரண்டிரண்டு அமைச்சர்களுக்குக் கோரிக்கை வைத்ததால் திருநாவுக்கரசு அடிபட்டுப் போய்விட்டார். இதற்கிடையில் ஆர்.எம்.வீ. கட்சியைச் சேர்ந்த ஜெகத்ரட்சகனும் அமைச்சர் பதவிக்கு ஆசைப்பட்டுக் கொண்டிருந்தார் என்பதுதான் இன்னும் ஆச்சரியம்.

●அமைச்சரவைப் பதவியேற்பு வைபவத்தின் முதல் நாள் இரவு, ஷரத் பவாருடன் ஒரு டீல் அடித்துப் பார்த்தார், 'மும்பையின் இளைய தலைமுறை தாதா' என்று அழைக்கப்படும் பிரமோத் மகாஜன். அதன்படி சிவசேனாவுக்குக் கல்தா கொடுக்கப்படும். அப்படிக் கொடுத்தாலும் பி.ஜே.பிக்கு ஒன்றும் நஷ்டமாகிவிடாது. எனவே, பவாருக்கும் சங்மாவுக்கும் பதவிகள்.

சங்மா விரும்பினால் லோக்சபா சபாநாயகராகலாம்; பவார் கட்சி மகாராஷ்டிரத்தில் ஆட்சியமைக்க பி.ஜே.பி. ஆதரவளிக்கும் என்றெல்லாம் பேரம் பேசினார் மகாஜன். இதை மோப்பம் பிடித்து விட்ட மும்பைப் புலி (தாக்கரேதான்) உறுமிய உறுமலில் டெல்லி அதிர்ந்தே போனது. உடனே மகாஜனின் டீலெல்லாம் மூட்டை கட்டி வைக்கப்பட்டு, சிவசேனை உறுப்பினர்களுக்கு அமைச்சர் பதவி வழங்கப்பட்டது. ஆயினும் அவர்கள் இலாகா பொறுப்புகளை ஏற்றுக் கொள்ளாமல் முரண்டு பிடிப்பது யாருக்கு நஷ்டம்? நிச்சயம் பி.ஜே.பிக்கு அல்ல என்கிறார்கள்.

● ஜனதா தளத்துக்கான அமைச்சர் பதவிகளை ஜார்ஜ் பெர்னாண்டஸே முடிவு செய்வார் என்று பி.ஜே.பி. சொன்னதும் உடனே பெர்னாண்டஸ் வீட்டின் முன்னால் ராம்விலாஸ் பாஸ்வான் நிதிஷ்குமார், சரத் யாதவ் என்று பலரும் கியூவில் நிற்க ஆரம்பித்து விட்டனர்.

● அமைச்சரவை அமைத்ததில் பி.ஜே.பிக்குள்ளேயே பலமான வருத்தங்கள். சோனியாவை இத்தனை கடுமையாக எதிர்த்துப் போட்டியிட்டு, நன்றாக பர்ஃபாம் செய்தும் தமக்கு ஒன்றுமில்லையே என்று அங்கலாய்த்தார் சுஷ்மா ஸ்வராஜ். அதேபோல டெல்லி பெருந்தலைகளான சாஹெப் சிங் வர்மா, மதன்லால் குரானா, மன்மோகன் சிங்கையே தோற்கடித்த விஜய்குமார் மல்ஹோத்ரா ஆகியோருக்கும் பி.ஜே.பி. தலைமை பெப்பே காட்டியதில் ஏக வருத்தம் அவர்களுக்கு. இதனால் டெல்லி பி.ஜே.பியில் பெருத்த குழப்பம் ஏற்படலாம் என்கிறார்கள்.



• கலைஞர்



• சோனியா

● இரவு 11.30 மணி வரை ஜனாதிபதிக்கு, அமைச்சரவைப் பட்டியல் செல்லாததால், பலரும் பத்திரிகையாளர்களுக்கு டெலிபோன் செய்து தங்களுக்கு ஏதும் சான்ஸ் இருக்கிறதா? பட்டியல் பற்றி ஏதும் தெரியுமா என்று கேட்டுத் துளைத்து விட்டார்கள்!



• திருநாவுக்கரசு

● சோனியா காந்தி, உ.பி., ம.பி., ஒரிஸா, பீஹார், பஞ்சாப் மாநிலத் தலைவர்களுடன் ஆலோசனை நடத்தினார். லாலுவுடனான கூட்டை முறித்துக் கொள்ள வேண்டுமென்று பீஹார் தலைவர் கூறினார். அதேபோல் தமிழகத்திலும் ஜெ.வுடனான கூட்டுக்குக் காங்கிரஸில் இப்போது எதிர்ப்புக் கிளம்பியிருக்கிறது. இது குறித்து, தமிழக காங்கிரஸ்காரர்களையும் அழைத்துப் பேச இருக்கிறார் சோனியா. பி.ஜே.பியின் இந்தக் கூட்டணி ஆட்சியும் நீடிக்காது என்றுதான் இன்னமும் சோனியாவும் அவரது கட்சிக்காரர்களும் திடமாக நம்பிக் கொண்டிருக்கிறார்கள். இதன் அடிப்படையிலேயே அவர்களது மந்திராலோசனைக் கூட்டங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

— இந்த்ரப்ரஸ்தன்

(கார்கிலுக்கும், இதற்கும் சம்பந்தமில்லை)







# 'தோட்டா' பிள்ளையார்

சினிமா செட் மூலம் எதையும் தத்ரூபமாகக் கண்முன் நிறுத்தும் தோட்டாதரணி, அண்மையில் ஒரு கண்காட்சி நடத்தினார். சப்ஜெக்ட் : விநாயகர். கோட்டுச் சித்திரங்கள், வண்ண ஓவியங்கள் என்று நாற்பத்து சொச்சம் விநாயகர்கள். விதம்விதமாக வரைந்து தள்ளியிருந்தார், தோட்டா தரணி. (வித்தியாசமாக மெல்லிய







சாக்குப் பை துணிச் சட்டை அணிந் திருந்தார்.)

"வருடம் ஓர் ஓவியக் கண்காட்சி நடத்த ஆசை. ஆனால் அது முடியாமல் போய் விட்டது. இந்த வருடம் விநாயகர் சதுர்த்தியின் போது இந்தக் கண்காட்சியை நடத்திவிட வேண்டும் என்று மிகவும் முயற்சி செய்தேன். ஏதேதோ தடங்கல்கள். ஒருவழியாக இப்போது நடத்தி விட்டேன்" என்றார்.

"இதெல்லாம், கண்காட்சிக்கென்றே வரைந்தவையா?"

"இல்லை. பிள்ளையார் எனக்குப் பிடிக்கும். (ஏற்கெனவே கடவுள்கள் என்ற தலைப்பில் ஒரு கண்காட்சியை சில வருடங்களுக்கு முன் நடத்தியிருக்கிறார் தோட்டாதரணி) ஏழெட்டு வருடங்களாக வரைந்தவை. உங்களுக்கு ஒன்று சொல்லட்டுமா? தினமும் ஏதாவது வரையாமல் நான் படுக்கைக்குப் போக மாட்டேன்."

வண்ண ஓவியங்களில் சில, வாட்டர் கலர், அல்லது டியூப் வண்ணங்களுக்கு பதிலாக பிரத்யேக வண்ண சாக்பீஸ் கொண்டு வரையப்பட்டவையாம். அந்த சாக்பீஸ்களைத் தண்ணீரில் குழைத்து வாட்டர் கலர் போலப் பயன்படுத்த முடியுமாம்.

"இங்குள்ள இத்தனை பிள்ளையார்களில் உங்களுக்கு மிகவும் பிடித்தது எது?" என்று கேட்டபோது, "எனக்குப் பிடித்தவை மட்டுமே இங்கே உள்ளன. பிடிக்கவில்லையென்றால் அப்போதே கிழித்துப் போட்டு விடுவது என் பழக்கம்!"

— மௌலி

வண்ணப்படங்கள் : ப்ரவீண்குமார்

## சினிமா டைரக்டருக்கு அஞ்சல் துறையின் அஞ்சலி!



அகிரா குரோசேவா-உலகப் புகழ்பெற்ற ஜப்பானிய டைரக்டர். சென்ற ஆண்டு மறைந்த இவருக்கு அஞ்சலி செலுத்தும் வகையிலும் கௌரவிக்கும் வகையிலும் ஜப்பானிய அஞ்சல் துறை 30 அஞ்சல் அட்டைகளை வெளியிட்டிருக்கிறது. அவை ஒவ்வொன்றிலும் அவரது படங்களுக்குச் செய்யப்பட்ட விளம்பர போஸ்டர்கள், அவரே கைப்பட வரைந்த ஸ்டோரி போர்டு ஓவியங்கள் (ஸ்டோரி போர்டு என்பது இன்னின்ன காட்சி இப்படியிப்படித்தான் எடுக்கப்பட வேண்டும் என்று படப்பிடிப்புக்கு முன்பே திட்டமிட்டு காட்சிகளை வரைந்து வைத்துக் கொள்வது) போன்றவற்றை அச்சிட்டுள்ளது. இந்த முப்பது அஞ்சலட்டைகளும் அகிரா குரோசேவாவின் படங்களைப் பற்றிய முழுமையான தகவல்களைச் சொல்லுவதாக அமைந்திருப்பதால், ஜப்பானில் இதற்கு ஏக கிராக்கி!

— எஸ். ஆர்.

# ஆட்சியை நடத்தக் கவியுள்ளம் போதாது!

நேரு குடும்பத்தைச் சாராத ஒருவர் இரண்டாவது முறையாகப் பிரதமர் ஆனது கிடையாது. அதை முறியடித்துக் காட்டியிருக் கிறார் வாஜ்பாய்.

தாங்கள் ஏதோ வேற்று நாட்டவர்கள் என்று இன்னமும் எண்ணிக் கொண்டிருக்கும் வட கிழக்கு மாநிலங்களில்கூட வாஜ்பாயின் பெயரைச் சொல்லித்தான் வோட்டுக் கேட்டார்கள். அஸ்ஸாமில் இரண்டு இடங்களும், மணிப்பூரில் ஓரிடமும் வெற்றி பெற்றதற்குக் காரணம் பி.ஜே.பியின் கொள்கைகள் அல்ல. வாஜ்பாயின் பெயர் மட்டுமே!

நேரு, இந்திரா, ராஜீவ்காந்தி ஆகியோருக்குப் பிறகு மக்கள் ஓரளவுக்காவது எதிர்பார்த்தது விபிசிங் பிரதமரானபோதுதான். அதன் பிறகு இப்போது வாஜ்பாயிடம்தான் மக்கள் நிறையவே எதிர்பார்க்கிறார்கள். நேரு குடும்ப வெளிச்சம் படாத ஒருவரிடம் மக்கள் இந்த அளவுக்கு எதிர்பார்க்கிறார்கள் என்றால், அது வாஜ்பாய் மட்டும்தான்.

நேரு குடும்ப வாரிசுகள் ஆட்சியிலிருந்த வரை அவர்கள் சொன்னதே கொள்கையாக இருந்தது. 'இடதும் அல்ல; வலதும் அல்ல. நடுவழியே நம் வழி. அதிலும் நடுவின் இடது வழி நம் வழி' என்று நேரு சொன்னதே கட்சி மற்றும் ஆட்சியின் கொள்கையாயிற்று. அதையே இந்திராவும் தொடர்ந்தார். ராஜீவோ தாத்தாவின் சோஷலிஸத்தைத் தூக்கிப் போட்டுவிட்டு, உலகமயமாதலையே தமது கொள்கையாகவும் ஆட்சியின் கொள்கையாகவும் செயல்படுத்தினார்.

ஆனால், வாஜ்பாய் இப்படியெல்லாம் - 'தாம் சொல்வதுதான் கொள்கை' என்று ஒரு போதும் செயல்பட முடியாது. 24 கட்சிகளின் கூட்டணியைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டும். கூடவே தமது சொந்தக் கட்சியின் பரிவார தேவதைகளின் நெருக்குதல்களையும் சமாளித்தாக வேண்டும்.

'முரண்பாடுகளையும் நிர்வாகம் செய்யத் தெரிந்தவன்' என்று தம்மைத் தாமே மெச்சிக் கொண்ட வி.பி. சிங்காலேயே பல்வேறு கட்சிகளைக் கொண்ட முரண்பாட்டு நிர்வாகத்தை வெற்றிகரமாகச் செயல்படுத்த முடியவில்லை என்கிறபோது, வாஜ்பாயால் முடியுமா?

இயல்பிலேயே வாஜ்பாய் மிருதுவானவர். நடந்த தேர்தலில் 'தேசத்துக்குத் துரோகம் செய்தவர். சுதந்தரப் போராட்ட வீரர்களைக் காட்டிக் கொடுத்தவர்' என்றெல்லாம் தம்மைப் பற்றிப் பிரசாரம் நடந்தபோதும், உணர்ச்சி வசப்படாமல் கண்ணியமாகவே அறிக்கைகள் விட்டவர். அதேபோல் "சோனியா அந்நியர் என்றெல்லாம் நான் தனிப்பட்ட முறையில் அவரைத் தாக்கிப் பேசமாட்டேன்" என்று தேர்தலுக்கு முன்பே தீர்மானமாகச் சொன்னவர்.

தனிப்பட்ட முறையில் பார்க்கும்போதும் பத்திரிகையாளர் சந்திப்புகளின்போது அவருடன் பேசும்போதும் அவருக்குப் பதவி மோகம் இருப்பதாகத் தெரியவில்லை. அவரது தாமரையிலைத் தண்ணீர் போன்ற மனோபாவமும் கவியுள்ளமும்தான் தூக்கலாகத் தெரியும்.

எதிரிகளைக்கூட மூர்க்கத்தனமாகத் தாக்கி மோதுகிற குணம் அவரிடம் இல்லை. அவரது சக பரிவாரங்கள் அவரை நெருக்கடிகளுக்கு உள்ளாக்கியபோதும் ஜெ. செய்த நிர்ப்பந்தங்களும் அவரது உள்ளத்தில் கோபத்தை மூட்டுவதற்குப் பதில், வேதனையையே ஏற்படுத்தியது. அப்போதெல்லாம் "நான் மிகவும் நொந்து போனேன்... மிகவும் சிரமப்பட்டேன்..!" என்கிற வார்த்தைகளைத்தான் பத்திரிகையாளர் சந்திப்புகளில் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருந்தார்.

ஒருமுறை கண்ணியக் குறைவான முறைகளில் நாடாளுமன்ற உறுப்பினர்கள் ரகளை செய்தபோது மனம் நொந்து போன வாஜ்பாய் "என்ன அரசியல்! என்ன ஜனநாயகம் இது? பாஷன் தேதோ கர் ஜாவ், சோட்டா பியோ சினிமா தேக்கோ (நாடாளுமன்றத்தில் பிரசங்



கம் பண்ணு. வீட்டுக்குப் போய் இரண்டு சின்ன 'பெக்' போட்டு விட்டு சினிமா பாரு" என்றார்.

இப்படிப்பட்ட மென்மையான வாஜ்பாய் எப்படிச் சமாளிக்கப் போகிறார்?

முன்பு ஜெ. என்றால், இப்போது பால்தாக்கரே. எடுத்த வுடனேயே சிவசேனையின் மூன்று எம்.பிக்கள், இலாகா பொறுப்புகளை ஏற்றுக் கொள்ளாமல் முரண்டு பிடிக்கும் நிலை.

ஆனாலும் இப்போதுள்ள ஒரேயொரு ஆறுதல், தெலுங்கு தேசம் உள்பட எந்தவொரு கட்சி, கூட்டணியிலிருந்து விலகினாலும் ஆட்சி கவிழாது என்பதுதான். அதோடு, வாஜ்பாய் என்கிற சாவியைக் கொண்டுதான் அதிகாரக் கதவைத் திறந்திருக்கிறோம் என்பதை பரிவாரங்களும் கூட்டணிக் கட்சிகளும் நன்றாகவே உணர்ந்திருக்கின்றன. இதன் காரணமாக மூர்க்கத்தனமான நெருக்குதல்களை யாரும் வாஜ்பாய்க்குக் கொடுக்க மாட்டார்கள் என்று நம்பலாம்.

இந்த நிலையில், இந்த தேச மக்களின் நம்பிக்கை பொய்த்துப் போகாமல் வாஜ்பாய் செயல்பட்டாக வேண்டும். தமது சந்நியாச மனப்பான்மையை ஒதுக்கிவிட்டு, நேரு குடும்பத்தைச் சேராதவர்களுக்கும் ஆட்சியைச் சிறப்பாக நடத்தத் தெரியும் என்பதை நிரூபிக்க வேண்டும்.

இல்லையென்றால் சோனியா கட்சியினர் எதிர்பார்த்துக் கொண்டிருப்பது போல் 2001-ல் மீண்டும் தேர்தலைச் சந்திக்க வேண்டியிருக்கும். அப்போது இப்படியொரு பொன்னான வாய்ப்பு கிடைக்கும் என்பதற்கு எந்த விதமான உத்தரவாதமும் கிடையாது.

— வெங்கட்

வீடுகளில் கல்யாணம் என்றால், ஒத்துழைப்புக் கொடுக்க உறவினர்கள் கிடைப்பதில்லை என்பதால், காண்டிராக்ட்டில் கல்யாண ஏற்பாடுகளை விட்டு விட்டு, டென்ஷன் இல்லாமல் இருக்கிற மனப்பான்மை இன்று அதிகரித்து வருவது கண் கூடு. இந்தத் தத்துவம், இப்போது கார்ப்பரேட் உலகிலும் பரவலாகக் கடைப்பிடிக்கப்படுகிறது...

# பெண்கள்

ஆண்கள், பெண்கள், குழந்தைகளுக்குரிய உள், வெளி ஆடைகள், அலங்காரப் பொருள்கள், அழகுச் சாதனங்கள், இன்னபிறவற்றை விற்பனை செய்யும் பிரம்மாண்டமான நிறுவனம் ஒன்று அண்மையில் அடுக்கு மாடிக் கட்டடம் ஒன்றில் துவக்கப்பட்டிருக்கிறது. சென்னை மாநகரின் பிசியான பாண்டிபஜார் பகுதியில் துவக்கப்பட்டுள்ள இந்த ஷோரூமின் நிர்வாகத்தினர் பெண் கஸ்டமர்களைக் கவரும் நோக்கத்துடன், 'பெண்கள் திருவிழா' ஒன்று ஏற்பாடு செய்ய விரும்பினார்கள். இதைத் தீர்மானித்த கையோடு, 'விபா' என்கிற 'ஈவன்ட் மானேஜ்மென்ட்' அமைப்பைக் கூப்பிட்டு, பதினைந்து நாள் பெண்கள் திருவிழாவை நடத்திக் கொடுக்கிற முழுப் பொறுப்பையும் ஒப்படைத்து விட்டார்கள்!



• ஷோபா, வித்யா

அப்புறம் என்ன? கைகளில் மெகந்தி இடுவது, காது, மூக்குக் குத்துவது, பச்சை குத்துவது, தலைமுடிக்கு செம்பட்டைச் சாயம் ஏற்றுவது, மேக்-அப், மகப்பேறு கால உடல்நலம் என்று தினம் ஒன்றாக நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்து, ஜாம் ஜாம் என்று பெண்கள் திருவிழாவை கோலாகலமாக ஜமாய்த்து விட்டார்கள்.

இதுபோன்ற நிகழ்ச்சிதான் என்று இல்லை. புதிய பொருள்களை வாடிக்கையாளர்களுக்கு அறிமுகப்படுத்தும் விழா, இசை, நாட்டிய நிகழ்ச்சிகள், சமூக சேவை அமைப்புகளுக்கான நிதி வசூலிக்க நடத்தப்படும் நிகழ்ச்சிகள் என்று எப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் என்றாலும், இப்போது ஈவன்ட் மானேஜ்மென்ட்



**ஈவன்ட் மானேஜ்மென்ட் :**



• பெண்கள் திருவிழா காட்சிகள்...



# திருவிழா!

அமைப்புகளை அனுகி, அவர்களிடம் பொறுப்புகளை ஒப்படைத்துவிட்டு, அதுபற்றிய கவலையை மறந்து விடுவது அதிகரித்து வருகிறது.

உள்ளூர் கலைஞர்களைக் கொண்டு நடத்தப்படும் நிகழ்ச்சிகளைத் தவிர, உஷா உதூப், ஜாகிர் உசைன் போன்ற புகழ்பெற்ற வடஇந்தியக் கலைஞர்களின் இசை நிகழ்ச்சிகள், மேற்கத்திய, இந்திய இசைச் சங்கம், வடக்கு - தெற்கு ஜுகல் பந்திகள் போன்றவற்றையும ஏற்பாடு செய்து, இத்தகைய அமைப்புகள் வெற்றிகரமாக நடத்தி வருகின்றன.

"ஒரு நிறுவனம், தானே முன்னின்று நடத்த வேண்டிய நிகழ்ச்சியை, மூன்றாவது நபரின் பொறுப்பில் ஏன் விடுகிறது?" என்ற கேள்வியை விபா நிறுவனத்தின் வித்யாவிடம் கேட்டால்...

"கம்பெனிகளில் வேலை பார்க்கிறவர்களைப் பொறுத்தவரை, இதுபோன்ற நிகழ்ச்சிகளைப் பெரிய அளவில் நடத்திய அனுபவம் இல்லாதது பெருங்குறை. எனவே, அனுபவம் வாய்ந்தவர்களிடம் ஒப்படைத்தால், தடங்கல் எதுவுமின்றி, சுமுகமாக நிகழ்ச்சியை நடத்தி விட முடியும் என்று நினைக்கிறார்கள். கம்பெனிகளின் ஊழியர்களைப் பொறுத்தவரை இந்த அதிகப்படியான வேலை, தங்களுக்குச் சம்பந்தமில்லாதது என்ற மனப்பான்மையைக் கொண்டிருப்பதால், ஈடுபாட்டுடன் இத்தகைய வேலைகளில் இணைத்துக் கொள்வதில்லை. இன்னொரு சாராருக்கு, ஆபீஸ் வேலையே தலைக்கு மேலே இருப்பதால், இதற்கு உழைக்க நேரமில்லை. இதனால்தான், நிகழ்ச்சிகளைப் பொறுப்பேற்று நடத்திக் கொடுக்கும் "ஈவன்ட் மானேஜ்மென்ட் அமைப்புகள் நிறைய உருவாகி விட்டன!" என்கிறார்.

"இத்தகைய நிகழ்ச்சிகளைப் பொறுப்பேற்று நடத்திக் கொடுப்பது என்பது அத்தனை சுலபமான காரியமில்லை. திட்டமிடுதல், ஒருங்கிணைந்து வேலை செய்தல், கடுமையான உழைப்பு, திடீரென்று ஏதாவது பிரச்னை என்று வந்து விட்டால், ஆன் தி ஸ்பாட் அதுபற்றி ஆலோசித்து, முடிவெடுத்துத் தீர்வுகாணும் சமயோசிதம், எல்லாவற்றுடன் கூட சின்சியாரிடி இவை அனைத்தும் வேண்டும்!" என்கிறார், 'விபா' அமைப்பை நடத்திவரும் இன்னொருவரும் வித்யாவின் தங்கையுமான ஷோபா.

**கொ**சுத் தொல்லையா? பச்சை வேப்பிலையைக் காய வைத்து, வெங்காயத் தோலையும் அத்துடன் சேர்த்து வீட்டில் புகை மூட்டம் போடுங்கள்; கொசு கிட்டே நெருங்காது!

— ஆர். பார்த்திபன்

---

அண்மையில் சென்னையில் நடைபெற்ற 'மிஸ் சென்னை' அழகிப் போட்டியை பொறுப்பேற்று நடத்தி முடித்தது இவர்கள் தான். இதற்கு முன்பே அழகிப் போட்டிகள், பாஷன் ஷோக்களை சிறப்பாக நடத்திய அனுபவம் இவர்களுக்கு உண்டு.

இன்று புதுப்புது ஈவன்ட் மானேஜ்மென்ட் அமைப்புகள் உருவாகிக் கொண்டே இருந்தாலும், அவர்களால் நிலைத்து நிற்க முடியவில்லை. கல்லூரியில் படிக்கிற காலத்தில், கல்லூரிக் கலைவிழாக்கள் நடத்திய அனுபவம் கொடுக்கும் தைரியத்தில் பலர் ஈவன்ட் மானேஜர்களாகி விடுகிறார்கள். கல்லூரிக் கலைவிழாக்கள், குளிர்பானக் கம்பெனிகளின் போட்டா போட்டி உபயத்தில் சிரமம் ஏதுமின்றி நடந்தேறி விடுகின்றன. ஆனால், சொந்தமாக, பெரிய அளவில் நிகழ்ச்சி நடத்த வேண்டும் என்று வருகிறபோது, இவர்கள் திணறிப் போய் விடுகிறார்கள். இத்தகையவர்களை நம்பி, அடுத்து யாரும் பொறுப்பை ஒப்படைக்க முன்வருவதில்லை.

ஈவன்ட் மானேஜ்மென்ட்காரர்கள் சந்திக்கும் எதிர்பாராத பிரச்னைகள் பல. "ஒரு தடவை ஒரு பிரபல செல்போன் கம்பெனிக்காக, ஜாகிர் உசைனின் கச்சேரி ஏற்பாடானது. மாலை ஆறரைக்குக் கச்சேரி ஆரம்பிக்க வேண்டும். முதல் நாள் பெங்களூரில் கச்சேரி முடித்துவிட்டு, மறுநாள் பிற்பகலில் சென்னை வருவதாய் ஒப்புக் கொண்டிருந்த ஜாகிர் உசைன், சொன்னபடி வந்து சேரவில்லை. காரணம் விமானம் தாமதம். ஒருவழியாக சென்னை வந்து இறங்கியபோது மணி ஏழு. நேரே அரங்கத்துக்கு விரைந்து, கச்சேரிக்குத் தயாராகி, ஆரம்பித்த போது மணி எட்டு. அன்று நிகழ்ச்சியை ஏற்பாடு செய்த எங்களுக்கு ஒரே டென்ஷன். எட்டு மணி வரை, பொறுமை இழந்த ஆடியன்ஸை அறிவிப்புகள், மன்னிப்புக் கோரல் இவை மூலமே சமாளித்தது ஆயுசுக்கும் மறக்காது" என்கிறார் ஈவன்ட் மானேஜ்மென்ட் கம்பெனி ஒன்றில் பணியாற்றிய ரஞ்சித்.

வித்யா, ஷோபா சொல்லும் மறக்க முடியாத அனுபவம் : டீன்ஏஜ் ஆண், பெண்களுக்கான அழகுப் போட்டி, நிகழ்ச்சி ஆரம்பிக்க வேண்டிய நேரத்துக்குக் கால் மணி நேரம் முன்பு, நிகழ்ச்சியின் தொடக்கத்தில் பயன்படுத்தத் திட்டமிட்டிருந்த ஆடியோ - வீடியோ சிஸ்டத்தில் ஏதோ கோளாறு. அது இல்லாமல் நிகழ்ச்சியை ஆரம்பிக்க முடியாத தர்மசங்கடமான சூழ்நிலை. ஆடியோ - வீடியோ நிறுவனத்துக்கு டெலிபோன் செய்து, உடனடியாக மாற்று ஏற்பாட்டுக்குச் சொல்லி விட்டோம். ஆனால் ஆள் வந்தபாடில்லை. மறுபடி தொடர்பு கொண்ட போது, ஆளை அனுப்பி விட்டதாகச் சொன்னார்கள். சந்தேகத்துடன் விசாரித்தபோதுதான் தெரிந்தது, நிகழ்ச்சி நடக்கப் போகும் மியூசிக் அகாடமிக்கு ஆளை அனுப்பாமல், அழகுப் போட்டியின் முதல் சுற்று நடத்தப்பட்ட நட்சத்திர ஓட்டலுக்கு ஆள் அனுப்பி விட்டார்கள் என்று. மறுபடி வேறு ஒருவரை மியூசிக் அகாடமிக்கு அனுப்பி வைக்க, அரைமணி நேர தாமதத்துடன் நிகழ்ச்சி தொடங்கியது.

"சில சமயங்களில் இயற்கையும் சதி செய்து விடும். நட்சத்திர ஹோட்டலின் நீச்சல் குளத்தை ஒட்டி, திறந்தவெளியில் பாஷன் ஷோ ஒன்றுக்குத் திட்டமிடப்பட்டிருந்தது. வெயில் காலம் என்ற போதும், திடீரென்று நிகழ்ச்சி ஆரம்பிக்க அரைமணி நேரம் இருக்கும்போது நல்ல மழை. போட்டிருந்த செட்டெல்லாம் வீணாகி விட்டது. அப்புறம், நிகழ்ச்சியின் இரண்டாவது பாதியை நடத்தத் திட்டமிட்டிருந்த ஹோட்டலின் உள் ஹாலில், இரண்டாவது பாதியை முதலில் நடத்தி முடித்துவிட்டு, அதற்குள் அவசரம் அவசரமாக செட்டை சரிசெய்து அப்புறம் அங்கே முதல் பாதியை நடத்தி முடித்தோம்."

"இதுபோன்ற அனுபவங்களில் சலிப்பு வராதா?"

"பிரசவம் வலிதான். குழந்தையைப் பார்க்கிறபோது, வலியெல்லாம் மறந்து, சந்தோஷம் ஏற்படுகிறதல்லவா? இதுவும் அது போலத்தான். நிகழ்ச்சி நல்லபடியாய் முடிகிறபோது மொத்த சலிப்பும் மறைந்து, ஒரு சந்தோஷம் பொங்கும் பாருங்கள். அதை வார்த்தைகளால் விவரிக்க முடியாது."

**— எஸ். சந்திரமௌலி**

அட்டை வண்ணப்படமும் படங்களும் ('பெண்கள் திருவிழா'வில் எடுக்கப்பட்டவை) : **யோகா**

உ

சிவமயம்



குடவாசல் வட்டம் கருவேலியில் எழுந்தருளி இருக்கும்

**ஸ்ரீ சர்வாங்க நாயகி ஸமேத ஸ்ரீ சற்குணேஸ்வர ஸ்வாமிக்கு**

24.10.1999 ஞாயிற்றுக்கிழமை அன்று

# அன்னாபிஷேகம்

அப்பர் சுவாமிகளால் பாடல் பெற்ற ஸ்தலம் கருவிலி என்ற கருவேலி. ஸ்ரீ சர்வாங்க நாயகி ஸமேத ஸ்ரீ சற்குணேஸ்வர ஸ்வாமி எழுந்தருளியிருக்கும் இத்தலம் கோனேரிராஜபுரம் திருவீழிமிழலை. ஸ்ரீவாஞ்சியம் திருநறையூர் ஆகிய க்ஷேத்திரங்களுக்கு மத்தியில் அமைந்த மிகப் பெரிய க்ஷேத்திரம். இந்திரன் பூஜை செய்து பேறுபெற்ற ஸ்தலம். ஸ்ரீ உருத்திரகணங்கள் பூஜித்து பெயர் பெற்ற ஸ்தலம்.

**இந்த ஆலயத்தின் அன்னாபிஷேகம் நிகழும் பிரமாதி வருஷம் ஐப்பசி மாதம் 7ம் தேதி (24.10.99) ஞாயிற்றுக்கிழமை நடக்கிறது. அன்று காலை 9 மணிக்கு மஹா அபிஷேகமும், 10 மணிக்கு சண்டி ஹோமமும், மாலை 4 மணிக்கு விளக்கு பூஜையும், 6 மணிக்கு அன்னாபிஷேகமும், தீபாராதனையும் அதிவிமரிசையாக நடப்பதால் ஆஸ்திக மெய்யன்பர்கள் மேற்படி விழாக்களில் கலந்து கொண்டு சிவனருளை பெற்றுய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம். 23.10.99 சனிக்கிழமை காலை 8 மணிக்கு ருத்ரஹோமம் நடைபெறுகிறது.**

பாரம்பரை தர்மகர்த்தா
**Dr. V. கிருஷ்ணமூர்த்தி**

இப்படிக்கு
**நிர்வாகிகள், கிராமவாசிகள்**

கருவேலி: கும்பகோணம் - பூந்தோட்டம் சாலையில் கூத்தனூருக்கு வடக்கே 1 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது.



–ஆத்மாஸ்

**உலகப் புகழ்பெற்ற SONY நிறுவனத்தின் நிறுவனர் அகியோ மொரிடா. அவர் அண்மையில் மறைந்தார். சோனி நிறுவனத்தைத் துவக்கி, அதை உலகப் புகழ்பெறச் செய்த அகியோ மொரிடாவின் வாழ்க்கைச் சரித்திரம் மிகவும் சுவையானது. சில பகுதிகளின் சுருக்கம்.**

# 'சோனி' என்றால்

என் உறவினர் ஒருவர் இசை கேட்கப் பயன்படும் எலெக்ட்ரிக் போனோகிராப் என்ற கருவியை மிக அதிக விலை கொடுத்து வாங்கி வந்தார். அது முதல், அந்தப் புதிய கருவியே சதா சர்வகாலமும் என் மனத்தை வட்டமிட்டுக் கொண்டிருந்தது. எலெக்டிரானிக் சம்பந்தப்பட்ட புத்தகங்கள், பத்திரிகைகளை நிறைய வாங்கிப் படிக்க ஆரம்பித்தேன். இதிலேயே அதிக நேரம் போனதால், பள்ளியில் படிப்பதில் என் கவனம் குறைந்தது.

என் தலைமையாசிரியர், கவலையுடன் என் தாயாரை அழைத்து என்னைப் பற்றி ஆலோசனை நடத்தினார். படிப்பில் மோசமாகி விட்டதால், ஆசிரியரின் நேரடிப் பார்வையில் இருக்கும் படியாக, வகுப்பில் முதல் வரிசையில் உட்கார வைக்கப்பட்டேன். எலெக்ட்ரானிக் சமாசாரங்களைத் தூக்கி எறிந்துவிட ஆணையிட்டார். கொஞ்சம் நல்ல மதிப்பெண்கள் கிடைக்கும் வரை நானும் எல்லாவற்றையும் நிறுத்தி வைப்பேன். பிறகு, உடனே பழையபடி எலெக்ட்ரானிக் சோதனைகளில் ஈடுபட்டு விடுவேன்.

இபுகா என்ற நண்பருடன் சேர்ந்து 'டோக்கியோ டெலிகம்யூனிகேஷன்ஸ் இன்ஜினீயரிங் கம்பெனி' என்ற நிறுவனத்தை ஆரம்பித்து டேப்ரெக்கார்டர்களை உற்பத்தி செய்தோம். முதலில் நாங்கள் உற்பத்தி செய்த ஐம்பது டேப்ரெக்கார்டர்களுக்கு மார்க்கெட்டே இல்லை. விற்பனைத் துறையில் எங்களுக்கு முன் அனுபவமில்லை என்றாலும் கூட டேப்ரெக்கார்டரை வெற்றியாக்க முடியும் என்ற நம்பிக்கை இருந்தது. நான் அதை இயக்கிக்காட்டிய இடங்களிலெல்லாம், வேடிக்கை பார்ப்பதற்காகப் பெருங்கூட்டம், கூடியதே தவிர, அதை யாரும் வாங்க முன்வரவில்லை. விலை அதிகம் என்று கருதினார்கள் (ஒரு லட்சத்து எழுபதாயிரம் ஜப்பானிய யென்).

ஒரு புராதன பொருள் விற்பனை செய்யும் கடையில், ஒரு பழங்காலப் பூந்தொட்டியை, என் தயாரிப்பான டேப்-ரெக்கார்டரை விட ஒருவர் அதிக விலை கொடுத்து வாங்கியபோது, 'மக்களுக்குப் பயன்படும் டேப்ரெக்கார்டரை வாங்கத் தயங்குகிறார்கள். ஆனால் பழங்காலப் பூந்தொட்டியை இத்தனை விலைகொடுத்து வாங்குகிறாரே இவர்!' என்று ஆச்சரியப்பட்டேன். அதில் எனக்கு ஒரு விஷயம் தெளிவானது. பழம்பொருள்



சேகரிப்பவருக்கு, பழைய பூந்தொட்டி மிக உயர்வான கலைப் பொருள். ஆக, டேப் ரெக்கார்டரை எல்லாருக்கும் விற்க முயற்சி செய்வதை விட, தேவைப்படும் சிலருக்கு விற்க

முனைவதே புத்திசாலித்தனம் என உணர்ந்தேன்.

போர் முடிந்திருந்த அந்தக் காலகட்டத்தில், ஜப்பானில் ஸ்டெனோகிராபர்கள் பற்றாக்குறை நிலவியது. குறிப்பாக, ஜப்பானிய நீதிமன்றங்களில் ஸ்டெனோக்களின் எண்ணிக்கை குறைவு என்பதால், வேலைப் பளு அதிகமாக இருந்தது. ஜப்பானிய உச்சநீதி மன்றத்தில் டேப்ரெக்கார்டர்களை இயக்கிக் காட்டினேன். உடனே இருபது டேப்ரெக்கார்டர்களுக்கு ஆர்டர் கிடைத்தது. அதே போல ஜப்பானிய பள்ளிக்கூடங்களில், ஆங்கில மொழியை, டேப்ரெக்கார்டர் மூலம் போதிப்பது சிறந்தது என்ற கருத்து நிலவியது. அங்கேயும் என் தயாரிப்புக்கு நல்ல வரவேற்பு.

அடுத்து பள்ளிகளுக்காக, சிறிய டேப்ரெக்கார்டர்களை உருவாக்கியபோது, அதற்கென்று மார்க்கெட் உருவானது. எங்களைப் பின்பற்றி அமெரிக்காவிலும் டேப்ரெக்கார்டர்கள் உருவாக்கப்பட்டன. நாங்கள் எங்கள் தயாரிப்புக்கு காப்புரிமை பெற்றிருந்ததால், அமெரிக்கக் கம்பெனிகள் மீது வழக்குப் போட்டோம். ஜப்பான், அமெரிக்கர்களின் ஆதிக்கத்தில் இருந்தபோது, அமெரிக்கக் கம்பெனி மீது வழக்குப் போட்டு, வெற்றி பெற்றது குறிப்பிடத்தக்க ஒரு சாதனை. அமெரிக்கக் கம்பெனிக்காக நீதிமன்றத்தில் வாதாடிய டோனால்டு சிம்சன் பின்னர் எங்கள் கம்பெனியின் வழக்கறிஞரானது சுவையான விஷயம்.

டோக்கியோ டெலிகம்யூனிகேஷன்ஸ் என்ஜினியரிங் கம்பெனி என்ற




''ஏங்க, உங்க சௌகரியத்திற்காக, 'கிரைண்டர், மிக்ஸி, வாஷிங் மிஷின்'னு வாங்கிட்டீங்க; என் சௌகரியத்திற்காக, ஒரு கலர் டி.வி.யும், வி.சி.ஆரும் வாங்கித் தர மாட்டீங்களா?''

— யமுனா ரெங்கநாதன்

எங்கள் கம்பெனியின் பெயர் ஜப்பானிய மொழியில் வாயில் நுழையாத பெயர். கம்பெனியின் பெயரை மாற்றினால் நல்லது என நினைத்தேன். எளிமையான, ஓசைநயம் கொண்ட பெயராக யோசித்தோம். ஓசை என்ற பொருள் வரும்படியான பல சொற்களை அகராதியில் நானும், இபுகாவும் தேடியபோது 'சோனஸ்' என்ற லத்தீன் வார்த்தைக்கு, ஓசை என்ற அர்த்தம் இருப்பது தெரியவந்தது. அதைக் கொண்டு, 'சோன்னி' என்ற பெயரைத் தேர்ந்தெடுத்தோம். ஆனால், ஜப்பானிய மொழியில் ஏறத்தாழ இதே ஓசையுள்ள ஒரு சொல்லுக்கு 'பணத்தை இழப்பது' என்று பொருள். எனவே அது எனக்குப் பிடிக்கவில்லை.

ஒருநாள் திடீரென 'சோனி' என்ற வார்த்தை என் மனத்தில் உருவாயிற்று. இந்த வார்த்தைக்கு எந்த மொழியிலும் தெளிவான அர்த்தம் கிடையாது. ஆனால் பளிச்சென்று நினைவில் நிற்கிற பெயர். அதுவே எங்கள் கம்பெனி மற்றும் உற்பத்தி செய்யும் பொருள்களின் முத்திரைப் பெயராயிற்று. எங்கள் கம்பெனியின் பெயர் சோனி கார்ப்பரேஷன்.

1957-ல் உலகிலேயே மிகச் சிறிய ரேடியோவான பாக்கெட் சைஸ் ரேடியோவை உருவாக்கினோம். ஆனால், அது அப்போது, ஆண்களின் சட்டைப் பாக்கெட் அளவை விடக் கொஞ்சம் பெரிதாக இருந்தது. ஆனால், அதை சட்டைப் பாக்கெட்டில் எடுத்துக் கொண்டு போகும் அளவுக்குச் சிறிய ரேடியோ என்று விளம்பரப்படுத்தி, மார்க்கெட் பிடிக்க முடிவு செய்தோம். எனவே எங்கள் விற்பனையாளர்களின் சட்டைப் பைகளை ரேடியோ கொள்ளும் அளவுக்குப் பெரிதாக்கினோம்! எங்கள் பாக்கெட் ரேடியோவுக்கு மக்களிடையே அமோக வரவேற்பு கிடைத்தது.

எங்கள் பெயரை, வேறு எவரும் தவறாகப் பயன்படுத்தக் கூடாது என்பதற்காக, 175 நாடுகளில் சோனி என்ற பெயரைப் பதிவுசெய்தோம். ஆனால் சிலர் 'சோனி' சாக்லேட், என்று எங்கள் பெயரைத் தவறாகப் பயன்படுத்த ஆரம்பித்தபோது, விழித்துக் கொண்டோம். அவர்கள் மீது வழக்குப் போட்டோம். நான்கு வருடங்கள் வழக்கு நடந்தது. சாக்லேட் கம்பெனி வக்கீல்கள், சோனி என்ற பெயர் எந்த அகராதியிலாவது இருக்கிறதா என்று தேடிப் பார்த்து அலுத்துப் போனார்கள். சாக்லேட்டுக்கு

சோனி என்ற பெயரை அவர்கள் பதிவு செய்து வைத்திருந்தாலும், 'சோனி' என்ற பெயர் எங்கள் உருவாக்கம். எங்கள் பெயர் பிரபலமான பின், அதே பெயரை சாக்லெட்டுக்கு அவர்கள் பயன்படுத்தியிருப்பது தவறு என்று வாதாடினோம். வெற்றி எங்களுக்கே.

நான் இந்த அளவுக்கு முயற்சி எடுத்துக் கொண்டதற்கு என்ன காரணம் தெரியுமா? ஒரு கம்பெனியின் பெயர் புனிதமானது. அந்தப் பெயரின் மீது மக்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டு விட்டால், அதுவே அந்தக் கம்பெனிக்குப் பெரிய பலம். அந்த நம்பிக்கையை மற்றவர்கள் சுயலாபத்துக்குப் பயன்படுத்த அனுமதிக்கக் கூடாது. அப்படி அனுமதித்து விட்டால், அது கம்பெனியை பாதிக்கும். சில சந்தர்ப்பங்களில் 'சோனி' என்ற பெயரை மாற்றலாம் என்று சொல்லப்பட்ட யோசனைகளை நான் கண்டிப்புடன் மறுத்து விட்டேன்.

## பணம் கொடுக்கும் யானைக்குட்டி



**பார்த்தால் மிருகக் காட்சி சாலையில் எடுக்கப்பட்ட புகைப்படம் போல இருக்கும் இது. உண்மையில் ஒரு தானியங்கி பணம் வழங்கும் இயந்திரம். பேங்காக் நகர மிருகக் காட்சி சாலையின் உள்ளேதான் யானைக்குட்டி வடிவிலான இந்த ஆடோமாடிக் டெல்லர் மெஷின் அமைக்கப்பட்டுள்ளது.**

**— சி.எம்.**

ஒருநாள் இபுகா என் அறைக்கு வந்த போது எங்களுடைய டேப்ரெக்கார்டர் கருவியையும், காதுகளில் பொருத்திக் கேட்கக்கூடிய சாதனத்தையும் கொண்டு வந்திருந்தார். அவற்றைத் தூக்கிக் கொண்டு வருவதில் அவருக்குச் சிரமம் இருப்பதை நான் கண்டேன். தவிர, இந்தக் கால யுவதிகளும், இளைஞர்களும் சங்கீதம் இல்லாமல் வாழத் தயாரில்லை என்பதையும் நான் அனுபவபூர்வமாக உணர்ந்திருந்தேன்.

சில காலமாகவே, நான் யோசித்துக் கொண்டிருந்த ஒன்றுக்குச் செயல்வடிவம் தர ஆரம்பித்தேன். என் பொறியியல் வல்லுநர்களை அழைத்து, கேஸட் பிளேயர்களை கனமில்லாத மாதிரி வடிவமைத்து, காதில் பொருத்திக் கேட்கும் வசதியையும் இணைத்து, மற்றவர்களுக்குத் தொல்லை இல்லாமல் இசையைக் கேட்க ஒரு கருவியை வடிவமைக்கச் சொன்னேன்.

என் கருத்துக்கு அவர்கள் மத்தியில் பெரிய வரவேற்பு இல்லை. ரெக்கார்டிங் வசதி இல்லாத கருவியை யார் வாங்குவார்கள்? விலை அதிகமாக இருக்குமே என்றெல்லாம் எதிர்மறையாகப் பேசினார்கள். இருந்தாலும் நான் அதில் பிடிவாதமாக இருந்தேன்.

கடுமையாக உழைத்து, நான் விரும்பிய கருவியை அவர்கள் உருவாக்கினார்கள். உலகின் முதல் 'வாக்மேன்' ரெடி. அந்தக் கருவிக்கு 'வாக்மேன்' என்ற பெயரைக் கூட நான் சூட்டவில்லை. நான் சுற்றுப்பயணத்தில் இருந்தபோது, கம்பெனியில் சில இளைஞர்கள் வைத்த பெயர்தான் அது. அதே பெயர் விளம்பரப்படுத்தப்பட்டு விட்டதால், அதை மாற்ற நான் விரும்பவில்லை. இத்தனைக்கும் இலக்கணப் பிழையான பெயர் அது. இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் பெயரை மாற்றி விற்பனை செய்தும் கூட வாக்மேன் என்ற பெயரே நிலைத்து விட்டது. ஆர்டர்கள் வந்து குவிந்தன. சமாளிப்பது பெரும் கஷ்டமாக இருந்தது. எடுத்த எடுப்பிலேயே இரண்டு கோடி வாக்மேன்கள் விற்பனையாயின.

நான் என் சிறிய டிரான்ஸிஸ்டர் ரேடியோவை நியூயார்க் நகருக்குக் கொண்டு போய் அதற்கான விற்பனையாளர்களைக் கண்டுபிடிக்க முயன்றேன். பல விற்பனையாளர்கள் ஆர்வம் காட்டவில்லை. "இத்தனை சிறிய ரேடியோவை எதற்காகச் செய்தீர்கள்? அமெரிக்காவில் வீடுகள் பெரியவை. நிறைய அறைகள். அமெரிக்கர்கள் பெரிய ரேடியோவைத்தான் விரும்புகிறார்கள்!" என்றார்.



## அடுத்த இதழ்...

### தீபாவளி சிறப்பிதழ் — I

ஆம்; தீபாவளி மகிழ்ச்சி இரட்டிப்பாக இரண்டு தீபாவளி சிறப்பிதழ்கள்!

என்ன சிறப்புகள்?

அந்தந்த வாரத்தில் தெரிந்து கொள்ளுங்களேன்!

நான் சொன்னேன்: "வீடுகள் பெரியவை; நிறைய அறைகள் என்பதும் உண்மைதான். ஒவ்வொருவருக்கும் தனித்தனி அறை. நியூயார்க்கில் மட்டும் இருபதுக்கும் அதிகமான ரேடியோ நிலையங்கள். ஆகவே, அவரவரும் தம் அறையில் உட்கார்ந்து கொண்டு, தங்களுக்குப் பிடித்ததை இந்தச் சிறு ரேடியோவில் சௌகரியமாகக் கேட்கலாமில்லையா?"

பலர் என் தரப்பு நியாயத்தை உணர்ந்தார்கள். ஆர்டர்கள் கிடைத்தன. ஒரு விற்பனையாளர் ஒரு லட்சம் ரேடியோக்களுக்கு ஆர்டர் தந்தார். நான் நம்ப முடியாத அளவு அது. எங்கள் கம்பெனி மூலதனத்தைப் போல பல மடங்கு மதிப்புள்ள ஆர்டர் அது. ஆனால் அவர் ஒரு நிபந்தனை விதித்தார். 'சோனி' என்ற எங்கள் பெயரை ரேடியோ மீது போடக் கூடாது. அவர், தமது கம்பெனி பெயரைப் போட்டு விற்பனை செய்வார் என்பதே அது.

நான் யோசித்தேன். மற்ற கம்பெனிகளுக்குப் பொருள்கள் தயாரித்துக் கொடுக்கும் நிறுவனமாக நான் செயல்பட விரும்பவில்லை. எங்கள் தயாரிப்பு, எங்கள் பெயரைச் சொல்லும்படி இருக்க வேண்டும். எனவே, "உங்கள் நிபந்தனையை ஏற்பதற்கில்லை!" என்று சொல்லி, ஒரு லட்சம் ரேடியோ சப்ளை செய்யும் ஆர்டரை ஏற்க மறுத்து விட்டேன்.

என் சுற்றுப்பயணங்களின் போது, சோனி நிறுவன அமைப்புகளுக்கு திடீரென்று விஜயம் செய்து, "என்னை நானே அறிமுகப்படுத்திக் கொள்வேன். என் முகத்தை பேப்பரிலோ, டி.வி.யிலோ பார்த்திருப்பீர்கள். சதையும், ரத்தமும் ஆன மொரிடா எப்படி இருப்பார் என்று பார்க்கும் ஆவல் உங்களுக்கு இருக்கும். எனவேதான் வந்திருக்கிறேன்" என்ற என் அறிமுகத்தை மிகவும் ரசித்துச் சிரிப்பார்கள். அவர்களுடன் பேசியபடியே அலுவலகத்தைச் சுற்றிப் பார்ப்பேன். அவர்களுடன் போட்டோ எடுத்துக் கொள்வேன். சில நிமிடங்களிலேயே நாங்கள் எல்லோரும் ஒரே குடும்பம் என்ற உணர்வைப் பெற்று விடுவோம்!

தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**

நன்றி : SONY நிறுவனம் வளர்ந்த கதை (நிறுவனர் அகியோ மொரிடா சுயசரிதம்)
வெளியீடு : கண்ணதாசன் பதிப்பகம், சென்னை - 17, விலை ரூ. 60/-







1999 அக்டோபர் 24
பிரமாதி ஐப்பசி 7
மலர் : 58
இதழ் : 13

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## மீண்டும் ராணுவ ஆட்சி!

இந்தியா மீது கார்கில் யுத்தத்தைத் திணித்த நவாஸ் ஷரீஃப் அதன் விளைவை (இரண்டாவது முறையாக) சந்தித்துள்ளார்! முதல் விளைவு - கார்கிலில் வாய்த்த தோல்வி; இரண்டாவது, இப்போதைய ராணுவ ஆட்சி.

ராணுவம் தமது ஆணையின்றி தன்னிச்சையாக கார்கிலில் ஊடுருவியது என்ற அண்டப்புளுகை அவிழ்த்து விட்டதோடல்லாமல், ராணுவத் தலைவர் அயல்நாடு சென்றிருந்த தருணத்தில் அவரைப் பதவி நீக்கமும் செய்தார் ஷரீஃப்! தமக்கு நெருக்கமான க்வாஜா ஜியாயுத்தீனைப் புதிய ராணுவத் தலைவராக நியமித்தார்.

இந்த தான்தோன்றித்தனமான நடவடிக்கையை எதிர்த்த ராணுவத் தலைமை, ஷரீஃபை காவலில் வைத்து, அரசையும் கைப்பற்றி விட்டது.

பாகிஸ்தானில் இவ்வாறு ஜனநாயக அரசு வீழ்த்தப்படுவதும் அதற்குப் பதில் ராணுவ ஆட்சி வருவதும் புதிதல்ல. நான்காவது முறையாக இந்தச் சடங்கு நிகழ்ந்திருக்கிறது.

இந்தியாவும் பாகிஸ்தானும் ஒரே சமயத்தில்தான் சுதந்தரம் பெற்றன. ஆனால், இந்தியாவுக்கு இருக்கின்ற ஜனநாயக ஸ்திரத்தன்மை பாகிஸ்தானுக்கு இல்லை. அடுத்தடுத்து வந்த ஆட்சியாளர்கள் மோசமான நிர்வாகம், மதவாதப் போக்கு, இந்தியா எதிர்ப்புக் கொள்கை என 'நெகடிவ்' அரசியலில் ஈடுபட்டு, நாட்டின் முன்னேற்றத்தைத் தடைசெய்ததோடு சரி.

இப்போதைய ராணுவத் தலைவரும் பாகிஸ்தான் அரசைத் தம் வசப்படுத்திக் கொண் டிருப்பவருமான பர்வேஸ் முஷாரஃப் மனம் வைத்தால் பாகிஸ்தானை 'விரோத அரசியல்'




போக்கிலிருந்து திசை மாற்றி வளர்ச்சி அரசியலுக்கு வழிவகுக்கலாம். நாளடைவில் மீண்டும் ஜனநாயகப் பாதைக்கே நாட்டை அழைத்தும் செல்லலாம்.

ஆனால், ராணுவ ஆட்சியின் போக்கு எப்படி அமையும் என்று கணிப்பதற்கில்லை. அடிப்படையில் ராணுவப் புரட்சி என்பது ஜனநாயகத்தை அழிக்கக்கூடியது என்பதால் அமெரிக்கா போன்ற உலக நாடுகள் பாகிஸ்தான் சம்பவங்களைக் கண்டித்து எதிர்த்துள்ளன. இந்தியாவும் முன்னெச்சரிக்கை நடவடிக்கையாக தனது ராணுவத்தைத் தயார் நிலையில் நிறுத்தியிருக்கிறது.

எனினும் பாகிஸ்தானின் ராணுவ அரசு அண்டை நாடுகள் மீது தாக்குதல் நடத்தத் தயங்கும். எந்தத் துறையிலும் தன்னிறைவு காணாத நாடு பாகிஸ்தான். அதன் தினசரி இயக்கத்துக்குக் கூட பிற நாடுகளின் உதவி தேவை. இந் நிலையில் நியாயமற்ற தாக்குதல்கள் நடத்தினால் உலகின் சக்திவாய்ந்த நாடுகளுடைய விரோதத்தைத்தான் பாகிஸ்தான் தேடிக் கொள்ளும். அமெரிக்கா நினைத்தால் பாகிஸ்தானைப் பொருளாதார ரீதியாக ஒடுக்கியே தனிமைப்படுத்தி விட முடியும்.

இந்தக் காரணங்களினால் பாகிஸ்தானின் ராணுவ ஆட்சி இந்தியாவுக்குப் பெரிய அபாயம் எதையும் விளைவிக்காது என நம்பலாம்.

பாகிஸ்தான் தனது ஜனநாயக விரோதப் போக்கால் அமெரிக்காவின் அதிருப்தியைச் சம்பாதித்துக் கொண்டுள்ள இந்த நேரத்தில், இந்தியாவில் தேர்தல் வெற்றிகரமாக நடந்து முடிந்து, அதன் ஜனநாயக பாரம்பர்யம் மீண்டும் உலகுக்கு உணர்த்தப்பட்டிருக்கிறது. இந்தோ - அமெரிக்க உறவுகள் பலப்பட இது ஒரு நல்ல சந்தர்ப்பம். அமெரிக்காவின் பாகிஸ்தான் ஆதரவு நிலை, நடுநிலையாக மாறவும், விரைவில் நிகழவிருக்கும் கிளின்டனின் விஜயம் மூலம் நமக்கு ஆதாயங்கள் பெருகவும் நமது அயலுறவுத் துறை சுறுசுறுப்பாக உழைக்க வேண்டும்.

## மெகா அமைச்சரவை!

பதவியேற்றுள்ள புதிய தேசிய ஜனநாயக முன்னணி அரசில் பதினொரு கட்சிகளைச்




சேர்ந்த எழுபது அமைச்சர்கள் இடம்பெற்றுள்ளனர்!

கூட்டணியின் அத்தனை அங்கத்தினர்களையும் திருப்திப்படுத்தும் வகையில் அமைச்சரவை நிறுவ பிரதமர் பெருமுயற்சி செய்தும் சிவசேனையில் அதிருப்தி முணுமுணுப்புகள் எழுந்துள்ளன. இந்த அமைச்சரவையைக் கட்டி மேய்ப்பது பெரிய சவால்தான். ஆனால் இதனினும் பெரிய சவால் ஒன்று இருக்கிறது.

கார்கில் யுத்தத்தினால் காலியான கஜானாவை நிரப்பியாக வேண்டும். அதற்காக புதிய வரிகளும் சர்சார்ஜும் விதிக்கப்படும் என்று நாடே எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. டீசல் விலை உயர்வைத் தொடர்ந்து அத்தியாவசியப் பொருள்களின் விலை ஏறப் போகிறது; பயணக் கட்டணங்கள் உயரப் போகின்றன. இதனால் அரசுக்குக் கூடுதல் வருவாய் கிட்டும் என்று கணக்கிடுவதில் தவறில்லை.

ஆனால் விதிக்கப்படும் கூடுதல் வரிகளும் கட்டணங்களும் தொழில் உற்பத்தியையும் வளர்ச்சியையும் பாதிக்குமேயானால் அவற்றால் இறுதிப் பயன் கிட்டாமலே போய்விடும்.

அமைச்சரவையை நிறுவிய பிரதமர் அனைத்துத் தரப்பினரையும் திருப்திப்படுத்துவதற்காகத் தலையைப் பிய்த்துக் கொண்டு ஆலோசனை நடத்தியிருக்கிறார். அதே போல் புதிய அரசும் நிதி அமைச்சகமும் அரசின் செலவினங்களுக்கு ஏற்ப வரி விதிப்பதையே இலக்காகக் கொள்ளாமல் அனைத்துத் தரப்பிலும் வளர்ச்சியைக் கருத்தில் கொண்டு பொருளாதாரக் கொள்கையை வகுக்க வேண்டும்.

இடைக்கால பட்ஜெட் ஒன்று தயாரிக்கப்படுவதற்குக் கூட வாய்ப்பு இருக்கிறது. அந்தச் சமயத்தில், நோட்டுப் புழக்கம் அதிகரித்தால் போதாது. உற்பத்தி பெருக வேண்டும் என்பதை நிதியமைச்சகம் மறந்து விடாமல் செயல்பட வேண்டும்.

அனைத்திலும் முக்கியமான விஷயம் - சிக்கனத்தைக் கடைப்பிடிக்குமாறு தமது அமைச்சர்களுக்குப் பிரதமர் கட்டளை பிறப்பிக்க வேண்டும். இதனால் அதிருப்தி ஏற்படுமெனில், முதல் மூன்று வருடங்களுக்காவது இதைப் பிரதமர் வற்புறுத்தலாம்! ●

# காய்ச்ச வேண்டாம், அப்படியே குடிக்கலாம்!

**மாதுரி**

**முன் குறிப்பு: இதில் வரும் பெயர்கள், சம்பவங்கள் யாவும் கற்பனையே. ஆனால் பிரச்னை அப்படிச் சொல்வதற்கில்லை...**

"டேய்! உனக்கு கொழுப்புதானே? குடிக்க தண்ணி கேட்டா கஷாயம் கொண்டு வர்றே?" எகிறினான் டிரைவர் கிருஷ்ணன்.

"தோரு பாரு கிஷ்டா, எனக்கென்னா வேல வெட்டி இல்லியா, கஷாயம் போட? உங்க மெட்ரோ வாட்டர் தண்ணியத்தான் புட்டில புடிச்சாந்தேன்! இன்னால்லாம் இருக்கு பார் உள்ளாற!"

"அதுவா இப்பிடி?"

"உங்க ஆபீசு, நீ எம்.டியோட டைவரு. அங்க கொஞ்சம்



Bloodworms in drinking water found harmless

By Our Staff Reporter

CHENNAI, Sept. 28. Laboratory research has proved that the presence of "bloodworms" in drinking water as not being vectors of any disease and therefore

quate chlorination coupled with regular cleaning of sumps. Besides, they have also advised the importance of educating the public about the harmless bloodworms to prehension

regular cleaning of sumps. sides, they have also advised the pub-

கேளு!"

தயங்கியபடி எம்.டியின் முன் நின்றான்.

"என்ன கிருஷ்ணா ஏதாவது வேணுமா?" எனக் கேட்டார்.

"சார் தப்பா நினைக்காட்டி..."

"சொல்லு..."

"எங்க ஏரியாவுல நம்ம தண்ணியைக் காட்டி என் மானத்த வாங்கிட்டாங்க சார்! ரேடியேட்டருக்குக் கூட ஊத்த முடியாது..."

"ஓ அதச் சொல்றியா? தண்ணி அப்படித்தான் இருக்கு. ஆனா பயப்பட தேவையில்லைனு பேப்பர்ல போட்டிருக்கோமே. குடிநீர்ல மிதப்பவை, நீந்துபவை, நெளிபவை, மூழ்குபவை, ரெண்டுங்கெட்டான் இப்படி பல ஜீவராசிகளை பார்க்கிறதா ஏகப்பட்ட புகார், கிலோ லிட்டர் கணக்குல. வேறு மணம் வீசறதா வேற கம்ப்ளைண்ட். நிஜந்தான். ஆனா, குடி நீரை உள்நாட்டிலேயும் வெளிநாட்டிலேயும் பரிசோதனை செய்ததிலே, ஒரு பிரச்னையுமில்லைனு தெரியவந்திருக்கு. அத பேப்பர்ல போட்டோம்.

"அதெப்படி சார்..."

"உலக வங்கி மீட்டிங் இருக்கு. அவசரமா போகணும். நல்ல குடிநீரை மக்களுக்குத் தர அவங்க மேலும் கடன் தரப் போறாங்க. உன்னோட சந்தேகம் நீங்க உன்னை பி.ஏ.வோட லேப்புக்கு அனுப்பறேன். அங்க கெமிஸ்ட் உனக்கு விவரமா எல்லாம் சொல்வார்."

புஸ் புஸ் என்று கண்ட இடங்களிலிருந்து புகை கிளம்பிய லேப்புக்குள் நுழைந்தான் கிருஷ்ணன். லேப் கெமிஸ்ட் பார்த்த பார்வையிலேயே இவனும் ஆசிட் போல 'புஸ்' என்று ஆவியாக போயிருக்க வேண்டும். தப்பித்தான். அவர் விவரித்தார்– நியூஸ் ரீல் பாணியில் (அமிதாப் குரலில் படிக்கவும்) நீரில் 'மிதிப்பவை' ஒரு வகையான பாக்டீரியா. அவற்றால் வயிறு சம்பந்தப்பட்ட கோளாறுகள் வரலாம். பயப்பட வேண்டாம். 'நெளிபவை'யில் இருக்கும் வைரஸ் இந்த பாக்டீரியாவை செயலிழக்கச் செய்யும். சிக்கல் என்னவென்றால் 'நெளிபவை'யால் மூட்டுகள் பூட்டாக வாய்ப்பிருக்கிறது. அதே சமயம் இந்தப் பூட்டுகளைத் திறக்கும்



0.00000021mg/lt. ஒரு தடுப்பூசிக்கு நிகரான அளவு. விஷத்தை விஷத்தால் அல்லவா முறிக்கிறோம். தடுப்பு ஊசிகளின் அடிப்படை அதுதானே. அப்படிப் பார்த்தால் 'மூழ்குபவை' 'ஹெப்படைட்டிஸ் பி' தடுப்பு ஊசிக்குச் சமம். உங்களுக்கு எவ்வளவு செலவு மிச்சம் செய்கிறோம் பாருங்கள்!"

கிருஷ்ணன் மிரண்டு போனான்.

"தண்ணி கலங்கலா, நல்லா இல்லேன்னு சொல்ல வந்தா, அதை மருந்து ரேஞ்சுக்கு தூக்கி வைச்சுப் பேசறீங்க?"

"கரெக்ட்! உணவே மருந்து என்ற வாக்குப்படி நீரை மருந்தாக்க முயற்சிக்கிறோம். பி.ஏ. இவரை பம்ப்பிங் ஸ்டேஷனுக்குக் கூட்டிப் போங்கள். அங்கு மேலும் தெளிவான விவரங்கள் கிடைக்கும்."

ராட்சஸ பம்புகளின் சப்தம் ஒருபுறம். மூலையில் இருவர் பக்கெட் பக்கெட்டாக எடுத்து எதையோ பெரிய தொட்டிக்குள் போட்டுக் கொண்டிருந்தார்கள். கிருஷ்ணனை கவனிக்க ஒரு அதிகாரி வந்தார்.

"அவங்க என்ன சார் கலக்கறாங்க?"

"அது 'ரெண்டுங்கெட்டான்'. வேப்புல வைரஸ், பாக்டீரியா பத்தி சொன்னாங்களா?"

"ம்..."

"அந்த உன்னதங்கள் அழிஞ்சு போகாம பாதுகாப்பா மக்களைச் சென்றடைய, இந்த 'ரெண்டுங்கெட்டான்' சேர்க்கிறோம். இதனால தண்ணியோட மருத்துவ விசேஷம் கெட்டுப்போகாம இருக்கும்."

"தண்ணில ஒரு வாடை....?"

"மருந்து வாடை தானே அடிக்கும்! அதப் போய்ப் பெரிசா... இந்தக் குடிநீரை வெறும் வயித்தில நாளைக்கு மூணு முறைன்னு முப்பது நாள் குடிச்சாப் போதும். க்ளோஸ்!"

...விகள் 'நீந்துபவை'யிடம் இருக்கின்றன. 'நீந்துபவை' சாதுவான அப்ராணிகள். ஆனால் அவை 'மிதப்பவை'யோடு கலந்தால் கலக்கல் அடித்த 'கிக்' தலைசுற்றல் ஏற்படலாம். ஓசியில் வரும் 'கிக்' என்பதால் அளவுக்கு அதிகமாகவே இருக்கும். தவறில்லை. உலகமே சுற்றிக் கொண்டுதானே இருக்கிறது. ஆகவே பயம் எதுவுமேயில்லை. போதுமா?"

"சார் தண்ணில மூழ்கிப்போன டைட்டானிக்..."

"ஆ... மறந்துவிட்டேன்! 'மூழ்குபவை'. அவை ஒரு வினோத வைரசோ பாக்டீரியா. மஞ்சள் காமாலையின் வித்துக்கள். அதிர்ச்சி அடையத் தேவையில்லை. நீரில் இவை இருக்கும் அளவு அதிர்ஷ்டவசமாக

"ஐயோ க்ளோசா?"

"எல்லா வியாதிகளும் க்ளோஸ். இது சர்வரோக நிவாரணி."

அதற்குள் அங்கே பி.ஆர்.ஓ. வருகிறார்.

"இங்க எங்க வந்த நீ?" மிரட்டினார். மெதுவாக விவரத்தை எடுத்துச் சொன்னான். எம்.டி. அனுப்பினார் என்றதும் கொஞ்சம் சாந்தமானார். தன் பங்கிற்கு, "நம்ம குடிநீரோட மகத்துவத்தை அறியாதவங்க அதைக் காய்ச்சி, வடிகட்டி, சுத்திகரிப்பு செஞ்சு மருத்துவத் தன்மையை அழிச்சிடறாங்க. வேறு சிலர் குடிக்க மட்டும் பாட்டில்ல, கேன்ல தண்ணி வாங்கறாங்க. இவங்களுக்குத்தான் சகிப்புத்தன்மை, எதிர்ப்புத் தன்மை, தடுப்புத் தன்மை எல்லாம் குறைஞ்சு பல நோய்கள் வருது."

இவர்கள் அனைவரும் தாக்கிய தாக்கலில் கிருஷ்ணன் ஸ்டில்லானான். அந் நேரம் பார்த்து உலக வங்கி பிரதிநிதிகளுடன் பொதுப் பணித்துறை அமைச்சரும் சுகாதார அமைச்சரும் வந்தார்கள். குழப்பத்தில் இடம், பொருள், ஏவல் பார்க்காமல் கிருஷ்ணன் அமைச்சரிடமே புகாரை வைத்தான். அவரும் தேர்தல் வெற்றி சந்தோஷத்தில் கோபப்படாமல், "நீ மக்களோட பிரதிநிதி. உனக்குப் பதில் சொல்ல நான் கடமைப்பட்டிருக்கேன். நம்ம குடிநீரோட மருத்துவத் தன்மையை உனக்கு சொல்லிட்டாங்க. இப்ப நான் ஒரு ரகசியத்தை உனக்குச் சொல்லப் போறேன். இந்தத் தண்ணீரை அமெரிக்காவில் நீர்மேனியா யுனிவர்சிட்டி விஞ்ஞானிகள் பரிசோதனை செய்தார்கள். எய்ட்ஸை குணப்படுத்தற சக்தி இதுல இருக்கிறதா அவங்க சந்தேகப் படறாங்க. இது மட்டும் நிரூபணமாகி விட்டால் அரபுநாடுகளுக்கு எப்படி எண்ணெய்க் கிணறோ, அப்படி நமக்கு மெட்ரோ வாட்டர்னு ஆகிவிடும். அப்புறம் எந்தச் சந்தர்ப்பத்திலேயும் நாம அமெரிக்காகிட்ட கையேந்த அவசியமில்லை" என்று உலக வங்கி பிரதிநிதிகளைக் காட்டினார். மற்றவர்களே மேல் என்று நினைத்தாலும் அமைச்சர் அமைச்சர்தான் எனப்பட்டது கிருஷ்ணனுக்கு. அவர் தொடர்ந்தார் : "அதனால மக்களுக்கு நான் சொல்ல வருவது இதுதான். நூறு ஆண்டு காலம் நோய் நொடியின்றித் திடமாக வாழ மெட்ரோ வாட்டரை அப்படியே குடியுங்கள்!"

**செப்டெம்பர் 30ம் தேதி அதிகாலை 2.10 மணிக்கு மேலகிருஷ்ணன்புதூரில் உள்ள சர்ச்சை அடையாளம் தெரியாத சிலர் தீக்கிரையாக்கி விட்டனர். இது பற்றிச் சென்ற இதழிலேயே நாம் எழுதியிருந்தோம். இப்போது இந்தச் சர்ச்சுக்குப் பின்னால் உள்ள கதை என்ன என்பதை முழுமையாக ஆராய்ந்தோம்.**

ஆசிரியராக வேலை பார்த்து வந்த ஞானமுத்து, வேதமுத்து உட்பட நான்கு பேர் கொண்ட குழு ஒன்று (22.11.79ம் தேதி) இந்தச் சர்ச்சை ஓலைக் கூரை கொண்டதாகக் கட்டி வழிபாடு செய்ய ஆரம்பித்தனர். மேலக்கிருஷ்ணன்புதூரில் மிகக் குறைந்த அளவே கிறிஸ்துவக் குடும்பங்கள் என்பதால் அதற்கு முன்பு வரை அடுத்த ஸ்டாப்பில் இருந்த சீயோன்புரம் சர்ச்சில் தான் வழிபட்டு வந்தார்கள். ஏறக்குறைய 23 குடும்பங்களாக கிறிஸ்துவர்கள் வளர்ந்த பின்னால் தங்களுக்கென்று தனி தேவாலயம் இருந்தால் நல்லது என்றெண்ணி இந்தச் சர்ச்சை உருவாக்கி வழிபட்டனர்.

1984ம் வருடம் இந்தச் சர்ச்சுக்கு நிரந்தரக் கட்டடக் கட்டுமானப் பணி தொடங்கப்பட்டபோது இவர்களுடைய சர்ச்சுக்கு எதிரில் இருந்த ராஜகோபாலன் என்பவர் கட்டக்கூடாது என்று ஸ்டே ஆர்டர் வாங்கினார். இதுதான் இந்தப் பிரச்னைக்கான விதையாக விழுந்து இப்போது விருட்சமாகிக் கொழுந்து விட்டு எரிந்துவிட்டது!

ஸ்டே ஆர்டர் வாங்கிய ராஜகோபாலன் தி.மு.க., விஷ்வ இந்து பரிஷத் என்று பல கட்சிகளில் இருந்துவிட்டு இப்போது ஆர்.எஸ்.எஸ்.சில் தீவிரமாக இருப்பதாகச் சொல்லும் ஊர்க்காரர்கள், இவரைப் பற்றி பேசவே பயப்படுகிறார்கள். "சார் இதை எழுதிடாதீங்க" என்று தயங்கியபடியேதான் பேசினார்கள். ராஜகோபாலின் தந்தை கிறிஸ்துவர்களிடம் மிகவும் நல்லபடியாகப் பழகுவாராம். அதனால்தான் பேரனுக்கு 'டென்னிஸன்' என்ற பெயராம்! ராஜகோபாலன் வீட்டுக் காம்பவுண்ட்டுக்குள் ஒரு கிருஷ்ணன் படம் கொண்ட கோயில் உள்ளது. வெள்ளிக்கிழமை, ஞாயிற்றுக் கிழமைகளில் ஸ்பீக்கர் வைத்துப் பாடல்கள் போடுவாராம். இது ஞாயிற்றுக்கிழமை ஆராதனைக் கூட்டங்கள் நடத்திய கிறிஸ்துவர்களுக்கு இடைஞ்சலாக இருக்கவே, போலீ



• எரிக்கப்பட்ட சர்ச்

ஸில் புகார் செய்திருக்கிறார்கள் கிறிஸ்துவர்கள். பிறகு புகைச்சல் லேசாக எரிய ஆரம்பித்தது.

"எரிந்தது சர்ச்சே இல்லை. பாலர் பள்ளி தான்" என்று மக்கள் நலப் பணியாளர் சங்கத்தில் உள்ள ராஜகோபாலனின் பையன் டென்னிஸனும் கிருஷ்ண மணிகண்டனும் சொல்கிறார்கள். "சி.பி.சி.ஐ.டி விசாரணை செய்து, குற்றம் செய்தவர்கள் யாராக இருந்தாலும் அவர்களுக்குத் தண்டனை தர வேண்டும் என்பதுதான் எங்கள் விருப்பமும்!" என்கிறார்கள் இவர்கள்.

• திலக்

இப்போது இந்தச் சர்ச்சின் செயலாளராக உள்ள ஞானமுத்துவின் தம்பி செல்வமணி, இது சர்ச் அல்ல; பாலர் பள்ளி தான் என்று இந்துக்கள் தரப்பில் சொல்லப்படுவதை மறுக்கிறார். "இந்தச் சர்ச்சை கன்னியாகுமரி டயோசிஸ் பிஷப் தலைமையில், கன்னியாகுமரி சி.எஸ்.ஐ டயோசிஸ் செயலாளர் தர்மராஜ் 22.11.79 அன்று திறந்து வைத்ததிலிருந்து வழிபாடு நடத்திக்கிட்டு வர்றோம். இது சி.எஸ்.ஐ. சர்ச் தான் என்பதற்கான கலெக்டரின் சான்று, கிறிஸ்து ஊழியம் செய்யறதுக்கு எஸ்.பி கொடுத்த அனுமதி, கோர்ட் ஜட்ஜ்மெண்ட்டுன்னு பல ஆதாரங்கள் இருக்கு. பாலர் பள்ளி பழைய பஞ்சாயத்து ஆபீஸ் பக்கத்தில இருந்துச்சு. அதுதான் அப்புறம் சத்துணவுக்கூடமாக மாறிச்சு. இந்தப் பாலர் பள்ளியில எங்க அண்ணிதான் டீச்சரா வேலை செஞ்சாங்க. அப்புறம் அண்ணன் ஞானமுத்து இறந்ததுக்கப்புறம் அரசாங்க வேலைக்குப் போயிட்டாங்க. எங்க சர்ச்சுக்குப் பஞ்சாயத்துக் கதவு நம்பர்கூட இருக்கு. இங்க இந்து – கிறிஸ்துவர் சண்டையெல்லாம் கிடையாது. எங்க கல்யாணத்துக்கு அவங்களும் அவங்க கல்யாணத்துக்கு நாங்களும் இன்னமும் போயிட்டு வந்துக்கிட்டுத்தான் இருக்கோம்" என்றார்.

• ஆர். செல்வமணி

புதிய வழிபாட்டுத் தலங்கள் – கோயில், சர்ச், மசூதி என்று எது கட்ட வேண்டும் என்றாலும் கலெக்டரின் அனுமதி வேண்டும் என்று மண்டைக்காடு கலவரத்திற்குப் பின்னால் முடிவு எடுக்கப்பட்டது. இந்தச் சர்ச்சோ 1979ல் தொடங்கி 1980 அடிக்கல் நாட்டப்பட்டு விட்டது. எனவே 1982ம் ஆண்டு பிறப்பிக்கப்பட்ட 'புதிய வழிபாட்டுத் தலங்கள் அமைக்கக் கூடாது' என்ற சட்டம் இந்தச் சர்ச்சுக்குப் பொருந்தாது. எனினும் 23 குடும்பங்களே இங்கு வாழ்வதால் ஓலை சர்ச்சே போதும் என்று அப்போதைய கலெக்டர் விஸ்வநாத் செகன்கோர் சொல்லி விட்டார். எனவே புதிய கலெக்டர் பாண்டியன் வந்ததும் பேராயர் மூலம் மீண்டும் கட்டடம் கட்டுவதற்கான அனுமதி கேட்டு அந்த ஃபைல் கலெக்டரிடம் போயிருக்கிறது. இந்தச் சமயத்தில் தான் செப்டெம்பர் 30ம் தேதி அதிகாலை 2.10 மணிக்கு எரிந்து போய்விட்டது சர்ச்.

மூந்நூறு குடும்பங்கள் உள்ள மேலக் கிருஷ்ணன்புதூரில் 23 குடும்பங்களே கிறிஸ்துவக் குடும்பங்கள். கிறிஸ்துவர்களிடமும், இந்துக்களிடமும் சர்ச் எரிந்தது பற்றிக் கேட்டால் ஊரைப் போலவே 'அமைதி' காக்கிறார்கள். 'பாலர் பள்ளியில் பைபிள், ஸ்பீக்கர்கள், ஞாயிற்றுக்கிழமை ஆராதனைக் கூட்டம் நடக்குமா?' என்று கேட்கிறார்கள் கிறிஸ்துவர்கள். ரஜினி ரசிகர் மன்றத் தலைவர் ரவிச்சந்திரன், "எங்கள் தலைவர் சொல்றதைத்தான் நானும் சொல்றேன். தப்புச் செய்பவன் எல்லாம் தண்டிக்கப் படணும், சிறுபான்மையினரை பெரும்பான்மையினர்தான் காப்பாற்றணும்; காலை வாரக் கூடாது" என்றார்.

பஞ்சாயத்துத் தலைவர் அம்புஜம் செய்தியாளர்களிடம் பேசுவதைத் தவிர்க்க உண்மையிலேயே சினிமா மாதிரி ஓடி ஒளிந்துகொண்டார் (வைக்கோல் பரப்பின் மீது ஏறி ஓடினார்). அம்புஜத்தின் கணவர் ஆறுமுகக் கண் ஒரு வார்டு மெம்பர். "நாங்க இரண்டு தரப்புக்கும் பொதுவானவங்க!" என்று நழுவிக் கொண்டார். இவர்களுடைய மகன்

"சர்ச்"சை...

## 2½ KG கதை

உதவி ஆசிரியர்: இந்த எழுத்தாளர் ரொம்ப நொந்துபோய் கடிதம் எழுதியிருப்பார்னு தோணுது சார்?

பத்திரிகை ஆசிரியர்: என்ன விஷயம்?

உதவி ஆசிரியர்: 8 — குயர் பேப்பர் வாங்கி 384 பக்கத்துக்கு 4 மாதம் மெனக் கெட்டு எழுதி அனுப்பிய என் இரண்டரை கிலோ கதையின் நிலை என்னன்னு கேட்டு எழுதியிருக்கார் சார்!

— சீர்காழி ரேவதி

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

இலக் நம்மிடம், "இந்தக் காரியத்தை வெளியில இருந்து வந்து செஞ்சிருப்பாங்கன்னு எல்லாம் சொல்ல மாட்டேன். உள்ளூர்ல நடந்திருப்பதால் இது உள்ளூர்க்காரங்க வேலைதான். அது யாருன்னு கண்டுபிடிச்சுட்டா, அது யாரா இருந்தாலும் கண்டிப்பா தண்டிக்கப்படணும். இனிமே இது போன்ற பிரச்னை ஊரில வரக்கூடாதுங்கறதுதான் வளர்ந்து கொண்டிருக்கிற எங்க மாதிரி இளைஞர்களோட சிந்தனை!" என்றார்.

இடையில் இந்துக்களின் தேரை கிறிஸ்துவ தெருவுக்குள் நுழைய விடாத சம்பவம் ஒன்றும் நடந்திருப்பதாக ஊர் மக்கள் சிலர் சொன்னார்கள். இந்தப் பிரச்னைக்குத் தீர்வு காண அக்டோபர் 9ம் தேதி செல்வமணி, ராஜகோபாலன் உட்பட 20 பேர் கொண்ட இந்து, கிறிஸ்துவ பிரதிநிதிகளின் கூட்டத்தைப் பத்திரிகையாளர்களுக்கு அழைப்பில்லாமல் மிக ரகசியமாக கலெக்டர் பாண்டியன் கூட்டியிருந்தார். செய்தியறிந்து நாம் சென்றபோது ஏ.பி.ஆர்.ஓ. இது கிறிஸ்துவ-இந்து பிரதிநிதிகளுக்கான கூட்டம் என்று சொல்லி நம்மை வெளிநடப்புச் செய்ய வைத்தார்.

சி.எஸ்.ஐ.பிஷப் எம்.ஐ. கேசரி, "இந்த விஷயத்தில் கன்னியாகுமரி மாவட்ட கலெக்டர் குழப்பமான அறிக்கை வெளியிடுகிறார். ஆலயத்தை உடனே கட்டுவதற்கு சம்பந்தப்பட்ட திருச்சபைத் தலைவரை அணுகி, விரைவில் செய்து முடிக்க வேண்டுமென்று கலெக்டருக்கு முதல்வர் ஆணையிட்டுள்ளார். ஆனால் கலெக்டரோ சர்ச் கட்டுவதா? வேண்டாமா? என்பதற்கான கூட்டத்தைக் கூட்டியுள்ளார்!" என்று சொன்னார்.

எப்படியோ, இந்த இதழ் அச்சேறும் நேரத்தில் பேச்சு வார்த்தைகள் சுமுகமாக முடிந்து, எரிந்துபோன சர்ச்சை அதே இடத்தில், அதே நீள அகல உயரத்தில் கட்டிக் கொள்ளலாம். மேற்கூரை ஆஸ்பெஸ்டாஸ் கூரையாகத்தான் இருக்க வேண்டும். ஞாயிற்றுக்கிழமைகளில் ஒலிபெருக்கி வைத்து வழிபாடு நடத்திக் கொள்ளலாம். மற்ற நாட்களில் ஒலிபெருக்கியில்லாமல் பிரார்த்தனை செய்யலாம் என்று முடிவெடுக்கப்பட்டுள்ளது.

இது குறித்து இரு தரப்பிலும் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள் என்பது நமக்கும் மகிழ்ச்சியாக இருக்கிறது.

— 'வியூஸ் நியூஸ்' மணி

படங்கள்: எம். பாலமுருகன்

## சாக்லேட் பாரில் குளிக்கலாம்!




இப்போது ஜப்பானில் தயாரிக்கப்படும் சோப்புகள், உடலைத் தேய்த்துக் குளிப்பதற்கான நுரைப் பஞ்சுகள் போன்றவை, சாப்பிடுகிற ஐட்டங்களின் வாசனைகளுடன் தயாரிக்கப்படுகின்றன. சோப்புகள் சாக்லேட் வாசனையடிப்பதோடு, சாக்லேட் பார்களைப் போலவும் இருக்கின்றன. நுரைப் பஞ்சுகள் பிரெட் துண்டுகளைப் போல இருக்கின்றன. இவற்றை மறந்து போய் டைனிங் டேபிளில் வைத்து விட்டால் வித்தியாசம் தெரியாமல் சாப்பிட்டு விடுவார்கள். ஜப்பானியர்களிடம் இதற்கு ஏக கிராக்கியாம்!

— எஸ்.ஆர்.

# முழுமையான பாதுகாப்பு



பவர்ஃபின் நிதி நிறுவனத்தில் நீங்கள் முதலீடு செய்யும்போது, அரசு நிதி நிறுவனத்தின் 100% உறுதியான பாதுகாப்பை நீங்கள் பெறுகிறீர்கள். அதுமட்டுமன்றி, வளர்ச்சிமிக்க துறைகளில் ஒன்றான மின்துறையில் நீங்கள் முதலீடு செய்வதால் பெரும் பலனையே எப்போதும் பெறுவீர்கள் என்பது உறுதி.

| | |
|---|---|
| **13.14%** | மூன்று ஆண்டுகள் மற்றும் அதற்கு கூடுதலான காலத்திற்கு மாதாந்திர வட்டி 13%. பனிரெண்டு மாதங்கள் மற்றும் ஒரு நாளுக்கு 12.12%. இருபத்தைந்துக்கு மாதங்களுக்கு 12.63% காலாண்டு வட்டி. |
| **18.18%** | அறுபது மாதங்களுக்கு (மாதாந்திர கூட்டுவட்டி ஆண்டுக்கு 13%) |

■ முறையான வட்டி வழங்கும் திட்டத்திற்கான (RIPS) குறைந்தபட்ச வைப்பீட்டுத் தொகை ரூ. 10,000/- மற்றும் ரூ. 1,000/-ன் மடங்குகளில். ■ திரள் வட்டி வழங்கும் திட்டத்திற்கான (CIPS-1) குறைந்தபட்ச வைப்பீட்டுத் தொகை ரூ. 5,000/- மற்றும் ரூ. 1/- ன் மடங்குகளில். ■ வட்டி மாதாந்திர அடிப்படையில் கூட்டப்படும். ■ வட்டிக்கான காசோலைகள் இந்தியாவில் உள்ள குறிப்பிட்ட பாரத ஸ்டேட் வங்கிக் கிளைகளில் சமத்தொகையில் மாற்றத்தக்க விதத்தில் வழங்கப்படும். ■ வைப்பீட்டின் மீது தரகர் கூலி வழங்கப்பட மாட்டாது. ■ இந்நிறுவனம் வங்கிப்பணி சாராத நிதி நிறுவனமாக ரிசர்வ் வங்கியில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதன் பதிவு எண் : 07. 00389 ஆகும். ■ முழுமையான பாதுகாப்பிற்கு CRISIL வழங்கியுள்ள FA+ மதிப்பீடு.




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : எண் 84, டி.டி.கே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.

தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894

மின் அஞ்சல் : powerfin@md3.vsnl.net.in

DIPR 1302 DISPLAY 99

28-9-99 தேதியிட்ட 'எகனாமிக் டைம்ஸ்' இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது

**1999 - தீண்டாமை ஒழிப்பு, மத நல்லிணக்கம் மற்றும் சமூக ஒற்றுமை ஆண்டு.**

# "சுற்றுலாகூட அர்த்தமுள்ளதாக இருக்கணும்!"



• ஷர்மிளா



• ஜெயந்தி

• அனிதா வில்சன்

அன்னை தெரசா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த அந்த நான்கு மாணவிகளும் பேசவும், கேள்விகள் தயார் செய்யவும் தேர்ந்தெடுத்த தலைப்பு 'சேவை' (என்ன பொருத்தம்!)

**சுஷ்மா** : நம்ம காலேஜிலே 'கெஸ்ட் லெக்சர்' கொடுத்த மலர்க்கொடி சுகுமாரன் சொன்ன ஒரு விஷயம் டச்சிங்கா இருந்தது. ஒவ்வொரு வருடமும் திருவண்ணாமலைக்கு அருகே இருக்கும் கிராமங்களிலே பத்து நாட்கள் தங்கி அங்கே உள்ள மக்களுக்குச் சுகாதாரம் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தறாங்களாம். கல்லூரிகளிலும் இதுமாதிரி அர்த்தம் மிக்க சுற்றுலாக்களை ஏற்பாடு செய்தா நல்லாயிருக்கும்.

**அனிதா வில்சன்** : எனக்கென்னவோ இப்படி மொத்தமாகவோ, அமைப்பாகவோ செயல்படுவதை விட, தனிப்பட்ட முறையில் சர்வீஸ் செய்வதுதான் சிறந்ததுன்னு தோணுது... கண் தானம், ரத்ததானம்... இந்த மாதிரி.

**ஷர்மிளா** : மாணவப் பருவத்தில் சேவைன்றது ஸ்கௌட்ஸ், என்.எஸ்.எஸ். மாதிரி இயக்கங்களில் சேர்ந்து செயல்படுவதாக இருந்தால் நல்லது.

**ஜெயந்தி** : சமூக சேவை இருக்கட்டும். அரசு நிறுவனங்களெல்லாம் நிர்ணயிக்கப்பட்ட காசை மட்டுமே வாங்கிக்கிட்டு உரிய சேவை செய்தாலே நல்லாயிருக்கும்.

**சுஷ்மா** : எனக்குத் தெரிஞ்சு ஹைதராபாதிலே ஒரு அம்மா



• சுஷ்மா

தனக்குத் தெரிஞ்ச எல்லாருடைய ஜாதகங்களையும் வாங்கி, திருமணமாகறதுக்கு உதவறாங்க. இலவசமாகத்தான். இது கூட ஒரு நல்ல சேவைன்னுதான் தோணுது.

அனிதா : பேப்பரிலே படிச்சேன் – ஒரு லேடி 'காரீர் கவுன்சிலிங்' பண்றாங்களாம். தொலைபேசியில் கூடத் தகவல் பெறலாமாம்.

ஜெயந்தி : 'ஸ்நேகா' மாதிரி நிறுவனங்கள் பல தற்கொலைகளைத் தடுத்திருக்கே. இது மிகப் பெரிய சேவையாச்சே.

ஷர்மிளா : என்னைப் பொறுத்தவரை கிராம மக்களின் திறமைகளை வெளிக்கொண்டு வருமாறு செய்யணும்னு ஆசை.

ஜெயந்தி : 'குழந்தைத் தொழிலாளர்களின் நிலை' மாதிரி சிறு படங்கள் எடுக்கணும்கிறது என் விருப்பம்.

சுஷ்மா : ஆசிரியப் பணியில் ஈடுபட்டு நல்லா சேவை செய்யப் பிரியம் எனக்கு.

அனிதா : ப்ளூ க்ராஸ் அமைப்பிலே தீவிர உறுப்பினராகும் எண்ணம் இருக்கு எனக்கு.

அருகே உள்ள கூப்பனில் கேள்விகளும் நீங்கள் 'டிக்' செய்து தேர்ந்தெடுக்க வேண்டிய பதில்கள் அடங்கிய தொகுப்பும் உள்ளன. அத்தனை கேள்விகளுக்கும் சரியான விடையை 'டிக்' செய்பவருக்கு ரூ. 200 பரிசு. பலர் செய்து விட்டால் குலுக்கல். ஜெராக்ஸ் கூப்பன் செல்லாது என்பதும் ஆசிரியர் தீர்ப்பே இறுதி என்பதும் தெரிந்த விஷயம்தானே?

கடைசி தேதி : 1.11.99

— ஜி.எஸ்.எஸ்.

படங்கள் : வெங்கடேஷ்

## குவிஸ் கூப்பன் – 12

1. எந்த யுத்தத்திலும் எந்த அரசும் யுத்த களத்தில் அனுமதிக்கும் சேவை நிறுவனம் எது?

☐ செஞ்சிலுவைச் சங்கம்

☐ யுனெஸ்கோ

☐ சமரச சன்மார்க்க சங்கம்

2. சமூக சேவையிலும் புகழ்பெற்றுள்ள இந்திப்பட நடிகை யார்?

☐ மனீஷா கொய்ராலா

☐ ஷபானா ஆஸ்மி ☐ ஷர்மிளா டாகூர்.

3. நர்மதா அணைக்கட்டு திட்டத்தை எதிர்த்துக் குரல்கொடுக்கும் அமைப்பைச் சேர்ந்த பெண்மணி யார்?

☐ மம்தா பானர்ஜி ☐ மேதா பட்கர்

☐ சுஷ்மா ஸ்வராஜ்

4. மிருகங்களைப் பாதுகாப்பதையும், பரிவு காட்டுவதையும் முக்கியக் குறிக்கோளாகக் கொண்ட இயக்கம் எது?

☐ ரெட் கிரஸென்ட்

☐ ஸ்வீடிஷ் அகாடமி ☐ ப்ளூக்ராஸ்

5. அன்னை தெரசா நம் நாட்டில் சேவை செய்யத் தேர்ந்தெடுத்துத் தங்கிய இடம் எது?

☐ கல்கத்தா ☐ பாட்னா ☐ சூரத்

6. சமீபத்திய அமைச்சரவையில் எந்தத் துறைக்கு மேனகா காந்தி பொறுப்பேற்றிருக்கிறார்?

☐ சமூகநீதி

☐ மாற்று எரிசக்தி ☐ நகர்ப்புற வளர்ச்சி

7. உதவும் கரங்கள், பான்யன் ஆகிய அமைப்புகள் உள்ள நகரம் எது?

☐ மதுரை ☐ கோவை ☐ சென்னை

8. சமூக சேவை செய்யும் இளைஞனாக கமலஹாசன் தோன்றிய படம் எது?

☐ பட்டாம்பூச்சி

☐ நினைத்தாலே இனிக்கும்

☐ உன்னால் முடியும் தம்பி.

பெயர்: ..........

முகவரி: ..........

..........

..........



• சஞ்சய்



• ரவிகிரண்

# வித்வான் விருப்பம்

சஞ்சய் சுப்ரமண்யன் கச்சேரி செய்துகொண்டிருந்தார். சென்னை, ராககதா அரங்கில், பார்வையாளர்களிடையே இன்னொரு நட்சத்திர வித்வான்-சித்ரவீணை ரவிகிரண்!

கச்சேரியின் நடுவே ரவிகிரணிடமிருந்து 'சீட்டு' போகிறது மேடைக்கு.

'அட! நேயர் விருப்பமா...?' என்று பார்த்தால், வந்தது அறிவிப்பு- சஞ்சய்யின் விருப்பத்தைப் பூர்த்தி செய்திருக்கிறார் ரவிகிரண் என்று!

சீட்டில் எழுதப்பட்டிருந்தது நாராயண கௌளை ராகத்தில் ரவிகிரண் இயற்றிய கீர்த்தனை! பின்னணி இதுதான்:

விநாயக சதுர்த்தியன்று ஒய்.ஏ.சி.எம். அமைப்பு தனது ஆண்டு விழாவையொட்டி ஒரு சிறப்பு நிகழ்ச்சி ஏற்பாடு செய்தது.

கீர்த்தனைகளை இயற்றும் வாக்கேயக்காரர்கள் (அதாவது மெட்டுடன் பாடல் வரிகளைச் சேர்த்து இயற்றுவோர்) தங்கள் கற்பனை, சிந்தனை எப்படி எப்படி செயல்படுகிறது என விளக்கும் சிறப்பு நிகழ்ச்சி.

இந்த நிகழ்ச்சியின்போது ரவிகிரண் மேடையிலும் சஞ்சய் பார்வையாளரிடையேயும் இருக்க, "நாராயண கௌளை ராகத்தில் நீங்கள் கம்போஸ் செய்ததுண்டா?" என்று கேள்வி கேட்டிருக்கிறார் சஞ்சய்.

நாராயண கௌளை கொஞ்சம் செப்பிடு வித்தை ராகம். அப்படி இப்படி அசைந்தால் கேதாரகௌளையிலோ காபி நாராயணியிலோ விழ வைத்துவிடும். இதனால்தானோ என்னவோ இந்த ராகத்தில் அதிக கிருதிகள் கிடையாது.

ஆனால் சஞ்சய்யின் சவாலை ஏற்கத் தயாரானார் ரவிகிரண்:

"இதுவரை இயற்றியதில்லை. ஆனால் நீங்கள் பாடுவதானால் இயற்றுகிறேன்..." என்றவர், மறுநாள் கார் ஓட்டிய படியே கற்பனைக் குதிரையையும் தட்டி விட்டிருக்கிறார்: "நீ சரியெவ்வருன்னாருரா...?" என்ற பல்லவியும் அனுபல்லவியும் சிக்கிவிட்டன. வீட்டுக்குப் போனதும் அன்று மாலை சஞ்சய் கச்சேரி இருப்பது தெரியவர, சரணத்தையும் முடித்து எழுதி எடுத்துக்கொண்டு போய்க் கொடுத்திருக்கிறார்.

"ரவிகிரணின் படைப்பு கச்சேரி மேடைக்கு ஏற்ற கச்சிதத்துடன் இருக்கிறது" என்று கூறும் சஞ்சய், அதை இன்னும் அரங்கேற்றவில்லை. (டிசம்பர் சீசனில் எதிர்பார்க்கலாமோ?)

விநாயக சதுர்த்தியன்று மற்றொரு கீர்த்தனைக்கும் பிள்ளையார் சுழி போடப்பட்டது. நாராயண கௌளையுடன் சஞ்சய் குறிப்பிட்ட இன்னொரு கஷ்டமான ராகம் 'பலஹம்ஸ'. இந்த ராகத்திலும் பாட்டு இயற்றிவிட்டார் ரவிகிரண். இந்த இதழ் அச்சேறும் சமயம் அந்தக் கீர்த்தனையும் அரங்கேறிவிடும்- பத்மா சேஷாத்ரி பள்ளி நடத்தும் பாரத் கலாசார் அமைப்பில். இங்கே வாய்ப்பாட்டுக் கச்சேரி செய்யப் போகிறார் சித்ரவீணை ரவிகிரண்! 'பலஹம்ஸ' பாடலின் முதல் வரி 'மறைமுகமாக சோதிப்பது தகுமோ?' கேள்வி ராமனை நோக்கிக் கேட்கப்படுகிறது!

— டி.என். சித்ரா



• பிஜு தாமஸ்



• ரமேஷ்

**கடந்த மாதம் 21–ந் தேதி தைவானில் ஏற்பட்ட பயங்கர நிலநடுக்கம் அனைவருக்கும் நினைவிருக்கலாம். அதில் கிட்டத்தட்ட மூவாயிரம் பேர் மாண்டனர். பூகம்பம் நிகழ்ந்த அதே நாள் அதே இடத்தில் இருந்து தப்பி வந்த இந்தியர்கள் இருவர் கோவையைச் சேர்ந்தவர்கள். கோவை சிட்கோ தொழிற்பேட்டையில் மீன்வலைக்கு நைலான் நூல் உற்பத்தி செய்யும் நிறுவனம் ஒன்றின் இயக்குனர் பிஜு தாமஸ் மற்றும் அதன் மேலாளர் ரமேஷ் ஆகியோர்தான் அவர்கள். நெஞ்சை உறையச் செய்யும் அந்த நிலநடுக்க அனுபவத்தை இங்கே விவரிக்கின்றனர்...**

**நை**லான் இழைகளை தைவானின் 'சியாபி' என்கிற பகுதியில் உள்ள நிறுவனத்திலிருந்து தருவிப்பதுதான் எங்களுடைய வழக்கம். அதன்படி இம்முறையும் செப்டெம்பர் 15–ந் தேதி தைவான் சென்றிருந்தோம். தொடர்ந்து ஐந்து நாள் எந்தப் பிரச்னையுமில்லை.

ஹோட்டலில் பன்னிரெண்டாவது மாடியில் எங்களுக்கான அறை. நிறைய அலைசல். மறுநாள் காலை ஏழு மணிக்குத்தான் ஃபிளைட். ஆறு மணிக்குப் புறப்பட்டாலே போதுமானது என்கிற அலட்சியம். ஏதோ கொஞ்சம் கிடைத்த பிரட்டைக் கொறித்துவிட்டு அசதி மிகுதியில் படுத்தவுடன் தூங்கிப் போய்விட்டோம். அவ்வளவுதான் எங்களுக்குத் தெரியும்.

ஏதோ உருளும் சப்தம். திடுக்கிட்டு விழித்தெழுந்தபோது ஒன்றிரண்டு நிமிஷம் ஒன்றுமே புரியவில்லை. ஒரே இருட்டு. எழுந்தால் யாரோ கீழே தள்ளி விட்ட பிரமை. தூரத்தில் வைத்திருந்த டீ.வி. பெட்டி என் கட்டிலில் விழ, அதிர்ந்து போனோம். ஸ்விட்சைத் தட்டுத் தடுமாறிப் பிடித்துத் தட்டினால் 'லைட்' எரியவில்லை. கரண்ட் கட். வெளியே ஓடி வந்தோம். அங்கும் இருட்டு. அங்கொன்றும் இங்கொன்றுமாக பதற்றத்தில் உருவங்கள்.

# ...தைவான்

மற்றவர்கள் பூகம்பம் என்றபோதுதான் எங்களுக்கே புரிந்தது. பன்னிரண்டாவது மாடியிலிருந்து கீழே போக வேண்டுமே. 'பவர்' இல்லாததால் 'லிப்ட்' வேலை செய்யவில்லை.

சில நிமிஷ நேரம்தான். கீழ்த்தளத்துக்குத் தகவல் தொடர்பும் இல்லை. படியில் இறங்கி

ஓடலாமா என யோசித்த வேளையில், தெய்வாதீனமாக இருந்த மூன்று 'லிப்ட்'களில் ஒன்று மட்டும் இயங்கியது. நில நடுக்கம் நிமிஷ நேரத்தில் நிகழ்ந்து மறைந்து விட்டாலும் உள்ளூர அந்தத் தளமே ஆடும் பிரமைதான் எங்களுக்கு. அடித்துப் பிடித்து 'லிப்டில்' கீழ்த்தளத்திற்கு வந்து விட்டோம். வந்த பின்புதான் எங்களுக்கு முன்பே பலரும் கீழ்த்தளத்திற்கு வந்து, வெட்ட வெளிக்கு (சாலையில்) ஓடி விட்டார்கள் என்பது தெரிந்தது.

நாங்கள் இருவரும் கையைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டு வீதிக்கு வந்தோம். ரோடுகளில் அவசர அவசரமாய் விரையும் வாகனங்கள். போலீஸ் ஜீப்புகள். அப்போது லேசான மழைத் தூறல். வெளியில் – மழையிலேயே கிட்டத்தட்ட ஒன்றரை மணி நேரம் நின்றிருந்தோம். அப்போதும் ஓர் ஆட்டம். பலரும் ஒருவருக்கொருவர் கட்டிக் கொண்டு நிலத்தில் உருண்டோம்.

**தை**வான் ஒரு தனித்தீவு. மொத்தமாகப் பார்த்தால் தமிழ் நாட்டை விட அளவிலும் ஜனத் தொகையிலும் சிறியது. அதிலும் நாங்கள் தங்கியிருந்த பகுதியில் சுத்தமாக மக்களே இல்லை. அங்கொன்றும் இங்கொன்றுமாய்த்தான் கட்டடங்கள். நாங்கள் இருந்த ஹோட்டலிலும் அதிகமாய் ஆட்கள் இல்லை. எல்லோரும் பெட்டி படுக்கையெல்லாம் விட்டு விட்டே ஓடி வந்திருந்தனர். இன்னும் சிலரோ இரவு உடையில். சட்டை கூடப் போடாமல். நாங்களும் எங்கள் சூட்கேஸ், பணம், பொருள், உடமைகள் எல்லாவற்றையும் அறையிலேயே விட்டு விட்டு வந்திருந்தோம்.

# "பூகம்பத்தில் சிக்கிக் கொண்டோம்!"

எனவே அறைக்குத் திரும்பிச் சென்றே ஆக வேண்டும். ஒருவாறாக அதிர்ச்சியிலிருந்து மீண்டு இரவு மூன்று மணிக்கு மேல் அறைக்குப் போனோம். 'இனி எதுவும் ஏற்பட வாய்ப்பில்லை; தைரியமாகத் தூங்குங்கள்' என தைரியம் கொடுத்தார்கள் விடுதிக்காரர்கள்.

இதற்கிடையில் தகவல் தொடர்புக் கோளாறுகளெல்லாம் சரியாகி விட்டது. காலை ஏழு மணிக்கான சிங்கப்பூர் ஃபிளைட், 'பத்து மணிக்குத்தான்' என்று ஏர்-போர்ட்டிலிருந்து தகவல் வர கொஞ்சம் கூடுதல் அயற்சி. தூங்கியும் தூங்காமலே அறையில் கிடந்தோம். கொஞ்சம் பயம் விலகிக் கண்ணயர்ந்த நேரம் திரும்பவும் கட்டடம் ஆடியது. இந்த முறை முன்பை விடக் கூடுதல்! அறையிலிருந்த பொருள்களெல்லாம் கீழே விழுந்து நொறுங்கின. அறையே இரண்டாகப் பிளப்பது போன்ற பிரமை. திரும்ப ஓட்டம். மணி காலை 6:30 என்றார்கள். சுமார் ஒன்றரை நிமிட நடுக்கம் ஒரு யுகம் போல் தெரிந்தது. இம்முறை, சென்ற முறை ஏற்பட்ட அதிர்ச்சியைக் காட்டிலும் கூடுதல் அச்சம்.

இரண்டாவது முறையும் சாலையிலேயே (ஓட்டல் சிப்பந்திகள் உட்பட) ஒன்றரை மணி நேரம் உட்கார்ந்திருந்தோம். அதன் பிறகு சற்றும் தாமதிக்கவில்லை. அறைக்குச் சென்று அவசர அவசரமாய்க் குளித்து பொருள்களைப் பெட்டியில் அள்ளிச் செருகிக் கொண்டு ஏர்போர்ட்டுக்கு விரைந்தோம். அங்கு இதுபற்றி துளியும் பேச்சில்லை. ஒரு வேளை அவர்களின் பாஷை எங்களுக்குப் புரியவில்லையோ? தெரியவில்லை. வீட்டிற்கு அங்கிருந்தே ஐஎஸ்.டியில் பேசி 'நாங்கள் பத்திரமாக' இருப்பதாகத் தகவல் சொன்னோம்.

பத்து மணிக்கு வருவதாக இருந்த ஃபிளைட் ஒரு மணிக்குத்தான் வந்து சேர்ந்தது.

சிங்கப்பூர் வந்து, அங்கிருந்து சென்னை வந்து சேர்ந்தபோது 22-ந் தேதி இரவாகி விட்டது. பிறகுதான் தைவானில் ஏற்பட்ட பூகம்பம் அங்கு கடந்த நூறு வருடத்தில் ஏற்பட்ட பூகம்பத்திலேயே 'மிகப் பெரியது' என்றும், அதில் இரண்டாயிரம் பேருக்கு மேல் இறந்தனர் என்றும் செய்தித்தாள்களில் படித்தோம்! பூகம்பத்தில் சிக்கியதை விட மிகப் பெரும் அதிர்ச்சியில் உறைந்து போனோம்.

— **கா.கு. வேலாயுதன்**

# போட்டிக்கதை – 9

அன்புள்ள அம்மாவுக்கு,

அநேக நமஸ்காரம். (வணக்கம் என்று தான் நான் எழுத நினைத்தேன். ஆனால் உனக்கு நமஸ்காரம் என்று எழுதினால் பிடிக்குமே என்று எழுதுகிறேன்.)

இது சம்பிரதாயமாக எழுதப்பட்ட வரிகள் இல்லையம்மா. நானாக, நானாக... உனது அருமைகளைப் புரிந்து கொள்கிறேன். உனது அண்மையில் இருந்தபோது எனக்கு



உறைக்கவில்லை. இதோ இந்த இமயத்தின் மடியில், குளிரில், கத கதப்பான தேனீரின் உதவியில் இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். நலம்... நலமா? என்ற சம்பிரதாய வார்த்தைகளை வெகுதூரம் தாண்டி வந்து விட்டோம். இப்போது இங்கு மணி என்ன தெரியுமா? காலை 11 மணி. 3 மணி வரை எனக்கு ஓய்வு. அதில்தான் உனக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறேன். இன்னும் சூரியனை நான் பார்க்கவில்லை. நம் ஊரில் விடியலில் வானம் வெளுத்துப் போகுமே. அப்படித்தான் இப்போது இருக்கின்றது. எனது 'டெண்ட்'டுக்கு வெளியே தலையை நீட்டிப் பார்த்தால் கண்களுக் கெட்டிய தூரம் வரை பனிக்குல்லாயும், பச்சை ஸ்வெட்டருமாய் மலைத் தொடர்கள். பச்சை தாவணிப் பெண்கள் பள்ளியில் பிரேயருக்கு வரிசையாய் நிற்பதைப் போல– யூகலிப்ட்ஸ் ஊசியிலை, பெயர் தெரியாத மரங்கள் வரிசையாக நிற்கின்றன. மலைப் பாதைகளில் பச்சை நிற 'மிலிடரி' ஜீப்புகளும் அவற்றின் மஞ்சள் விளக்குகளுமாய் இந்த இடம் அமர்க்களமாய் இருக்கிறது.

இந்நேரம் நீ அங்கு என்ன செய்து கொண்டிருப்பாய்? பள்ளிக்கூடத்தில் இருந்தால், இரண்டாவது பீரியடு முடிந்து ஸ்டாஃப் ரூமில் இருப்பாய். தாரிணி காலேஜுக்கும் வாசு கம்ப்யூட்டர் கிளாசுக்கும் போயிருப்பார்கள். என் குட்டிகள் இரண்டும் பள்ளிக்கூடத்தில் லூட்டி அடித்துக் கொண்டிருக்கும். புவனா வீட்டில் ஏதாவது புத்தகம் படித்துக் கொண்



# அன்புள்ள அம்மா

எஸ். வசந்தகுமார்

டிருப்பாள் (அவளுக்கு தனியாக கடிதம் எழுதியிருக்கிறேன்)

இன்னும் கொஞ்ச நாள் பொறுத்து உன்னையும், புவனா, குழந்தைகளையும் இங்கு அழைத்து வந்துவிடப் போகிறேன். நீதான் 'தாரிணி' கல்யாணம் முடியட்டும், வாசுவுக்கும் ஒரு வேலை கிடைக்கட்டும் என்று தள்ளித் தள்ளிப் போடுகிறாய்.

அது போகட்டும் இன்று என்ன சமையல்? புவனா கூட வர வர உன்னைப் போல் சமைக்க ஆரம்பித்து விட்டாள். சென்ற முறை நான் லீவில் வந்தபோது நிஜமாகவே அசந்து போனேன். இப்போது கூட அவளின் சமையல் வாசனை எனக்கு இங்கு அடிக்கிறது. அந்த வாசனைகளை வைத்துக் கொண்டுதான் இந்த ரொட்டித் துண்டுகளை உள்ளே தள்ள வேண்டும். எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. அம்மா, நீ என்னைச் சாப்பிட வா.. வா... என்று கரடியாய்க் கத்துவாய். நான் இரும்மா வரேன்.. வரேன் என்று சாப்பாட்டை அலட்சியப்படுத்திய காலம் அது. கொஞ்சம் கூடப் பொறுப்பில்லாமல் நண்பர்களோடு சேர்ந்து 'ராஜகோபால்'னான நான் 'சிரங்கத்து கோபால்' என்று திருச்சியை கலக்கிக் கொண்டிருந்த நேரம் அது. அப்போது கனவிலும் நினைத்ததில்லை. இதுபோல இமயத்தின் மடியில் தவமிருப்பேனென்று ஆனால் அப்போது கிடைக்காத ஞானம் இந்த இராணுவ தவத்தில் கிடைத்திருக்கிறது. என்னைப் போல ஆயிரக் கணக்கானவர்கள் இந்தக் கடுங்குளிரில் எல்லையில் தவமிருந்ததால் தான், அந்த சிரங்கத்து கோபால் திருச்சியில் ஆட்டம் போட முடிந்தது. இப்போது இது என் முறை. நாங்கள் எல்லையில் காவலிருக்க வேறு ஏதோ ஓர் ஊரில் இளைஞர்களின் உற்சாகம்.

ஆனாலும் அம்மா, நான் உன்னை அதிகமாகவே கஷ்டப்படுத்தி விட்டேன். அப்பா இறந்தபோது எனக்குப் பத்து வயது கூட ஆகவில்லை. வாசுவும் தாரிணியும் விவரம் புரியாதவர்கள். நீ குடும்ப பாரத்தைத் தனியாகத் தாங்கிக் கொண்டாய். நான் கொஞ்ச நாளில் பெரியவனாகி உனக்கு உதவியாய் இருப்பேன் என்று நினைத்திருப்பாய். ஆனால் என்ன செய்வதம்மா... ஆரம்பத்தில் அப்பாவை இழந்த சோகம் படிப்படியாய்க் குறைய, என்னைத் தட்டிக் கேட்க ஆளில்லை என்ற அசட்டுத்துணிச்சலும், அப்போது எனக்கிருந்த நண்பர்கள் கூட்டமும் எனது பொறுப்புகளை நான் உணர முடியாமல் செய்தன. அப்போது எவ்வளோ முறை என்னுடன் பேச, அறிவுரை கூற நீ முற்படுவாய். நான் அலட்சியமாக உன்னை ஒதுக்கிவிட்டு சென்ற நாட்கள் அவை.

இப்போது உன்னுடன் பேசத் துடித்துக் கொண்டிருக் கிறேனம்மா. தனியாக நீ அனுபவித்த துயரங்களையும், எங்

களை ஆளாக்க நீ பட்ட கஷ்டங்களையும் கேட்க ஆவலாய் உள்ளேனம்மா. உனக்கும் வயதாகிப் போய் மூக்கில் கண்ணாடி உட்கார்ந்து, தலைமுடிக்கு கறுப்பிலிருந்து சாம்பல் கலருக்கு 'பிரமோஷன்' கிடைத்து, அந்தத் துடிப்பும், சுறுசுறுப்பும் சற்றே குறைந்து, பொறுமையும், நிதானமும் குடிகொண்டு உனக்கு வயதானதை வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது.

சென்ற முறை விடுமுறையில் நான் வந்த போது என் பையன் உன்னிடம் அதிக ஒட்டுதலாய் இருப்பதைப் பார்த்து உண்மையிலேயே மகிழ்ந்து போனேன். நான் சிறு வயதில் செய்த குறும்புகளை உன் வழியாக அவன் கேட்டு அதை என்னிடம் சொல்லும் போது அவன் முகத்தில்தான் எவ்வளவு மகிழ்ச்சி. இவைகள்தான் நாம் எவ்வளவு தொலைவில் இருந்தாலும் நமது உள்ளங்களை நெருக்கத்தில் வைத்திருக்கின்றன. என்னைப் பற்றி நீ குழந்தைகளோடு பேசும்போது நான் அங்கு இருப்பதைப் போன்ற ஒரு 'பிரமையை' குழந்தைகளுக்கும் புவனாவுக்கும் நீ ஏற்படுத்திக் கொடுக்கிறாய் அம்மா. இவைகளையெல்லாம் நீ எங்கு கற்றாய் அம்மா? 'பள்ளிக்கூடத்தில் நீ டீச்சர்' என்பதாலேயே உன்னிடம் சற்றும் ஒட்டாமல் நான் விலகிப் போனேனோ?

இதோ என் நண்பர்கள் இருவரும் மதிய உணவை எடுத்து வருகின்றனர். இந்த 'டெண்ட்'டில் நாங்கள் ஐந்து பேர் மட்டுமே. இதைப் போல ஒரு பத்து 'டெண்ட்' பக்கத்திலேயே இருக்கும். நாங்கள் ஐம்பது பேரும் 'கார்கில்' போக வேண்டும். எங்களைப் போன்று ஏராளமான 'குரூப்'புகள் கார்கில், ட்ராஸ், பாட்டாலிக் போன்ற எல்லைப் பகுதிகளுக்கு பாதுகாப்பிற்காகப் போய்க் கொண்டிருக்கிறோம். பனிக்காலம் முடிந்து இப்போது தான் மறுபடியும் மலையேறத் துவங்கியிருக்கிறோம். என் கூடாரத்தில் இருவர் ஒரிசாவைச் சேர்ந்தவர்கள். ஒருவர் பஞ்சாபி, மற்றொருவர் உ.பி.யைச் சேர்ந்தவர். ஒரிசாக்காரர்கள் இன்னமும் தூங்கிக் கொண்டிருக்க, நான் உனக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருக்க, மற்ற இருவரும் இதோ உணவுப் பொட்டலத்துடன் வந்து கொண்டிருக்கிறார்கள். இந்தக் கடிதத்தை இத்துடன் முடித்துக் கொள்கிறேன். நேரம் கிடைக்கும்போது அடுத்த கடிதம் எழுதுகிறேன். அம்மாவுக்கு என் அனேக நமஸ்காரம்.

அன்புள்ள
ராஜகோபால்.

அன்புள்ள அம்மாவுக்கு,

அநேக நமஸ்காரம்.

சென்ற வாரம் கார்கிலுக்கு வரும் வழியில் கேம்ப்ஸ்டேயில் எழுதின கடிதத்திற்கும் இப்பொழுது எழுதுவதற்கும் நிறைய வேறுபாடு உள்ளது அம்மா. நாம் எதிர்பாராத ஒரு சம்பவம் நடந்துள்ளது. வழக்கமாக பனிக் காலங்களில் மலையிலிருந்து இறங்கி தரைப் பகுதிகளுக்கு வந்து விடுவோம். பின்னர் இப்போதைப் போல் பனியும், குளிரும் குறைந்த பிறகு மேலே (மேலே என்றால் கிட்டத்தட்ட பத்தாயிரம் அடி உயரம்) எல்லைக் காவலுக்குச் செல்வோம். நட்புக்கரம் நீட்டிய வேளையில் எதிரிகள் இந்தக் குளிர்காலத்தைப் பயன்படுத்திக் கொண்டு நாங்கள் இல்லாத நேரத்தில் ஏறத்தாழ ஏழு கிலோ மீட்டர் தீவிரவாதிகளுடன் வந்து பதுங்கிக் கொண்டனர். அந்த இடம் சற்று உயரம், நாம் இருப்பதோ சற்று இறக்கம். இதனால் மிக எளிதாக அவர்களால் எங்களது அசைவைக் கண்டுபிடிக்க முடியும்.

அவர்களை விரட்டி நம் இடத்தைப் பிடிப்பது எங்களுக்குப் பெரிய வேலையே அல்ல. எதிரிகளின் செயல்கள் போர் மூளும் அபாயத்தை ஏற்படுத்தியிருக்கின்றது. ஏராளமான துருப்புக்களை இங்கே குவித்துக் கொண்டிருக்கிறார்கள். படிக்கும் காலத்தில் சரித்திரப் பாடத்தில் போரைப் பற்றிப் படித்திருந்தாலும் ஒரு போர் வீரனாக நேரடியாகப் போரில் ஈடுபடுவது எவ்வளவு 'த்ரில்' தெரியுமா அம்மா.. நாங்கள் இங்கு மிகுந்த உற்சாகத்தோடு இருக்கின்றோம். பயிற்சிகள். பயிற்சிகள் என்று எப்போதும் தயாராய் இருந்த எங்களுக்கு பரீட்சைக் காலம் இது. இதோ குண்டுவெடிக்கும் சப்தமும் விமானத் தாக்குதலும் தொடங்கி விட்டது. என்னால் நீண்ட நேரம் கடிதம் எழுத முடியாது. ஒருவேளை இதுவே என் கடைசிக் கடிதமாகக் கூட இருக்கலாம். இங்கே யாருக்கும் மரணபயம் கிடையாதம்மா.. கிரிக்கெட்டில் ஒரு பேட்ஸ்மேனின் விக்கெட் போய்விட்டால் அடுத்த பேட்ஸ்மேன் வருவதில்லை, அதைப் போலத்தான். கிரிக்கெட் என்றதும் ஒரு மகிழ்ச்சியான செய்தி. இன்று நாங்கள் சந்தித்த நிருபர்கள் சொன்னார்கள் இந்தியா 'சூப்பர் சிக்ஸ'க்கு தகுதி பெற்றதாக... (உடனே நீ கோவிலுக்குப் போய் இந்தியா ஜெயிக்க வேண்டும்' என்று வேண்ட ஆரம்பித்திருப்பியே..) நீ கூட அடிக்கடி சொல்லுவாய் 'ஈசனிருக்குமிடம் இமயமலை' என்று. அதுதானோ என்னவோ தெரியவில்லை.

மனம் முழுக்க அமைதியாய் இருக்கின்றது. எந்தக் கவலையுமில்லாமல் முழுக்க முழுக்க வேலையிலும் எங்களுக்கு கொடுக்கப்பட்ட கட்டளைகளிலும் கவனமாக இருக்கின்றது. நம் முன்னோர்கள் நாட்டைக் காப்பதற்காக உயிரைத் தியாகம் செய்த மலை இது. இந்த மலைகளிலெல்லாம் அவர்களது ஆன்மாக்கள் எங்களை ஆசிர்வாதம் செய்து கொண்டிருக்கின்றன. நல்லது அம்மா. இதோ விமானத் தாக்குதல் தொடங்கி விட்டது. நாங்கள் கிளம்ப வேண்டிய நேரம் வந்து விட்டது. எங்களுக்குத் துணையாக அவைகள் மேலே பறந்து கொண்டு வழி அமைத்துக் கொடுக்கும்... முடிந்தால்... நான் உங்களை நேரில் சந்திக்கிறேன். நீயும், புவனாவும் எழுதிய கடிதங்கள் என் சட்டை பாக்கெட்டுக்குள் தான் இருக்கின்றன. திரும்பத் திரும்ப, அடுத்த கடிதம் வரும் வரை இவற்றைத்தான் படித்துக் கொண்டிருக்கிறேன். அடுத்த பிறவியென்று ஒன்று இருந்தால் மீண்டும் உனக்கு மகனாகப் பிறக்கவே ஆசைப்படுகிறேனம்மா.

அன்புள்ள,
ராஜகோபால்.

அன்புள்ள அம்மாவுக்கு,

அநேக நமஸ்காரம்... (இனிமேல் வணக்கம்தான்.)

இந்தக் கடிதம் என்னிடத்திலிருந்து எதிர்பார்த்திருக்க மாட்டாயம்மா. ஆமாம், நான் வாக எழுதுகிறேன். அண்ணனைப் போல் உன் அனுமதியுடன் ராணுவத்தில் சேர என்னால் முடியவில்லை. சென்னையில் ஒரு தேர்வு எழுதப் போவதாகச் சொல்லி விட்டுத்தான் நான் கிளம்பினேன். ஏர்போர்சில் தேர்வுபெற்று ஏர்மேன் ஆகத்தான் போகிறேன். எங்களுக்கு 'ஜலஹல்லி'யில் தான் டிரெயினிங். இப்போது போர் மூளும் அபாயம் இருப்பதால் அங்கிருந்து எங்களை எங்கு வேண்டுமானாலும் அழைத்துச் செல்வார்கள்.

அண்ணனின் ஒவ்வொரு கடிதம் வந்த போதும் நமது வீடு எவ்வளவு சந்தோஷப்படும் தெரியுமா? அண்ணனின் கடிதத்தை அப்பாவின் படத்திற்கடியில் வைத்துக் கும்பிட்டு விட்டுத்தான் நீங்கள் பிரித்துப் படிப்பீர்கள். அண்ணியின் முகம் அன்று மிகுந்த மகிழ்ச்சியாக இருக்கும். அண்ணனின் கடிதத்தில் அடிக்கடி வரும் அந்த இமயமலைத் தொடர்களின் மீது எனக்கு ஒரு காதல் இருந்தது உண்மை. பனிப் புகை மூடிய அந்த மலை மௌனமாக என்னை இருகரம் நீட்டி அழைத்துக் கொண்டேயிருந்தது. நீ சொல்வாயே அம்மா, "வாழ்க்கையில் ஒரு அர்த்தம் வேண்டுமென்று. அது அண்ணனின் வாழ்க்கையில் இருந்தது. இனிமேல் அவர் அண்ணி குழந்தைகளை அவர் கூட அழைத்துச் செல்லட்டும். தாரிணி கல்யாணத்தையும், உன்னையும் பார்த்துக் கொள்ள வேண்டியது என் பொறுப்பு. இதோ நாங்கள் கிளம்ப வேண்டிய வண்டி வந்து விட்டது. பின்னர் விளக்கமாக எழுதுகிறேன். அண்ணனை எப்படியாவது தொடர்பு கொண்டு இதுகுறித்துப் பேசுகிறேன்.

மறுபடியும் அநேக வணக்கங்கள்.

பிரியமுள்ள,
உன் வாசு.
வாசுதேவன்.



இப்போது கூட காஷ்மீர் பகுதியிலிருந்து திருச்சி ஸ்ரீரங்கத்திற்குக் கடிதம் வந்து கொண்டிருக்கின்றது.

திருமதி – சுசிலா சீனிவாசன்,

க/பெ. (காலஞ்சென்ற) கேப்டன் சீனிவாசன்,

ஸ்ரீரங்கம் – திருச்சி மாவட்டம்.

என்ற முகவரிக்கு...

ராஜகோபாலுக்கு பதில் – வாசுதேவன்.

வாசுவிடமிருந்து வரும் கடிதங்களை மாலைகளிட்ட ராணுவச் சீருடையில் உள்ள சீனிவாசன், ராஜகோபால் படங்களுக்குக் கீழே வைத்துக் கும்பிட்ட பிறகுதான் சுசிலா அம்மா கடிதத்தைப் பிரிக்கிறார்.

அன்புள்ள அம்மா அநேக வணக்கங்கள்... கடிதம் தொடர்கிறது.



• மனவள நிலையம்

• கால்களால் நீர் இறைக்கும் மிதிஏக்கி



# தமிழுக்கு ஒரு தவச்சாலை

'தமிழுக்குத் தொண்டு செய்வோன் சாவதில்லை' என்றார் பாரதிதாசன். தமிழ்பணி வேறு; தமிழ்த் தொண்டு வேறு. தமிழாசிரியர்களும் பேச்சாளர்களும்கூட தமிழ்ப்பணி ஆற்றுபவர்கள்தாம்! ஆனால் தமிழுக்குத் தொண்டு செய்வோர் என்று கணக்கிடத் தொடங்கினால் விரல்களின் எண்ணிக்கைக்குள் கூட ஆட்கள் கிடைப்பதரிது. இந்த அரிதானவர்களில் ஒருவர் தாம் புலவர் இளங்குமரனார். இவர் முன் சென்று, திருக்குறள் என்று சொன்னால் கன்னத்தில் போட்டுக் கொள்வார். இவருக்கு எல்லாமே திருக்குறள்தான். தமிழாசிரியர்

---

**நெடிய சிவந்த மேனி. எப்பொழுதும் தூய வெள்ளை ஆடை. இனிய முகம். கூப்பிய கைகளுடன் கனிவாக வரவேற்கும் இங்குமரனாரைச் சந்தித்துப் பேசினோம்...**

**"தமிழுக்குப் பணியாற்றும் முனைப்பில் வித்தியாசமான சிந்தனையுடன் இந்தத் தவச்சாலையை நிறுவும் எண்ணம் உங்களுக்கு எப்படி ஏற்பட்டது?"**

"தமிழைச் சொல்லப் பலபேர் உள்ளனர். ஆனால் தமிழை நிலை நிறுத்த எத்தனை பேர் இருக்கிறார்கள்? இந்தச் சிந்தனையில் பிறந்ததுதான் இந்த தவச்சாலை. மனிதன் வாழுங் காலத்தில் அவன் வாழ்க்கையின் ஒவ்வொரு கூறிலும் திருக்குறள் கருத்துக்களே உள்ளடங்கிக் கிடக்கின்றன. இந்த உண்மையை அறிவுறுத்தும் நோக்கம் இங்கே செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. குறள் ஒன்றையே ஓதி, அதன் கருத்துக்களை வாழ்க்கையோடு இணைத்துக் கொண்டு சிந்தித்தபோது இன்பமாக இருந்தது. யான் பெற்ற இந்த இன்பத்தை மற்றவர்களும் பெறலாமே என்ற எண்ணம் எனக்குத் தோன்றியது. மறைந்த என் மனைவியார் அளித்த அவர் குடும்பச் சொத்து, என் பிள்ளைகள் எனக்கு அளித்த பெருந் தொகை, அத்துடன் என் பணி ஓய்வுக் கொடையாகக் கிடைத்த பணம் இவற்றைக் கொண்டு இந்தத் தவச் சாலையை அமைத்தோம். இங்கு நடைபெறும் தமிழ்ப் பணிகளால் என் நெஞ்சம் நிறைவடைகிறது. பணி ஓய்வுக் காலத்தில் இதனினும் சிறந்த ஓர் இன்பம் இருப்பதாக எனக்குப்படவில்லை."

"வள்ளுவருக்குக் கோவில் கட்டியுள்ளீர்

பணி ஓய்வில் கிடைத்த பெருந் தொகையைப் பெற்றுக் கொண்டவுடன் நேராக வங்கிக்குச் சென்று தம் கணக்கில் அதை இருப்பு வைத்துக் கொண்டவரில்லை இளங்குமரனார். அந்தத் தொகை முழுவதையும் மடியில் கட்டிக் கொண்டு காவேரிக் கரையில் வந்து நின்றார். அழகான ஒரு தென்னந்தோப்பை விலைக்கு வாங்கினார். அங்கே தமது தமிழ்த் தொண்டுகள் தொடர, அமைதியான சூழல்களுடன் கூடிய ஒரு தவச் சாலையை உருவாக்கினார். அதுதான் திருவள்ளுவர் தவச்சாலை.

திருச்சி-கரூர் நெடுஞ்சாலையில் 10கி.மீ. தொலைவில் முக்கொம்பு செல்லும் வழியிலுள்ள அல்லூர் என்னும் அழகிய கிராமத்தில் அமைந்துள்ளது தமிழுக்கான இந்த தவச்சாலை. காவிரி ஆறு தவச்சாலையின் அரும்பணிகளுக்குச் சான்றாக ஒருபுறம் ஓடிக் கொண்டிருக்கிறது.

தவச்சாலை என்றவுடன் அங்குமிங்குமாகச் செவ்வாடை தரித்த துறவிகள் சென்று கொண்டிருப்பார்கள்; சிலர் உட்கார்ந்த நிலையில் செப மாலையை உருட்டிக் கொண்டிருப்பார்கள் என்றெல்லாம் கற்பனை செய்து கொண்டால் திருவள்ளுவர் தவச் சாலையைப் பொறுத்தவரை அது கற்பனையாகவே போய்விடும். காவிரியின் நீர்ச் செறிவுடன் கூடிய தென்றல் காற்று பஞ்சமில்லாமல் கடந்து செல்லும் வளாகத்தினுள்ளே திருவள்ளுவருக்கு அழகானதொரு கோவில். கோவிலுடன் இணைந்து பளபளவெனப் பளிங்குக் கற்கள் பதித்த தியான மண்டபம். எதிரில் இவ்வளவு நூல்களா என வியக்க வைக்கும் நூலகம். அதனை அடுத்து ஆய்வாளர்கள் வந்து தங்குவதற்கு விருந்தினர் இல்லம், அத்துடன் உணவகம். மீதியுள்ள இடம் முழுவதும் மூலிகைப் பண்ணையுடன் இயற்கைவழி மருத்துவ ஆய்வுக் கூடம். இவை எல்லாமே இயற்கையோடு இணைந்து செயல்படுகின்றன.

இயற்கை உணவு, இயற்கை மருத்துவம், இயற்கை வழிபாடு. இவற்றுடன் தானம், தியானம். திருக்குறளின் கருத்துக்கள் அறிவுத் தானமாக வழங்கப் படுகின்றன. அக்கருத்துக்களின் மன ஒருமைப்பாடு தியானமாகக் கற்றுத் தரப்படுகிறது.

• இளங்குமரனார்

# உயர்ந்தோர் உறையும் இடமெல்லாம் கோயில்களே!



**கள். வள்ளுவரே வலியுறுத்தாத உருவ வழிபாட்டு முறைகளுக்கு மாறுபட்ட கொள்கை ஆகாதா?''**

**''இது கோவிலும் இல்லை. திருவள்ளுவர் கடவுளும் இல்லை. அவர் மிகச் சிறந்த வாழ்வியல் சிந்தனையாளர். எக்காலத்திற்கும் பொருந்தச் சிந்தித்தமையால் ஞானி என்று சொல்லலாம். உடலுக்கும் உள்ளத்திற்கும் மருத்துவம் கண்ட**




• திருவள்ளுவர் தவச்சாலை

எளிய உணவு ஏற்பது, இயற்கை மருத்துவம் பெறுவது, அத்துடன் வள்ளுவர் உணர்த்தியுள்ள தவநெறி பேணி வாழ்வது; இவற்றிற்கான உடற்பயிற்சியும் மனப் பயிற்சியும் இந்தத் தவச் சாலையில் தாராளமாகக் கிடைக்கின்றன. மன அழுத்தங்களால் மாறுபட்டு நிலை குலைந்தவர்கள் பலர் தவச் சாலைக்கு வந்து தங்குகிறார்கள். இவர்களுக்கு அளிக்கப்படும் மருத்துவம் என்ன தெரியுமா? திருக்குறளின் பொருத்தமான அதிகாரங்களிலிருந்து குறள் கருத்துக்களை உணர்த்துவது பொது மருத்துவம். அந்தக் கருத்துக்களில் மனதை ஒருமைப் படுத்தத் தியான முறையில் பயிற்றுவிப்பது சிறப்பு மருத்துவம். இளங்குமரனார் இந்த மருத்துவத்தை உணவு, உறைவிடம் இவற்றுடன் இலவசமாக அளித்து வருகிறார்.

இங்கு வருகின்றவர்களுக்கு மிளகு, சீரகம் கலந்த கீரைச் சூப்பும் மூலிகைச் சூப்பும் வரவேற்புப் பானங்கள். வாழை, கொய்யாக் கனிகளுடன் இஞ்சிச் சுவைநீர் மாலைச் சிற்றுண்டி. எல்லாமே இயற்கையுடன் கலந்த நிலைதான். மின்சாதனப் பொறிகளைப் பயன்படுத்தி நிலத்திலிருந்து நீர் எடுக்கும் நிலைக்குப் பதிலாக, கால்களால் மிதித்து



• வள்ளுவர் கோயிலுக்குள்...

தாம் சித்தர் என்றும் கருதலாம். வள்ளுவர் கருத்துக்களை வாழ்க்கையோடு ஒப்பிட்டும் உணர்ந்தும் வாழ வழிகாட்டும் அறிவாலயம் இது. மனவளக் கலை மன்றம் என்றும் கருதிக் கொள்ளலாம். வானத்திலிருந்து கடவுளை வரவழைப்பதைவிடப் பூமியில் உள்ளவர்களைக் கடவுள் நிலைக்குக் கொண்டு செல்லும் ஞான மார்க்கம் திருக்குறள். இதைத்தான் இங்கே தியானமார்க்கமாகவும் ஞானமார்க்கமாகவும் உணர்த்துகிறோம்.''

''அப்படியென்றால் கருவறை ஒன்று உள்ளதே? அங்கே வணக்கத்திற்குரியதாக உள்ளது எது?''

''வணங்குதல் என்ற ஒன்றே இங்கு இல்லை. உணர்த்துதல் என்ற ஒரு கோட்பாடு தான் இங்கே நடைமுறையில் உள்ளது. கோவில் என்பது இறைவனுக்கு மட்டும் உரியது இல்லையே? உயர்ந்தோர் உறையும் இடங்கள் எல்லாம் கோவில்கள்தான். அப்படிப்பட்ட இந்தக் கோவிலிலும் அமைப்பு ரீதியாகக் கருவறை என்ற ஒன்று உள்ளது. ஆனால் உருவ வழிபாடோ முக்கால பூசனை முறைகளோ கிடையாது. படைப்பும் படைப்பாளரும் என்ற நிலையில் வள்ளுவருக்கு முன்பு திருக்குறள் ஏடுகள் கருவறைக்குள் வைக்கப்பட்டுள்ளன. இவற்றிற்குப் பின்புறம் குறளின் மூன்று பால்களை உணர்த்த மூன்று சிறிய குன்றுகள் போன்ற அமைப்பு அமைக்கப்பட்டுள்ளது. சிறுசிறு கூழாங் கற்களைக் கொண்டு அமைக்கப்பட்ட குன்றுகள். 1984 முதல் 1994 வரை நான் திருமணங்களை நடத்தி வைப்பதற்காகத் தமிழகத்தின் பல ஊர்களுக்குச் சென்றிருந்தபோது எடுத்து வந்து சேகரித்து வைத்திருந்த கற்கள் இவை. அறத்துப்பால் 380 வெண்மை நிறக் கற்களாலும் பொருட்பால் 700 செம்மை நிறக் கற்களாலும், இன்பத்துப்பால்

இயக்கும் 'மிதி எக்கி' என்ற இளங்குமரனாரின் எளிய கருவி, காவிரி நீரைப் பூமிவிருந்து அள்ளி வந்து கொட்டுகிற காட்சியை இங்குதான் பார்க்க முடியும்!

தவச்சாலையின் பணிகளும் பயன்களும் இத்தோடு முடிந்து விடவில்லை. தமிழ்வழிச் சிந்தனைகளை உள்ளடக்கிய தமிழ்ப் பணிகள் தவச் சாலையில் சிறப்பாக நடைபெறுகின்றன. தமிழ் இலக்கியங்கள் தொடர்பாக ஆய்வு மேற்கொள்ளும் ஆய்வாளர்கள் கட்டாயம் வந்து தரிசிக்க வேண்டிய தமிழ் ஆலயம் திருவள்ளுவர் தவச் சாலை.

அரிதான நூல்களைக் கொண்ட இங்குள்ள தேவநேயப் பாவாணர் நூலகத்தில் 15,000க்கும் மேற்பட்ட பல்துறை நூல்கள். தொல்காப்பியத்தின் எல்லாப் பதிப்புகள், சங்க இலக்கியங்களின் பல்வேறு பதிப்புகள், காப்பியங்கள், திரட்டு நூல்கள், சிற்றிலக்கியங்கள், சமய நூல்கள், திருக்குறளின் பல்வேறு உரைகள், இலக்கிய வரலாற்று நூல்கள் மற்றும் பண்பாடு, நாகரிகம், பொருளியல், சமூகவியல் என்று பல்துறை நூல்கள் துறைவாரியாக அடுக்கப்பட்டுள்ளன. இவற்றுடன் அரசுப் பதிவிதழ்கள், பழைய இலக்கிய இதழ்கள், கிதை மொழிபெயர்ப்புகள் இப்படியாகவும் ஆய்வுக்கான நூல்கள் குவிந்துள்ளன. ஆய்வாளர்கள் தங்கியிருக்க திரு வி.க. பெயரில் விருந்தினர் இல்லம். அத்துடன் வள்ளலார் பெயரில் உணவகம். எல்லாமே இலவசம். தொண்டு செய்ய முனைந்த தனி ஒருவரின் தமிழ்ச் சாதனைகள் இவை!

**250 கருநீலக் கற்களாலும் குன்றுகளாக்கப்பட்டு மொத்தம் 1330 கற்களால் திருக்குறளைக் குறிப்பிட அமைத்துள்ளது. வள்ளுவம் ஒரு நடைமுறை நூல் என்பதை உணர்த்த இரண்டு காலடிகளும் அமைக்கப்பட்டுள்ளன.''**

**''தவச்சாலை என்று துறவுடன் கூடிய பெயராக அமைந்திருப்பதின் காரணம் என்ன?''**

**''தவம் என்பது வேண்டாமையை விடுவிப்பது. தபு என்ற அடிச் சொல்லுக்கு நீக்குதல் என்று பொருள். தவம் என்பது சடங்கு நெறி அன்று; அது அடங்குநெறி. திருக்குறள் ஒன்று தான் இந்த வகையான தவநெறியை வலியுறுத்துகின்றது. எனவே இது திருவள்ளுவர் தவச் சாலை.**

கட்டுரை, சந்திப்பு:
**இரா. கோதண்டபாணி**
படங்கள்: **எம். இராமசாமி**

# பொன்னியின் செல்வன்



## நாற்பத்து ஐந்தாம் அத்தியாயம்

## வானதிக்கு அபாயம்!

"அக்கா! ஐந்து வயதில் நான் காவேரி வெள்ளத்தில் மூழ்கியது நினைவிருக்கிறதா? காவேரித் தாய் என்னை எடுத்துக் காப்பாற்றிப் படகிலே விட்டு விட்டு மறைந்தது நினைவிருக்கிறதா?" என்று அருள்வர்மன் கேட்டான்.

"இது என்ன கேள்வி, தம்பி! எப்படி அதை நான் மறந்து விட முடியும்? 'பொன்னியின் செல்வன்' என்று உன்னை அழைத்து வருவதே அந்தச் சம்பவத்தின் காரணமாகத்தானே?" என்றாள் குந்தவை.

"என்னைக் காப்பாற்றிய காவேரித் தாயை இலங்கையில் நான் கண்டேன். அக்கா...! என்ன, பேசாதிருக்கிறாயே? உனக்கு ஆச்சரியமாயில்லையா?"

"ஆச்சரியமில்லை, தம்பி! ஆனால் ஆர்வம் நிறைய இருக்கிறது. அவளைப் பற்றி எல்லா விவரங்களையும் சொல்!"

"ஒரு நாளில், ஒரு தடவையில், சொல்ல முடியாது. முக்கியமானதை மட்டும் சொல்லுகிறேன். காவேரி வெள்ளத்திலிருந்து என்னை அவள் காப்பாற்றியது மட்டுமல்ல; இலங்கையில் பல தடவை என் உயிரைக் காப்பாற்றியிருக்கிறாள். உயிரைக்

காப்பாற்றியது பெரிதல்ல, அக்கா! எத்தனையோ பேர் தற்செயலாகப் பிறர் உயிரைக் காப்பாற்றுகிறார்கள். அவள் என்னிடத்தில் வைத்துள்ள அன்பு இருக்கிறதே, அதற்கு இந்த ஈரேழு பதினாலு உலகங்களும் இணையாகாது... ஏன்? நீ என்னிடம் வைத்துள்ள அன்பைக்கூட அடுத்தபடியாகத்தான் சொல்ல வேண்டும்!"

"அதைச் சொல்லுவதற்கு நீ தயங்க வேண்டாம். உன்னிடம் என் அன்பு அவ்வளவு ஒன்றும் உயர்ந்தது அல்ல; சுயநலம் கலந்தது. உண்மையைச் சொல்கிறேன், தம்பி! எனக்கு இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் மேன்மைதான் முதன்மையானது. அதற்கு நீ பயன்படுவாய் என்றுதான் உன் பேரில் அன்பு வைத்திருக்கிறேன். அந்த நோக்கத்துக்கு நீ தடையாயிருப்பாய் என்று தெரிந்தால், என் அன்பு வெறுப்பாக மாறினாலும் மாறி விடும். ஆனால் அந்த ஊமைச் செவிட்டு ஸ்திரீயின் அன்பு அத்தகையதல்ல. நம்முடைய தந்தையிடம் இருபது வருஷங்களுக்கு மேலாக அவள் உள்ளத்தில் பொங்கித் ததும்பிக் கொண்டிருந்த அத்தனை அன்பையும் உன் பேரிலே சொரிந்திருக்கிறாள். அதற்குப் பதினாலு உலகமும் இணையில்லைதான்!"

"உனக்கு அது எப்படித் தெரிந்தது, அக்கா!"

"எதைச் சொல்கிறாய், தம்பி!"

"அவள் நம்முடைய பெரிய தாயார் என்பது?"

"தந்தை சொன்னதிலிருந்தும் வந்தியத்தேவர் சொன்னதிலிருந்தும் ஊகித்துக் கொண்டேன், தம்பி! அவள் உன்னைத் தன் சொந்த மகன் என்று எண்ணியிருக்கிறாளா? அல்லது சக்கரத்தியின் மகன் என்று எண்ணியிருக்கிறாளா?"

"அந்த மாதிரி வேற்றுமையான எண்ணம் என் மனத்திலும் உதிக்கவில்லை; அவள் மனத்தில் என்னளவும் இருப்பதாகத் தெரியவில்லை. நீ ஏன் அம்மாதிரி வேற்றுமைப்படுத்திப் பேசுகிறாய்?"

"தம்பி! அந்த ஊமை ஸ்திரீ வீற்றிருக்க வேண்டிய சிங்காதனத்தில் இன்று நம் தாயார் வீற்றிருக்கிறாள். அது தெரிந்திருந்தும் அவள் உன்னிடம் அத்தனை அன்பு வைத்திருந்தால், அது மிக்க விசேஷமல்லவா?"

"நான் அவள் வயிற்றில் பிறந்த மகன் அல்ல என்பது அவளுக்குத் தெரிந்துதானிருக்க வேண்டும். வயது வித்தியாசம் தெரியாமலா போகும்? அவளால் பேச முடியாது; மனத்தில் உள்ளதைச் சொல்ல



முடியாது. ஏதோ சித்திரங்கள் எழுதிக் காட்டியதைக் கொண்டு எவ்வளவு தெரிந்து கொள்ளலாமோ, அவ்வளவு தெரிந்துகொண்டேன். என்னிடம் அவளுடைய அன்பு இருக்கட்டும்; நம் தந்தையிடம் அவள் எத்தகைய அன்பு வைத்திருக்க வேண்டும் என்பதை நினைத்தால் என் நெஞ்சு உடனே உருகி விடுகிறது. அக்கா! என்னுடைய பிராயத்தில் அப்பா என்னைப் போல இருப்பாரா?''

''இல்லை, தம்பி, இல்லை! உன்னுடைய பிராயத்தில் நம் தந்தை மன்மதனைத் தோற்கடிக்கும் அழகுடன் விளங்கினார். நம்முடைய சோழ குலம் வீரத்துக்குப் பெயர் போனதே தவிர அழகுக்குப் பெயர் போனதல்ல. நம் பாட்டனார் அரிஞ்சய தேவர் அழகில் நிகரற்ற வைதும்பராயன் குலத்தில் பிறந்த கல்யாணியை மணந்தார். கல்யாணியை அரிஞ்சயர் மணந்தபோது அவள் பத்தரை மாற்றுப் பசும் பொன்னொத்த மேனியும் பூரண சந்திரனையொத்த முகமும் கொண்ட புவனமோஹினியாக விளங்கினாள். தற்சமயம் இத்தனை வயதான பிறகும் கல்யாணிப் பாட்டி எவ்வளவு அழகாயிருக்கிறாள் என்பதை நீயே பார்த்திருக்கிறாய். அதனால் நமது தந்தையும் அவ்வளவு அழகுடன் இருந்தார்; 'சுந்தர சோழர்' என்ற பட்டப் பெயரும் பெற்றார். நாம் நம்முடைய தாயாரைக்கொண்டு பிறந்திருக்கிறோம். திருக்கோவலூர் மலையமான் வம்சத்தில் பிறந்தவர்கள் அழகை வெறுப்பவர்கள்; அழகு வீரத்துக்குச் சத்துரு என்று நினைப்பவர்கள்...''

''அழகுக்கும் வீரத்துக்கும் என்ன சம்பந்தம் உண்டோ, என்னமோ, எனக்குத் தெரியாது. ஆனால் அழகுக்கும் அன்புக்கும் சம்பந்தமில்லை என்பதை அறிவேன். இல்லாவிடில்...''

''இல்லாவிடில் இந்தப் பெண் வானதி எதற்காக உன்னைத் தூண் மறைவிலிருந்து கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருக்கிறாள்? அதோ அந்தப் படகில் சேந்தன் அமுதன் பூங்குழலியை ஏன் கண் கொட்டாமல் பார்த்துப் பரவசமடைந்து கொண்டிருக்கிறான்?''

இளவரசர் புன்னகை புரிந்து, ''அக்கா! நீ எதிலிருந்து எதற்கோ போய் விட்டாய்! என் பெரியன்னை என்னிடம் வைத்துள்ள அன்பைக் குறித்துச் சொன்னேன். அது போனால் போகட்டும்; இவ்வுலகில் ஒருவரைப் போல் இன்னொருவர் தத்ரூபமாக இருப்பதென்பது சாத்தியமா, அக்கா?''

''ஏன் சாத்தியமில்லை? இரட்டைப் பிள்ளைகளாயிருந்தால் அது சாத்தியம். அல்லது தாயும் மகளும் ஒரு பிராயத்தில் ஒரே மாதிரி இருப்பது சாத்தியந்தான். இதைத் தவிர பிரம்ம சிருஷ்டியில் ஒருவருக்கொருவர் சம்பந்தமேயில்லாதவர்கள், அபூர்வமாகச் சில சமயம் ஒரே மாதிரி இருப்பதும் உண்டு.''

''பழுவூர் இளையராணியும் இலங்கையில் நான் பார்த்த நம் பெரியன்னையும் ஒரே மாதிரி இருப்பதாக வந்தியத்தேவர் சொல்வது உண்மையாயிருக்க முடியுமா? நந்தினி சிறு பெண்ணாயிருந்தபோதுதான் நான் பார்த்திருக்கிறேன். பழுவூர் இளையராணியான பிறகு நன்றாய்ப் பார்த்ததில்லை. உனக்கு என்ன தோன்றுகிறது?''

''நான் பழுவூர் ராணியைப் பார்த்திருக்கிறேனே தவிர, நம் பெரியம்மாவைப் பார்த்ததில்லை. ஆனால் வந்தியத்தேவர் கூறியது உண்மையாகத்தான் இருக்க வேண்டும். என் தந்தை கூறிய வரலாற்றிலிருந்து அதைத் தெரிந்துகொண்டேன், தம்பி!''

''தந்தையே கூறினாரா உன்னிடம்? என்ன கூறினார்? எப்போது கூறினார்?''

''சில நாளைக்கு முன்பு நானும் வானதியும் தஞ்சைக்குப் போயிருந்தோம். அப்போது தம் இளம்பிராயத்தில் நடந்த சம்பவத்தைக் கூறினார். இலங்கைக்கு அருகில் உள்ள ஒரு தீவில் தான் தனியாக ஒதுக்கப்பட்டதையும், அத் தீவில் ஒரு ஊமைப்பெண் தம்மிடம் காட்டிய அன்பைப் பற்றியும் கூறினார். பராந்தகர் அனுப்பிய ஆட்கள் தம்மை அத் தீவில் கண்டுபிடித்து அழைத்து வந்ததைப் பற்றிச் சொன்னார். தமக்கு இளவரசுப் பட்டம் சூட்டிய அன்று அரண்மனையில் வாசலில் நின்ற கூட்டத்தில் அவளைப் பார்த்தாராம். அடுத்தகணம்

அவள் மறைந்து விட்டாளாம். அவளைத் தேடி அழைத்து வர முதன் மந்திரி அநிருத்தரையே அனுப்பினாராம். ஆனால் அந்தப் பெண் கலங்கரை விளக்கின் உச்சியிலிருந்து கடலில் குதித்து இறந்துவிட்டாள் என்று அநிருத்தர் வந்து கூறினாராம். இந்தச் சம்பவம் நம் தந்தையின் உள்ளத்தில் இருபத்தி நாலு வருஷங்களாக இருந்து அல்லும் பகலும் வேதனை அளித்துக் கொண்டிருக்கிறது என்பதை அறிந்தேன். அவள் இறந்து விட்டதாகவே தந்தை நினைத்துக்கொண்டிருக்கிறார். தம்மால், தமது குற்றத்தால், அவள் மனம் புண்பட்டு உயிரை விட்டு விட்டதாகவும் எண்ணிக்கொண்டிருக்கிறார். தம்பி! சோழ சாம்ராஜ்யத்தைப் பற்றி நம் மனக் கோட்டையெல்லாம் ஒருபுறம் இருக்கட்டும். நீயும் நானுமாக முயன்று நம் தந்தைக்குச் செய்ய வேண்டிய கடமை ஒன்று இருக்கிறது. நீ எப்படியாவது இலங்கையிலிருந்து அம் மாதரசியைத் தஞ்சைக்கு அழைத்து வர வேண்டும். தந்தையிடம் அவள் இறந்து விடவில்லை; உயிரோடு இருக்கிறாள் என்பதை நேரில் நிரூபித்துக் காட்ட வேண்டும். இல்லாவிட்டால், நம் தந்தைக்கு இந்த ஜன்மத்திலும் மனச்சாந்தி இல்லை. மறு ஜன்மத்திலும் அவருக்கு நிம்மதியிருக்க முடியாது!''

''அக்கா! சமீபத்தில் நான் இரண்டு மூன்று தடவை மரணத்தின் வாசல் வரையில் சென்று திரும்பினேன். அப்போதெல்லாம் என் மனத்தில் தோன்றிய எண்ணம் என்ன தெரியுமா? பெரியம்மாவைத் தந்தையிடம் அழைத்துப் போய் விடாமல் செத்துப் போகிறோமே என்ற ஏக்கந்தான். அக்கா! அந்த மாதரசியை நினைத்தாலும் என் உள்ளம் குமுறுகிறது. வாயிருந்தால் மனத்திலுள்ள குறைகளையும் வேதனைகளையும் வெளியிட்டுச் சொல்லி ஆறுதல் அடையலாம். காது இருந்தால் பிறர் கூறும் ஆறுதல் மொழிகளைக் கேட்டுத் துக்கம் தீரலாம். வாயும் செவியும் இல்லாத ஒருத்தியினுடைய நிலையை எண்ணிப் பார்! உள்ளத்தில் குமுறும் அன்பையும் ஆர்வத்தையும் துன்பத்தையும் வேதனையையும் கோபத்தையும் தாபத்தையும் எல்லாவற்றையும் மனத்திற்குள்ளே அடக்கி வைத்திருக்க வேண்டும். அதிலும் நம் பெரியன்னையைப் போல் ஆசாபங்கம் அடைந்தவளின் மனோநிலையைப் பற்றிச் சொல்ல வேண்டுமா? அவள் பைத்தியக்காரியைப் போல் இலங்கைத் தீவின் காடுகளில் சுற்றித் திரிந்து கொண்டிருப்பதில் வியப்பென்ன? அதையெல்லாம் நினைக்க நினைக்க என் நெஞ்சு வெடித்துவிடும் போலிருக்கிறது. அவளை எப்படியாவது அழைத்து வந்து தந்தையிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்ற ஆர்வம் உண்டாகிறது. ஆனால், நம் தந்தை அதை விரும்புவார் என்று நினைக்கிறாயா, அக்கா?''

''தந்தை விரும்பினாலும் சரி, விரும்பா விட்டாலும் சரி, நம்முடைய கடமை அது, தம்பி! இறந்து போனவளின் ஆவி வந்து அவரைத் துன்புறுத்துவதாக எண்ணி இரவு நேரங்களில் நம் தந்தை அலறுகிறார். இதனாலேயே அவர் உடம்பும் குணமடைவதில்லை.''

''இது எப்படி உனக்குத் தெரிந்தது, அக்கா! இதுவும் தந்தை சொன்னாரா?''

''தந்தையும் சொன்னார்; என் தோழி வானதியும் சொன்னாள்.''

''வானதி சொன்னாளா? அவளுக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? அக்கா! நீ அவளிடம் சொன்னாயா, என்ன?''

''இல்லை, இல்லை! தஞ்சை அரண்மனையில் ஒருநாள் நிகழ்ந்ததை அவள் வாய்மொழியாகவே சொல்லச் சொல்கிறேன். இருந்தாலும் நீ ரொம்பப் பொல்லாதவன், தம்பி! சோழர் குலத்தின் பண்பாட்டையே மறந்து விட்டாய்! கொடும்பாளூர் இளவரசியிடம் ஒரு வார்த்தை பேசவும் இல்லை; சௌக்கியமாக இருக்கிறாயா என்று கேட்கக் கூட இல்லையே? மகா வீரரான சிறிய வேளாரின் புதல்விக்கு நீ செய்யும் மரியாதை இதுதானா? அழகாயிருக்கிறது!''

''அக்கா! வானதியைக் கவனித்துக் கொள்ள நீ இருக்கும்போது கவலை என்ன? சௌக்கியமா என்று நான் விசாரிப்பதுதான் என்ன?''

"ரொம்ப சரி; சற்று வாயை மூடிக் கொண்டிரு! வானதி! இங்கே வா! உன்னை இளவரசன் நன்றாய்ப் பார்க்க வேண்டுமாம்!'' என்றாள் குந்தவை.

வானதி அருகில் வந்தாள். இள வரசரைப் பார்த்தும் பாராமலும் நின்றுகொண்டு, ''அக்கா! எதற்காகக் கற்பனை செய்து கூறுகிறீர்கள்! தங்கள் தம்பி என்னைப் பார்க்க விரும்பவில்லை. அவர் பார்வையெல்லாம் அதோ ஓடையில் இருக்கும் ஓடத்தின் மேலேயே இருக்கிறது. அவசரமாகத் திரும்பிப் போக வேண்டும் போலிருக்கிறது!'' என்று பட்டுப் போன்ற மிருது வான குரலில் கூறி னாள். ஓடத்தில் இருந்த பூங்குழ லியை நினைத்



துக்கொண்டு ஓடத்தைக் குறிப்பிட்டாள் போலும்!

இளவரசன் நகைத்துக்கொண்டே, ''அக்கா! உன் தோழிக்குப் பேசத் தெரிகிறதே! நம் குடும்பத்தைச் சேர்ந்த ஊமைகளுடன் இவளும் ஒரு ஊமையோ என்று பயந்து போனேன்!'' என்றான்.

''அக்கா! இவரைப் பார்த்தால் எனக்குப் பேச வருகிறதில்லை. எனக்கே நான் ஊமையாய்ப் போய் விட்டேனோ என்று பயம் உண்டாகிறது!'' என்றாள் வானதி.

''அது ரொம்ப நல்லது. கோடிக் கரையில் ஒருவன் இருக்கிறான். பூங் குழலியின் தமையன். அவன் மற்றவர் களிடம் ஒருவாறு தெத்தித் தெத்திப் பேசு கிறான். ஆனால் அவன் மனைவியைக் கண்டால் ஊமையாகி விடுகிறான். அதனால் அவனை அவன் வீட் டார் ஊமை என்றே வைத்து விட்டார்கள்'' என்றான் இளவரசன்.

''இந்தக் கொடும் பாளூர்ப் பெண் கொஞ் சம் அந்த மாதிரிதான். முன்னேயெல்லாம் இவ ளைச் சற்று நேரம் பேசாமல் சும்மா இருக் கச் சொன்னால் இவ ளால் முடியவே முடி யாது. பேச ஆரம் பித்தால் நிறுத்தவே மாட்டாள். நீ முதன் முதலில் இலங்கைக்குப் போனாயே அது முதல் இவளுடைய பேச்சு குறைந்து விட்டது. தனி யாகத் தனியாகப் போய் உட்கார்ந்துகொண்டு எதையோ எண்ணிக் கொண்டிருக்கிறாள். அது போனால் போகட்டும்.



வானதி! அன்று இரவு தஞ்சை அரண்மனையில் நடந்ததையெல்லாம் இளவரசனுக்கு விவரமாகச் சொல்லு!'' என்றாள் குந்தவை.

''கொடும்பாளூர் இளவரசி உட்கார்ந்துகொண்டு சொல்லட்டும், அக்கா! இவள் இத்தனை நேரம் நிற்பதைப் பார்த்தால் இவளுடைய பெரிய தந்தை உருகிப் போய் விடுவார். தென்திசைச் சேநாதிபதி என்னைப் பார்க்கும் போதெல்லாம் இவளைப் பற்றி விசாரிப்பார். நீயோ இவளைப் பற்றி ஒன்றுமே சொல்லி அனுப்புவதில்லை. ஆகையால், நான் அவருக்குப் பதில் சொல்ல முடியாமல் திண்டாடுவேன்'' என்றான் இளவரசன்.

''வாணர் குலத்து வீரரிடம் இவளைப் பற்றி விவரமாய்ச் சொல்லி அனுப்பினேனே, அவர் ஒன்றும் உன்னிடம் சொல்லவில்லையா?''

''அவர் சொல்லித்தான் இருப்பார், அக்கா! இவர் காதில் ஒன்றும் விழுந்திராது. இவருக்கு எத்தனையோ ஞாபகம்!'' என்றாள் வானதி.

''அதுவும் உண்மைதான். உன்னுடைய ஓலையைப் பார்த்த பிறகு வேறு ஒன்றிலும் என் மனது செல்லவில்லை. இந்த சுரத்திற்குப் பிறகு என் காதுகூடக் கொஞ்சம் மந்தமாயிருக்கிறது. உன் தோழியை உரக்கப் பேசச் சொல்லு!'' என்றான் அருள்வர்மன்.

பிறகு, வானதி தஞ்சை அரண்மனையில் குந்தவை துர்க்கை கோயிலுக்குப் போன பிறகு தான் தனியே மேன்மாடத்தில் உலாவச் சென்றதையும், சக்கரவர்த்தியின் அபயக் குரல் கேட்டதையும், அந்த இடத்துக்குத் தான் சென்று கீழே எட்டிப் பார்த்ததையும் அங்கே தான் கண்ட காட்சியையும் கூறினாள். இடையிடையே வானதி இளவரசனின் முகத்தை ஏறிட்டுப் பார்க்க நேர்ந்த போதெல்லாம் மெய் மறந்து நின்று விட்டாள். இளையபிராட்டி அவளை ஒவ்வொரு தடவையும் தூண்டிப் பேசும்படி செய்வது அவசியமாயிருந்தது.

எல்லாவற்றையும் ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்த இளவரசன், கடைசியாகத் தமக்கையை நோக்கி, ''அக்கா! உன் தோழி முக்கியமான ஒரு சம்பவத்தை விட்டு விட்டாள் போலிருக்கிறதே! இவ்வளவையும் பார்த்துக் கேட்ட பிறகு இவள் மூர்ச்சை அடைந்து விழுந்திருக்க வேண்டுமே?'' என்றான்.

குந்தவை சிரித்தாள்; வானதி நாணத்துடன் தலை குனிந்து நின்றாள்.

குந்தவை அவளை அன்பு ததும்பிய கண்களினால் பார்த்து, ''வானதி! நீ சற்று நேரம் ஓடைக் கரையோடு உலாவி விட்டு வா! இல்லாவிட்டால், நம் பரிவாரங்கள் இருக்குமிடத்துக்குப் போயிரு! அருள்வர்மன் இன்னும் சில நாள் இங்கேயேதான் இருப்பான். மறுபடியும் சந்திக்கலாம்!'' என்றாள்.

''ஆகட்டும், அக்கா! உலாவி விட்டு வருகிறேன்!'' என்று சொல்லிக் கொண்டு வானதி துள்ளிக் குதித்துச் சென்றாள். திடீரென்று அவ்வளவு குதூகலம் அவளுக்கு எப்படி ஏற்பட்டதோ, தெரியாது.

மலர்ந்த முகத்தோடும் விரிந்த கண்களோடும் அவள் போவதைப் பார்த்துக்கொண்டிருந்த அருள்வர்மன், அவள் மறைந்ததும், தமக்கையை நோக்கினான்.

''அக்கா! தந்தையின் புலம்பலின் காரணம் எனக்குத் தெரிகிறது. ஆனால் அவர் கண்ட காட்சியைப் பற்றி உன் கருத்து என்ன? அவர் முன்னால் காணப்பட்ட தோற்றம் என்னவாயிருக்கக் கூடும்? தந்தையின் மனப் பிரமையா? அப்படியானால் உன் தோழிக்கும் அந்தப் பிரமை எப்படி ஏற்பட்டிருக்கும்?''

''தந்தையைக் கண்டதும் பிரமை அல்ல; வானதி கண்டதும் மாயத் தோற்றம் அல்ல. தந்தை முன் நடந்தது நள்ளிரவு நாடகம். அதில் முக்கிய பாத்திரமாக நடித்தவள் பழுவூர் இளையராணி நந்தினி. இதை அப்போதே நான் ஊகித்துத் தெரிந்துகொண்டேன். வந்தியத்தேவரும் நீயும் சொன்ன விவரங்களுக்குப் பிறகு அது உறுதியாயிற்று...''

''அந்த நாடகத்திற்குக் காரணம் என்ன? பழுவூர் ராணி எதற்காக அப்படிச் செய்ய வேணும், அக்கா?''

''நந்தினிக்குத் தன் பிறப்பைக் குறித்துச் சந்தேகம் உண்டு. சக்கரவர்த்தி தன்னைப் பார்த்து முன்னொரு தடவை

நினைவிழந்ததை அவள் அறிவாள். அதற்குப் பிறகு அவள் தந்தை முன்னால் வருவதே இல்லை. இப்படி ஒரு நாடகம் நடத்தினால் ஏதாவது உண்மை கண்டறியலாம் என்று செய்திருக்கிறான்..."

"தெரிந்திருக்குமா, அக்கா?"

"அதை நான் அறியேன். நந்தினியின் உள்ளத்தை அவளைப் படைத்த பிரம்மதேவனாலும் கண்டறிய முடியாது. பழுவேட்டரையர் அவளிடம் படும் பாட்டை நினைத்தால் எனக்குப் பரிதாபமாயிருக்கிறது. தம்பி! சற்று முன் அழகைப் பற்றிப் பேசினோம் அல்லவா? பெண்களில் அழகி என்றால், நந்தினி தான் அழகி. நாங்கள் எல்லாரும் அவள் கால் தூசி பெற மாட்டோம். நந்தினி முன்னால் எதிர்ப்பட்ட புருஷர்கள் அவளுக்கு அக்கணமே அடிமையாகி விடுகிறார்கள். பழுவேட்டரையர், மதுராந்தகன், திருமலையப்பன், கந்தமாறன், கடைசியாக, பார்த்திபேந்திரன்! அவளுடைய அழகுக்குப் பயந்து கொண்டு முதன் மந்திரி அநிருத்தர் அவள் பக்கத்திலேயே போவதில்லை. ஆதித்த கரிகாலன் அதனாலேயே தஞ்சைக்கு வருவதில்லை. தம்பி! நந்தினியின் சௌந்தரியத்துக்கு அஞ்சாமல், அவளிடம் தோற்றுப் போகாமல் மிஞ்சி வந்தவர், ஒரே ஒருவர்தான்...!"

"வாணர் குலத்து வீரரைத்தானே சொல்லுகிறாய்?"

"ஆம்! அவர்தான்! அதனாலேயே அவரைக் காஞ்சிக்கு ஆதித்த கரிகாலனிடம் அனுப்பியிருக்கிறேன்."

"எதற்காக?"

"பழுவூர் ராணி கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்கு வரும்படி நம் தமையனுக்குச் சொல்லியனுப்பியிருக்கிறாள். அவர்களுடைய சந்திப்பைத் தடுப்பதற்காக அனுப்பியிருக்கிறேன். அப்படிச் சந்தித்தாலும் விபரீதம் எதுவுமே நேராமல் பாதுகாப்பதற்கு அனுப்பியிருக்கிறேன். கரிகாலனுக்கு நந்தினி நம் தமக்கை என்று தெரியாது. நந்தினி நம் உறவைக் கண்டு கொண்டாளா என்பதையும் நான் அறியேன்."

"அவள் நம் தமக்கை என்பது நிச்சயந்தானா, அக்கா?"

"அதில் என்ன சந்தேகம்? தம்பி! அதை நான் அறிந்ததிலிருந்து என்னுடைய மனத்தை அடியோடு மாற்றிக் கொண்டு விட்டேன். நாம் குழந்தைகளாயிருந்தபோது நந்தினியை நான் வெறுத்தேன்; அவமதித்தேன். அவள் அழகைக் கண்டு பொறாமைப்பட்டேன். நீயும் கரிகாலனும் அவளோடு பேசவுங் கூடாது என்று திட்டம் செய்தேன். அவள் பாண்டிய நாட்டுக்குப் போன பிறகும் அவளிடம் நான் கொண்டிருந்த அசூயையும் வெறுப்பும் அப்படியே இருந்தன. பழுவூர்க் கிழவரை மணம் செய்துகொண்டு திரும்பி வந்த பிறகு எத்தனையோ தடவை அவளைப் பரிகசித்து அவமானப்படுத்தினேன். அதற்கெல்லாம் பிராயச்சித்தம் செய்து கொள்ளத் தீர்மானித்திருக்கிறேன்..."

"எப்படி, அக்கா! என்ன மாதிரி பிராயச்சித்தம்?"

"அடுத்த தடவை அவளைச் சந்திக்கும்போது அவள் காலில் விழுந்து என்னுடைய குற்றங்களையெல்லாம் மன்னிக்கும்படி கேட்டுக்கொள்வேன். அதற்காக என்ன தண்டனை விதித்தாலும் ஏற்றுக்கொள்வேன்..."

"அதை நான் தடுப்பேன். நீ ஒரு குற்றமும் செய்யவில்லை. நீ யாரிடமும் மன்னிப்புக் கேட்க வேண்டிய அவசியமும் இல்லை. இந்த ஈரேழு பதினாலு உலகத்தில் உனக்குத் தண்டனை கொடுக்கக் கூடியவர்கள் யாரும் இல்லை. நீ பழுவூர் இளையராணி நந்தினியைப் பார்த்து அசூயைப்படவில்லை. அவள் தான் உன்னைப் பார்த்துப் பொறாமைப்பட்டாள். அவள்தான் உன்னை வெறுத்தாள்..."

"தம்பி! இலங்கையில் பைத்தியக்காரியைப் போல் திரியும் நம் பெரியம்மாவை நினைத்து நீ நெஞ்சம் குமுறுவதாகச் சொன்னாய். அரண்மனையில் சகல சுக போகங்களுடன் வாழ்ந்திருக்க வேண்டிய நந்தினி எப்படியெல்லாம் வாழ்க்கையில் கஷ்டப்பட்டாள் என்பதை நினைக்கும் போது என் இதயம் பிளந்து போகும் போலிருக்கிறது. யாரோ,

எப்பொழுதோ செய்த தவறுகளின் காரணமாக, எனக்கு முன் பிறந்த தமக்கை இந்தக் கிழவர் பழுவேட்டரையரை மணக்க நேர்ந்துவிட்டது..."

"அக்கா! இதெல்லாம் எப்படி நேர்ந்திருக்கும் என்று உனக்கு ஏதாவது தெரிகிறதா? நம் பெரியம்மா இறந்து விட்டதாகத் தந்தை எண்ணுவதற்குக் காரணம் என்ன? நந்தினி அநாதையைப் போல் எங்கேயோ, யார் வீட்டிலோ வளர்ந்து, இந்த நிலைமைக்கு வருவதற்குக் காரணம் என்ன...?

"அதைப் பற்றியெல்லாம் நான் இரவும் பகலும் யோசித்து வருகிறேன். ஆனால் இன்னமும் நிச்சயமாய்க் கண்டுபிடிக்க முடியவில்லை. அந்த இரகசியங்களை அறிந்தவர்கள் இப்போது இரண்டு பேர் நமக்குத் தெரிந்தவர்கள் இருக்கிறார்கள். நம்முடைய பாட்டி செம்பியன் மாதேவிக்கு ஏதோ விஷயம் தெரிந்திருக்கிறது. முதன் மந்திரி அநிருத்தருக்கு எல்லா விஷயமும் தெரிந்திருக்கும் எனத் தோன்றுகிறது. ஆனால் அவர்கள் இரண்டு பேரிடமிருந்தும் நாம் எதுவும் தெரிந்து கொள்ள முடியாது. அநிருத்தருடைய சீடன் ஆழ்வார்க்கடியானுக்கு ஓரளவேனும் தெரிந்திருக்க வேண்டும். அவன் குருவை மிஞ்சியவன்; வாயைத் திறக்க மாட்டான் தம்பி!





அதையெல்லாம் கண்டுபிடிப்பதற்கு இப்போது அவசரமும் இல்லை. நந்தினியினால் நம் குலத்துக்கு விபரீதமான அபாயமும் அபகீர்த்தியும் ஏற்படாமல் தடுப்பதுதான் இப்போது முக்கியம். வந்தியத்தேவர் சொன்னார், பழுவூர் ராணி, மீன் சின்னம் பொறித்த மின்னலைப் போல் ஒளிரும் வாள் ஒன்றை வைத்துப் பூஜை செய்து கொண்டிருக்கிறாள் என்று. அதைக் கேட்டதிலிருந்து என் நெஞ்சு பதைத்துக் கொண்டேயிருக்கிறது. தான் பிறந்த குலம் சோழ குலம் என்பதை அறியாமல் பழுவூர் ராணி ஏதாவது செய்து விடப் போகிறாளே என்று கவலையாயிருக்கிறது!"

"பழுவூர் ராணியிடம் எல்லாவற்றையும் சொல்லி விட்டால், என்ன?"

"சொன்னாலும் என்ன பயன் ஏற்படுமோ, தெரியாது. நம்மிடமெல்லாம் அவளுடைய கோபம் அதிகமானாலும்



ஆகும். ஆனால் நமது கடமையை நாம் செய்து விட வேண்டியதுதான்!"

"அதற்காக வந்தியத்தேவரை நீ அனுப்பியிருப்பது சரிதான். ஆனால் தந்தையிடமும் தெரிவிக்க வேண்டாமா? அவர் எதற்காக உடல் வேதனை போதாதென்று மனவேதனையும் பட்டுக் கொண்டிருக்க வேண்டும்? நாம் உடனே தஞ்சைக்குப் புறப்படலாம் அல்லவா?"

"கூடவே கூடாது, தம்பி! இரண்டு நாளில் தஞ்சைக்கு நான் புறப்படுகிறேன். ஆனால் இந்தச் சூடாமணி விஹாரத்தில் தான் நீ இன்னும் சில காலம் இருக்க வேண்டும்."

"ஏன் அப்படிச் சொல்கிறாய்? தந்தையின் கட்டளையை மீறி என்னை இங்கே இன்னமும் ஒளிந்து மறைந்து வாழச் சொல்கிறாயா?"

"ஆம்; நீ இப்போது தஞ்சைக்கு வந்தால் நாடெங்கும் ஒரே குழப்பமாகி விடும். மக்கள் மதுராந்தகர் மீதும் பழுவேட்டரையர்கள் மீதும் ஒரே கோபமாயிருக்கிறார்கள். உன்னைச் சிறைப் படுத்திக் கொண்டு வரச் சொன்னதற்காகச் சக்கரவர்த்தி மீதுகூட ஜனங்கள் கோபமாயிருக்கிறார்கள். உன்னை இப்போது கண்டால், மக்களின் உணர்ச்சி வெள்ளம் பொங்கிப் பெருகும். அதன் விளைவுகள் என்ன ஆகுமோ தெரியாது. உடனே உனக்குப் பட்டம் கட்ட வேண்டும் என்று ஜனங்கள் கூச்சல் போட்டாலும் போடுவார்கள். தஞ்சைக் கோட்டையையும் அரண்மனையையும் முற்றுகை போடுவார்கள். ஏற்கெனவே மனம் புண்பட்டிருக்கும் தந்தையின் உள்ளம் மேலும் புண்ணாகும். தம்பி! இராஜ்யத்துக்கு ஆபத்து வந்திருக்கிறது என்று உன்னை நான் வரச் சொல்லி ஓலை எழுதினேன். அதே காரணத்துக்காக இப்போது நீ திரும்பி இலங்கைக்குப் போய்விட்டால் நல்லது என்று நினைக்கிறேன்..."

"அக்கா! அது ஒரு நாளும் இயலாத காரியம். நம் தந்தையைப் பார்க்காமல் நான் திரும்பிப் போக மாட்டேன். தஞ்சைக்கு நான் இரகசியமாக வருவது நல்லது என்று நினைத்தால் அப்படியே செய்கிறேன். ஆனால் சக்கரவர்த்தியை நான் பார்த்தேயாக வேண்டும். அவரிடம் என்னைக் காப்பாற்றிய காவேரி அம்மன் யார் என்பதைச் சொல்ல வேண்டும்."

"அதையெல்லாம் நானே சமயம் பார்த்துச் சொல்லி விடுகிறேன். நீ வந்து தான் தீர வேண்டுமா?"

"நேரில் பார்த்த நானே சொன்னால், தந்தைக்குப் பூரண நம்பிக்கை ஏற்படும்; என் மனமும் ஆறுதல் அடையும். பெரியம்மாவை அழைத்துக்கொண்டு வருவதற்கு அவருடைய அனுமதியையும் பெற்றுக் கொள்வேன்..."

"அருள்வர்மா! உன் இஷ்டத்துக்கு நான் குறுக்கே நிற்கவில்லை. ஆனால் இன்னும் ஒரு வார காலம் சூடாமணி விஹாரத்தில் இரு. நான் முன்னதாகத் தஞ்சைக்குப் போகிறேன். நீ வந்திருப்பதைத் தந்தையிடம் அறிவித்து விட்டுச் செய்தி அனுப்புகிறேன். தம்பி! நான் இங்கே உன்னைத் தேடி வந்தது உன்னைப் பார்ப்பதற்காக மட்டுமல்ல; உன்னிடம் ஒரு வரம் கோரிப் பெறுவதற்காக வந்தேன். அதை நிறைவேற்றி வைத்து விட்டால், பின்னர் உன்னைத் தொந்தரவு செய்ய மாட்டேன். அபாயத்துக்குப் பயந்து ஒளிந்திருக்கும்படியும் சொல்ல மாட்டேன். ஆண் பிள்ளைகள் அபாயத்துக்கு உட்பட வேண்டியவர்கள்தான். வீர சௌரிய பராக்கிரமங்களில் இணையில்லாதவன் என நீ புகழ் பெற வேண்டும் என்பது தான் என் ஆசை. ஆனால் மறுபடி நீ உன்னை அபாயத்துக்கு உட்படுத்திக் கொள்ளுவதற்கு முன்னால் என்னுடைய கோரிக்கையை நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும்..."

"இவ்வளவு பெரிய பீடிகை எதற்கு, அக்கா! நீ சொல்லுவதை என்றைக்காவது நான் மறுத்ததுண்டா?"

"மறுத்ததில்லை; அந்த நம்பிக்கையோடுதான் இப்போதும் கேட்கிறேன். ஆதித்த கரிகாலன் கலியாணம் செய்து கொள்ளவில்லை; கலியாணம் செய்து கொள்வான் என்றும் தோன்றவில்லை. சுந்தர சோழரின் குலம் உன்னாலேதான் விளங்க வேண்டும். என் விருப்பத்தை இந்த ஒரு விஷயத்தில் நீ நிறைவேற்றி

வைக்க வேண்டும்..."

''உன் விருப்பத்தை நிறைவேற்ற நான் சம்மதித்தால், எனக்குப் பிரியமான பெண்ணை மணந்து கொள்ள நீ சம்மதம் கொடுப்பாய் அல்லவா?''

''இது என்ன இப்படிக் கேட்கிறாய்? இருபது ஆண்டுகளாக நம் விருப்பங்கள் மாறுபட்டதில்லை. இதிலே மட்டும் தனியாக எதற்குச் சம்மதம் கேட்கிறாய்?''

"அக்கா! அதற்குக் காரணம் இருக்கிறது. நான் மணந்து கொள்ளும் பெண் நான் காணும் பகற் கனவுகளை நிறைவேற்றுவதற்கு ஒத்தாசையாயிருக்க வேண்டும் அல்லவா?''

"தம்பி! உன் பகற் கனவுகளை ஒரு பெண்ணின் ஒத்தாசை கொண்டு நிறைவேற்றிக் கொள்ளவா ஆசைப்படுகிறாய்?'' என்றாள் குந்தவை.

அச் சமயத்தில், "ஐயோ! ஐயோ! அக்கா! அக்கா!'' என்ற அபயக் குரல் கேட்டது. குரல் வானதியின் குரல் தான்.

(தொடரும்)



பாரதியார் ரோட்டில் இருந்த அந்த பைப் கடையில், கொரியரில் வந்த பார்சலை இறக்கி வைத்துவிட்டு சைக்கிளை எடுத்தபோது, 'கிருஷ்ணா' என்ற குரல் கேட்டுத் திரும்பினேன். இந்த இடத்தில் யார் நம்மை அழைக்கப் போகிறார்கள்? நமக்குத் தெரிந்தவர்கள் யார் இருப்பார்கள்? அதுவும் அழைப்பது பெண் குரலாய் உள்ளதே என்று யோசித்தபடி திரும்பியபோது, சந்திரா அண்ணி நின்றிருந்தாள். பைப் கடையில் இருந்து நாலு வீடு தள்ளியிருந்த ஒரு வீட்டு வாசலில்.

அது இரவு நேரம். மஞ்சள் பல்பு வெளிச்சத்தில் அண்ணியின் முகம் பிரகாசமாய் இருப்பதாய் உணர முடிந்தது. அண்ணி நான் வருவேன் என்று வாசற்படியில் நின்றிருந்தாள். இங்குதான் அண்ணியின் வீடு உள்ளதா? எனக்குத் தெரியாது. கடைசியாய் அண்ணியை பார்த்து மூணு வருஷம் இருக்கும். பெரியப்பா மகனோடு விவாகரத்து வாங்கின பிற்பாடு அண்ணியைப் பார்க்க முடியவில்லை. பார்க்கவும் முயற்சிக்கவில்லை. ''அவளைப் போய்ப் பார்க்கிற வேலையெல்லாம் வைச்சுக்காதே. யார் குடும்பத்திலும் இல்லாத காரியம் பண்ணியிருக்கா'' என்றாள் அம்மா. அண்ணி விவாகரத்து கோரியது யாருக்கும் பிடிக்கவில்லை.

அண்ணியை கொஞ்சம் கொஞ்சமாய் மறந்து விட்டேன் என்றுதான் சொல்ல வேண்டும். இப்போது கூட அண்ணியை நான் பார்த்து, அவள் என்னைப் பார்க்காமல் இருந்திருந்தால் அப்படியே போயிருப்பேன். ஆனால் என்னை அவள் பார்த்து விட்டாள். கண்டும் காணாத மாதிரி போக முடியாது. அப்படிப் போனால், அவள் முகமும், மனமும் சுருங்கக்கூடும். இவளை இனி பார்க்கக்கூடிய வாய்ப்பு கிடைக்காது தான். இவளது முகமும், மனமும் சுருங்கினால் எனக்கொன்றும் இல்லைதான்.

ஆனாலும் வெகு நேரத்திற்கு - இவளிடம் பேசாமல் கண்டும் காணாமல் வந்தது ஓர் உறுத்தலாய் இருக்கும். என் மனசு அப்படி. அதனாலேயே அண்ணியின் வீட்டுப் பக்கம் சென்றேன். அண்ணி மறு கல்யாணம் பண்ணிக் கொண்டதாய்க் கேள்விப்பட்டேன். பெரியப்பா மகனும் இன்னொரு கல்யாணம் பண்ணிக் கொண்டிருக்கும் போது - இவள் பண்ணிக் கொள்ளக் கூடாதா? அண்ணன் மறு கல்யாணம் பண்ணிக் கொள்வதற்கு முன்பாகவே அண்ணி மறு கல்யாணம் பண்ணிக் கொண்டிருந்தாள். 'இந்தக் கண்றாவி எங்கேயாவது நடக்குமா?' என்று பெரியம்மா பேசிக் கொண்டிருப்பாள். அண்ணன் -

**“நல்ல கணவன் கிடைத்திருந்தால், அண்ணி ஏன் விவாகரத்து கேட்கிறாள்? நியதிகளுக்குக் கட்டுப்பட்டு வாழ்கிறேன் என்று அடிபட்டே வாழ முடியுமா?”**





# முடியாதவர்கள்

யோகி

இப்போது கட்டிக் கொண்டவளோடும் சண்டை போட்டுக் கொண்டுதான் இருப்பதாய்த் தகவல்.

இந்த அண்ணி தங்கமானவள். எல்லோரிடமும் பிரியமாய்ப் பேசுவாள். என்னிடம் அதீதமான பிரியம். 'கிருஷ்ணா... கிருஷ்ணா...' என்று அன்பொழுகப் பேசுவாள். இவளோடு வாழ அண்ணனுக்குக் கொடுப்பினை இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். மாடி போர்ஷனில் பெரியப்பா குடும்பமும், கீழ் போர்ஷனில் நாங்களும் இருந்தோம். பெரியப்பாவுக்கு அண்ணன் ஒரே பிள்ளை. சின்ன வயதிலிருந்தே செல்லமாய் வளர்ந்ததால் தறிகெட்டுப் போனான். எல்லாக் கெட்ட பழக்கமும் கற்றுக் குட்டிச்சுவராய்ப் போயிருந்தான். 'கல்யாணம் பண்ணி வைத்தால் பொறுப்பு வரும்' என்று சந்திரா அண்ணியை முடித்தார்கள். தூரத்து சொந்தம்தான். நெருங்கின சொந்தத்தில் யாரும் அண்ணனுக்குப் பெண் தர முன்வரவில்லை – அண்ணனின் குணாதிசயம் தெரிந்திருந்ததால்...

பெரியப்பாவும் அப்பாவும் சேர்ந்து பெயிண்ட் கடை வைத்திருந்தார்கள். இப்போது சொத்து பிரித்து, தனித்தனியாக இருக்கிறோம். அண்ணி இந்த வீட்டுக்கு வந்த நாளிலிருந்தே என் மீது பிரியம் காட்டினாள். அப்பா கூடச் சொல்லுவார், 'நல்ல பொண்ணு. பாடாவதிப் பயலுக்குக் கட்டி வைச்சு இருக்காங்க. இது தலையெழுத்து என்னாகப் போகுதோ?' என்பார். அப்போது நான் பிளஸ் டூ படித்துக் கொண்டிருந்தேன். சந்திரா அண்ணி மேத்ஸ் நன்றாகப் போடுவாள். ரொம்பவும் விவரமானவள். பெரும்பாலும் கடைத் தெருவுக்கு நானும் அண்ணியும் சேர்ந்துதான் போவோம்.

அண்ணி கிராஜுவேட். நிறைய பேசுவோம். என் லட்சியம், கனவு பற்றிக் கூடப் பேசுவோம். எனக்கொரு சினேகிதி போல் ஆனது குறித்து நான் மகிழ்ந்தேன். அண்ணிக்கு என்னை விட ஐந்து வயது அதிகமிருக்கும். அண்ணி தன் மாமியாரிடம் ஒட்டியதை விட என் அம்மாவிடம்தான் அதிகமாய் ஒட்டிக் கொண்டாள். பெரியம்மா ரொம்பக் கடுமையானவள்.

அண்ணன் கல்யாணம் பண்ணிக் கொஞ்ச நாள் ஒழுங்காய் இருந்தான். பிறகு தன் வேலையைக் காட்டத் துவங்கினான்.

இவளைக் கொடுமைப்படுத்துவதும், தான் தோன்றித்தனமாய் நடந்து கொள்வதுமாய் இருந்தான். அவன் புத்தி, அவன் சுபாவம் அண்ணிக்கு அதிர்ச்சியளித்தது. பத்து நாளைக்கொருதரம் அண்ணி கோபித்துக் கொண்டு தன் தாய் வீட்டுக்குப் போவது வழக்கமானது. நான் காலேஜில் சேர்ந்த சமயம், விவாகரத்தைத் தவிர வேறு வழியில்லை என்கிற அளவுக்குப் போனது. விவாகரத்தும் நடந்து விட்டது.

அதன்பின் அண்ணியை நான் பார்க்கவில்லை. இப்போது இங்கு பார்த்ததும் தோன்றுகிறது. அத்தனை அன்பாய், சிநேகமாய்ப் பழகின அண்ணியை அதன்பின் வலியப் போயாவது பார்த்திருக்க வேண்டும். அப்படிப் போய்ப் பார்க்காதது தவறோ என்ற எண்ணம் தோன்றியது.

"என்ன கிருஷ்ணா... அண்ணியை ஞாபகம் இருக்கா? அண்ணி கூட பேசலாமா? வேணாமான்னு யோசிக்கிறியா?" - என்று சந்திரா அண்ணி கேட்டாள், சிரித்தவாறு.

அண்ணி நன்றாகப் பேசுவாள். நகைச்சுவை உணர்வு அதிகம். ஆனால் யார் மனமும் புண்படாதவாறு பார்த்துக் கொள்வாள். அவள் மனசுதான் ரொம்பவும் புண்பட்டு இருந்தது - அண்ணனுடன் வாழ்ந்த நாட்களில்.

"அதெல்லாம் இல்லீங்க" என்று சைக்கிளை நிறுத்தினேன்.

"உள்ளே வாப்பா."

"லேட்டாயிடுச்சு அண்ணி" - என்றேன்.

"அப்படியே போறேன்னு சொல்றியா? உள்ளே வா. என்ன இந்தப் பக்கம்?" என்று கையைப் பிடித்து இழுத்தாள்.

"ஒரு கொரியர்ல வேலை பார்க்கிறேன். ஒரு பார்சல் வந்தது. எமர்ஜென்ஸி. அதான் லஞ்ச் டைம்னாலும் உடனே வந்தேன்."

"அத்தை மாமா சௌக்கியமா?" என்று அப்பா அம்மாவை மறக்காமல் கேட்டு விட்டுத் தொடர்ந்தாள். "கொரியர்லயா வேலை பார்க்கிறே? நல்ல ஜாப்ல இருப்பேன்னு நினைச்சேன்."

செருப்பைக் கழற்றி விட்டு உள்ளே போனேன். 'அரியர்ஸ்' இருக்கு. எழுதிட்டா வேற ஜாப்க்கு டிரை பண்ணுவேன். இப்ப சும்மா இருக்கிறதுக்கு ஏதாவது ஒரு வேலைக்குப் போகலாம்னு..." என்றேன்.

சப்தம் கேட்டு யாரோ ஒருவர் வந்தார். "இது கிருஷ்ணா... தெரியுதா?" என்றாள் அண்ணி.

"ம்" என்றார் அவர். அவர் நல்ல பர்சனாலிட்டியாய் இருந்தார். இவர்தான் அண்ணியின் கணவரோ?

"உங்க வீட்டுக்காரரா அண்ணி?"

"ம். உட்காரு. காப்பி கொண்டு வரேன். கிருஷ்ணாவைப் பிடிச்சுக்கங்க. எழுந்திரிச்சு போயிடப் போறான்" என்று அண்ணி சிரித்தாள். எங்கே நான் போய் விடுவேனோ என்று நினைத்து, தூளியில் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையைத் தூக்கி என் மடியில் வைத்து விட்டுப் போனாள்.

அவர் என்னைப் பற்றிக் கேட்டார். விசாரித்தார் என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் அதில் வெகு அக்கறையும், பாசமும் இருந்தது. அண்ணி கிச்சனிலிருந்து கேட்டாள். "என்ன கிருஷ்ணா தாடி வைச்சிருக்கே? லவ் பெயிலியரா?" என்று கிண்டல் பண்ணினாள். இவர் சிரித்தார்.

ஹாலை பார்த்தேன். ஹாலின் அழகே, குடும்பத்தின் மகிழ்ச்சி நிலையை விளக்கியது. சந்தோஷமாய் இருக்கிறாள். மடியில் இருந்த குழந்தை விழித்துக் கொண்டு அழுதது. அதற்குள் அண்ணி காப்பியுடன் வந்தாள். "சித்தப்பா சொல்லு... சித்தப்பா" என்றாள் குழந்தையிடம்.

குழந்தை, "ஊ.... ஊ" என்றது. "பார்த்தியா எவ்வளவு அழகா சொல்லுது" என்றாள். குழந்தை ஒன்றுமே சொல்லவில்லை. இருந்தாலும் குழந்தை சொன்னதாய் நினைத்து மகிழ்ந்தாள். அண்ணியையே பார்த்தேன்.

"என்னப்பா பார்க்கிறே?" என்றாள். ஒன்றும் இல்லை என்பது போல் தலை

---

"பத்திரிகை போடற பையன் இந்த வாரப் புத்தகத்தை இப்படி வீசி எறிஞ்சிட்டுப் போறானே?"

"ஒருவேளை உங்க ஜோக் வந்ததைப் படிச்சிருப்பான்!"

— சீர்காழி வி.ரேவதி



யசைத்தேன். அண்ணி சந்தோஷமாய் இருப்பது கண்டு மனசு சந்தோஷப்பட்டது. அவர் குழந்தையைத் தூக்கிக் கொண்டு வாசல் பக்கம் போனார்.

"முதலிலேயே இவர் ஜாதகம் வந்தது. தோஷம் இருக்குன்னு அப்பா இவருக்குக் கொடுக்க மறுத்துட்டார். அப்புறம் உங்க அண்ணனை, பெரியப்பா மகனை பார்த்தது. அப்புறம் நடந்த விஷயங்களைக் கேள்விப் பட்டு திரும்பப் பெண் கேட்டு வந்தார். அப்ப அப்பா ஜாதகம் எல்லாம் பார்க்கலை. தோஷத்தைப் பத்தி கவலைப்படலை. நாமதானே எல்லாத்துக்கும் காரணம். நல்லவனா இருப்பதும், கெட்டவனா இருப்பதும் நம் கையில்தான் இருக்கிறது. நம்ம கை ரேகையும், நம்ம ஜாதகமும் என்ன பண்ணும்? நம் தவறுக்கு ஜாதகக் கட்டங்களைக் குறை சொல்லலாமா?" என்றாள்.

"ஆமா உனக்கு எப்போ கல்யாணம்?" என்று திரும்பக் கிண்டல் பண்ணினாள்.

மனுஷனுக்கு கட்டுப்பாடுகள், சம்பிரதாயங்கள் எல்லாம் தேவை தான். ஆனால் அது மனுஷனை இம்சிக்காது, அழச் செய்யாது இருக்க வேண்டும். தாம்பத்ய வாழ்க்கைக்கென்று நியதிகள் உள்ளன. நல்ல கணவன் கிடைத்திருந்தால், அண்ணி ஏன் விவாகரத்து கேட்கிறாள்? நியதிகளுக்குக் கட்டுப்பட்டு வாழ்கிறேன் என்று அடிபட்டே வாழ முடியுமா? மனிதனுக்குக் கிடைக்க வேண்டிய நியாயமான சந்தோஷங்களைக் கூட இந்த நியதிகள் பறிக்கக் கூடாது இல்லையா?

"நாமென்ன எதிரிகளா? வரவேண்டியது தானே வீட்டுக்கு. அத்தை ஏதாவது சொல்வாங்களா?" என்று கேட்டாள்.

"அப்படியெல்லாம் இல்லை. என்ன உறவுன்னு சொல்லி வர முடியும்?" - என்றதற்கு உற்றுப் பார்த்தாள்.

"ஏன்? அண்ணின்னே வரலாமே! அது பிடிக்கலைன்னா.... என்னை ஒரு நல்ல சிநேகிதியா நினைச்சு வரலாமே!"

"சரி அண்ணி!" என்று எழுந்தேன்.

"வரேன் அண்ணி. வரேங்க" என்று சொல்லிவிட்டு செருப்பைக் காலில் மாட்டினேன். சைக்கிளை எடுத்தபோது, "சித்தப்பாவுக்கு டாட்டா சொல்லு" என்றாள் அண்ணி. குழந்தையின் கையை அசைத்தாள். "சண்டே மறக்காமல் வா" என்றாள்.

தலையசைத்தேன். அண்ணி சந்தோஷமாய் இருப்பது கண்டு மனசு சந்தோஷமடைந்தது. இத்தனை நாள் இவளது வாழ்க்கை நிலை எப்படியுள்ளது என்பதை அறிந்து கொள்ளாமல் இருந்தது குறித்து என் மீதே எனக்கு எரிச்சல் ஏற்பட்டது. ●

## மலேசியாவில் ஒரு பிசா கோபுரம்

பிசா நகரத்து சாய்ந்த கோபுரம் உலகப் பிரசித்தம். அதேபோல் ஒரு சாய்ந்த கோபுரம் மலேசியாவிலும் இருக்கிறது என்பது பலருக்குத் தெரியாது. மலேசியத் தலைநகரான கோலாலம்பூரிலிருந்து சுமார் நூற்றைம்பது கி.மீ. தூரத்தில் உள்ள டெலுக் இன்டன் என்கிற ஊரில் இந்த சாய்ந்த கோபுரம் உள்ளது.



இதைக் கட்டியவர் லியாங் சூன் சாங் என்ற தொழிலதிபர். இந்த எட்டு அடுக்குக் கோபுரம் 1885ல் கட்டப்பட்டது. இது செங்கல்+ பச்சை நிற பளபளக்கும் டைல்ஸ் கொண்டு கட்டப்பட்டுள்ளது. இதன் ஏழாவது மாடியில் பெரிய கடிகாரம் ஒன்று இருக்கிறது. உயரம் எண்பத்து நாலு அடி.

1889ம் ஆண்டு, இந்த கோபுரம் லேசாக சாயத் தொடங்கியது. இதற்கு அஸ்திவாரத்தில் ஏதோ தவறு என்று காரணம் சொல்லப்பட்டது. ஆனால் 1895ம் ஆண்டில் சாய்ந்த நிலையில் அப்படியே நின்று விட்டது. கடவுளின் சாபம்தான் இந்த சாய்வுக்குக் காரணம் என்று உள்ளூர் மக்களில் ஒருசாரர் நம்புகிறார்கள். இதனால் அப்போது, அந்த ஊரை விட்டு வெளியேறினவர்களும் உண்டு.

இன்று இது சுற்றுலாப் பயணிகளைக் கவரும் ஓர் அம்சமாகிவிட்டது.

– சி.எம்.

3

'எம்.எல்.ஏ என்பது உதவாத பதவிதானா? இந்தப் பதவியை வைத்துக்கொண்டு சட்டசபையில் கோரிக்கை வைக்க முடியும். வேறென்ன செய்ய முடியும்? நிறைவேறுமோ, நிறைவேறாதோ என்கிற கவலை தாண்டி கோரிக்கை மட்டும் வைக்கலாம். மற்றபடி பலமெல்லாம் மந்திரிகள் கையில், மந்திரிகளிடம் கேட்டு வேலை வாய்ப்பு, டிரான்ஸ்ஃபர் போன்ற சில கோரிக்கைகளை முடிக்கலாம். மனதிருந்தால் இடையாட்கள் மூலம் லஞ்சம் வாங்கிக் கொள்ளலாம். மற்றபடி என்னத்தைச் சாதிக்க முடியும்? ஐந்து வருடங்கள் பதவியில் இருந்ததற்கு என்ன அடையாளம்? அதிர்ஷ்டவசமாய் பதவிக் காலத்திலேயே எங்கேனும் சின்னதாக ஒரு பாலம் கட்டிவிட்டால் போதும், ஒரு கிராமத்திற்கு தார்ச் சாலை போட்டால் போதும். அடுத்த தேர்தலில் அது தன்னால் ஆனதென்று சொல்லி வோட்டு கேட்கலாம். தொகுதியில் அணை மாதிரி திட்டம் ஏதேனும் உருவானால் பெரிய அதிர்ஷ்டம்.'

– சங்கரனின் மனம் இப்படி பேசிக் கொண்டது.

வாடகைக்கு கடை கேட்கப் போன இடத்தில் அறிவுரைதான் சொன்னார்கள்.

"எதுக்குத் தம்பி பெரிய இடத்தல மோதற.. புதுசா வந்திருக்கே... வந்த வேகத்திலேயே எம்.எல்.ஏ ஆயிட்டே. அதைத் தக்க வைச்சுக்க... அவசரம் ஆத்திரம்னா நாங்க மண்டித் தெருவுக்குத்தான் ஓடணும். அவங்களைப் பகைச்சுக்க முடியாது. நீயும் பகைச்சுக்காதே... அவங்களை கையில் போட்டு வைச்சுக்க... எலக்‌ஷன்ல மறுபடியும் ஜெயிக்கிறதுக்கு உதவுவாங்க... வருங்காலத்துல மந்திரியாவும் ஆக முடியும்."

"என்ன செய்யணும்னு சொல்றீங்க..?"

"விட்டுடுங்க, மண்டித்தெருக்காரங்க கிட்ட மோதுவதை விட்டுடுங்க... பிராந்திக் கடையை எவ்வளவுக்கு ஏலம் எடுத்திங்களோ அதுக்கு மேல அம்பதாயிரம் ஒரு லட்சம்னு லாபம் வாங்கிக்கிட்டு அவங்க கிட்டேயே விட்டுடுங்க. பிராந்திக் கடை தவிர்த்து வேற எந்தக் கடைன்னாலும் வைங்க. நாங்க வாடகைக்கு விடறோம். எம்.எல்.ஏ, எங்களை வந்து மதிச்சிக் கேட்கிறீங்க... நாங்களும் மதிப்புத் தர்றதுதான் மரியாதை. மதிக்கிறோம். ஆனா, பிராந்திக் கடைக்கு மட்டும் விட மாட்டோம். நீங்க இன்னைக்கு ஆட்சில இருப்பீங்க. நாளைக்கு இருக்க மாட்டீங்க... மண்டித்தெரு அப்படியில்லை. எப்பவும் இந்த நகரத்துல அதோட ஆட்சிதான். மண்டித்தெரு உதவி இல்லாம நாங்க வாழ முடியாது."

அறிவுரையைக் கேட்டுக்கொண்டு, புறமுதுகிட்டு ஓடி வர வேண்டி இருந்தது. ஆனால், புத்தி, ரணப்பட்ட மனம் புறமுதுகிடவில்லை.

ரைஸ் மில்லிற்கு திரும்பினான்.

"பேசாம அவங்களுக்கே கொடுத்திடலாம்ங்க. நாம மோத வேணாம், மூக்கு உடைபட வேணாம்." நண்பர்கள் சொன்னார்கள்.

சம்மதிக்க முடியவில்லை.

தோற்றுப் போகிற தைரியம் அவனிடம் இல்லை.

"யோசிச்சா வழி கிடைக்கும். யோசிக்கலாம். மேலும் மேலும் அவங்களே வளர்ந்துட்டுப் போனா நீங்க எப்போ வளர்றது? பிராந்திக்கடை கவர்மெண்ட் அனுமதி கொடுக்கிற சமாச்சாரம், இது ஜனநாயக நாடு. இங்க யார் வேணும்னாலும் பிராந்திக்கடை வைக்கலாம்."

"சரி! அதனால்தான் ஏலம் எடுத்தோம். கடை கிடைக்கணுமே... இது ஜனநாயக நாடு. பில்டிங் சொந்தக்காரங்களை எங்களுக்கு வாடகைக்கு விடுங்கன்னு மிரட்டவா

# அரசியலுக்கு பிராந்தியம்



முடியும்? நம்மாள மிரட்ட முடியாது. மண்டித்தெருக்காரங்க மிரட்டுவாங்க வாடகைக்கு விடாதீங்கன்னு..."

"நாமும் அஹிம்சை வழியைக் கை விடணும். எதிர்த்து நிற்கணும்."

"எப்படி?"

"முடியும். யுத்தத்துல இறங்கினாத்தான் முடியும்னா அதுவும் என்னால முடியும்..."

"எப்படி?"

"சொல்லலை. எப்படின்னு சொல்லாம செய்றேன். செஞ்சி முடிச்சிட்டு வந்து நிக்கிறேன்."

"வேணாங்க... நமக்கு இன்னும் காலம் இருக்கு, அப்போ பார்த்துக்கலாம். பின்னாடி மோதிக்கலாம்."

"அப்படி விட்டுத்தான் நாம தரை மட்டத்துக்குப் போறோம். விடக்கூடாது. இப்பவே ஜெயிக்கணும்."

"தலைவர்கிட்ட சொல்லப் போறீங்களா?"

"இல்லை. பலன் கிடைக்காதுன்னு தெரியும். தலைவர் பணக்காரங்க சைட்லதான் பேசுவார். ஏன்னா அவங்க உதவி இல்லாம கட்சி நடத்த முடியாது."

"தலைவரே அவங்க உதவி இல்லாம கட்சி நடத்த முடியாதுன்னா, நாம எந்த மூலைக்கு? துரும்பு இன்ற மாதிரி இன்னிப் போட்டுடு வாங்க."

"நாம ஏன் நம்மைத் துரும்பா நினைக்கணும்?"

மேற்கொண்டு

பேசவில்லை.

அமைதியாகி விட்டார்கள்.

ஆவேசமாய் வந்து காரில் ஏறினான் சங்கரன்.

"தாசில்தார் ஆபீஸ் போ" என்றான் டிரைவரிடம்.

தாசில்தார் வரவேற்று உட்கார வைத்தார்.

"ஸார்! நீங்க எனக்கு ஒரு உதவி செய்யணும்?"

"சொல்லுங்க."

"கண்டிப்பா செய்வீங்களா?"

"சொல்லுங்க."

"ஸார்! நீங்க என்ன சட்டத்தைக் கையில எடுப்பீங்க, எப்படிச் செய்வீங்க, என்ன செய்வீங்க எனக்குத் தெரியாது. உடனடியா எனக்கு ஒரு காரியம் செய்யணும்." கைக் குட்டை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டான்.

"ப்ளீஸ். சொல்லுங்க." எந்தவித உணர்ச்சியும் முகத்தில் இல்லாமல் கேட்டார் தாசில்தார்.

"உடனடியா கவர்மெண்ட் இடத்துல யார் கட்டி இருந்தாலும் அந்த பில்டிங்கை இடிச்சித் தள்ளணும். ஹை வேஸ்ல, புறம் போக்குல எங்கே இருந்தாலும் இடிச்சித் தள்ளணும். எவ்ளோ பெரிய பில்டிங்கா இருந்தாலும் சரி, எவ்வளவு பெரிய மனுஷனோட பில்டிங்கா இருந்தாலும் சரி, இடிச்சித் தள்ளணும். ரொம்ப முக்கியம்."

அவர் வெறுமையாய் புன்னகை செய்தார். ஒரு நொடி கண்களை மூடி யோசித்தார். பிறகு "ஸாரிங்க..." என்றார்.

"ஸார்!" தொண்டை அடைத்தது.

"எப்படிங்க முடியும். நாங்க இடிக்கப் போகும்போது இதுக்கு முன்னிருந்த எம்.எல்.ஏங்க, எம்.பிங்கதான் இடிக்க வேணாம்னு சொல்வாங்க..."

"இப்போ நான் நிக்கிறேன்."

"என்னத்துக்கு? வேணாம் விட்டுடுங்க... அப்பாவிங்க ஏழைங்க குடிசைகளை வேணும்னா இடிச்சித் தள்ளலாம். அவங்களால எதிர்த்துக் கேட்க முடியாது. பெரிய பெரிய புள்ளிகள்கிட்ட மோத முடியாதுங்க..."

"நான் இருக்கேன் ஸார். ப்ளீஸ்."

"ப்ளீஸ். வேணாம். எதுக்காக இப்படி? நான் தெரிஞ்சுக்கலாமா?"

டேபின் மேலிருந்த தண்ணீரை எடுத்துக் குடித்தான்.

"நம்ம டவுன்ல பிராந்திக் கடைங்க எப்படி ஏலம் போயிருக்கு?"

"சூப்பரா! யாரும் எதிர்பாராத அளவுக்கு! ஆச்சர்யமாவும் இருக்கு. இவ்ளோ அதிகமா எங்கேயும் போனதில்லை."

"அரசாங்கத்துக்கு வருமானம்தானே?"

"ஆமாம்."

"இவ்ளோ போனதுதான் ஸார் கரெக்ட்... இவ்ளோ நாளா கவர்மெண்ட் கண்ணுல மிளகாய்ப் பொடி தூவிட்டிருந்தாங்க... இப்போ போன ஏலம்தான் நியாயமான ஏலம். பட், ஏலம் எடுத்தவங்களால கடை வைக்க முடியலை. ஏன்னா, கடை கிடைக்கலை. எவ்ளோ நாளைக்கு ஸார் பணக்காரங்களே பணக்காரங்களா ஆயிட்டுப் போவாங்க... ஏழைங்க, நடுத்தர மக்கள் என்ன ஆகிறது? சுமாரா வசதி படைச்சவங்க ஆளுக்குக் கொஞ்சம் பணம் போட்டு பிராந்திக்கடை எடுத்திருக்காங்க ஸார். படிச்ச இளைஞர்கள்."

"சரி! இதுக்கும் பில்டிங் இடிக்கிறதுக்கும் என்ன சம்பந்தம்?"

"இருக்கு."

"சொல்லுங்க."

"பெரும்பாலான அரசாங்க இடத்தல பில்டிங்கை கட்டியிருக்கிறது மண்டித் தெருக்காரங்க... அதை இடிச்சித் தர்றது மூலம்தான் அவங்களை அடக்க முடியும். மொத்தமா இடிக்க வேண்டியதே இல்லை. ஒரு பில்டிங் இடிச்சாலே போதும். அவங்க இறங்கி வந்துடுவாங்க... பிராந்திக் கடை வைச்சிக்கறதுக்குக் கடை கொடுக்கிறதா முன் வருவாங்க... அப்படி வந்தால் மேலும் இடிக்கிறதை நிறுத்திடலாம்."

"பார்த்தீங்களா... நீங்களே பேக் காகிறீங்க..."

"பேக் ஆகலை ஸார். வந்து..."

"எனக்கு என்னவோ நம்பிக்கை இல்லை."

"ப்ளீஸ் ஸார்!"

"செய்றேன். இன்னைக்கே சம்பந்தப் பட்ட அதிகாரிங்க கிட்ட சொல்லிடறேன். ஏற்கெனவே ஃபைல் இருக்கு. தூசி தட்டி எடுக்கணும். இந்தத் தேதில இடிக்கிறோம்னு நோட்டீஸ் அனுப்பணும். அவங்க கோர்ட்டுக்குப் போய் ஸ்டே வாங்க முடியாதபடி நெருக்கடியா செய்யணும்."

"செய்யுங்க ஸார்."

"செய்யலாம் வாங்க."

"ரொம்ப தாங்ஸ் ஸார்."

எழுந்து நின்று கை குவித்தான்.

அவர் மறுபடியும் அந்த வெற்றுப் புன்ன

கையைக் காட்டிக் கை குவித்தார்.

அங்கிருந்து வந்தான்.

மனம் மலர்ந்துகொண்டது.

ஒரு பில்டிங் இடிக்கும்போதே மண்டித் தெரு மகாராஜாக்கள் ஓடி வந்து மண்டியிடப் போறாங்க... உங்களுக்குப் பிராந்திக் கடை வைக்க இடம்தானே வேணும். நாங்க ஏற்பாடு பண்றோம். இடிக்க வேணாம்னு சொல்லுங்கன்னு கெஞ்சப் போறாங்க...

சந்தோஷம் பூத்தது.

மறுநாள்,

தாசில்தாரிடமிருந்து போன் வந்தது.

"ஸார்..."

"நல்லா யோசனை பண்ணீங்களா, இடிக்கலாமா?"

"இடிக்கலாம் ஸார். யோசனையே வேணாம்."

"இதனால உங்களுக்கும் பாதிப்பு..."

"சொல்லுங்க..."

"உங்க ரைஸ் மில்லுல இருக்கிற ரெண்டுக் கடை அரசாங்க இடம். அதையும் இடிக்க வேண்டியது வரும்."

சங்கரன் எந்தப் பாதிப்பும் அடையவில்லை.

"எனக்குத் தெரியும் ஸார். தாராளமா இடிங்க. முதல்ல என் இடத்துல இருந்தே ஆரம்பிங்க. என் கடையை இடிங்க..." என்றான் துள்ளலாய்.

"ஓ.கே. இன்னைக்கே நோட்டீஸ் அனுப்பிடறேன்."

உற்சாகமானான்.

அவனுக்கும் நோட்டீஸ் வந்தது.

அவர்களும் வந்தார்கள்.

போலீஸ்காரர்கள் பாதுகாப்பு இருந்தது.

முதலில் சங்கரன் பில்டிங் பலியானது.

அளவுக் கயிற்றைப் பிடித்து, எதுவரை இடிக்க வேண்டிய இடம் என்று குறி வைத்ததும் இடித்துத் தள்ளினார்கள். தெருவை ஒட்டி இருந்த இரண்டு அறைகள் துண்டு துண்டாய் விழுந்தன.

இடிப்புக் குழு அடுத்த இடத்தை நோக்கி முன்னேறிற்று. ஏற்கெனவே நோட்டீஸ் அனுப்பி இருந்தும் யாரும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை.

சங்கரனுக்குப் போன் வந்தது.

போனை எடுத்தான்.

அமைச்சர்.

சங்கரனை இடி இடியென்று இடித்துத் தள்ளினார்.

"என்னய்யா மனசுல நினைச்சுட்டிருக்கே... உடனே வந்து என்னைப் பார்."

சங்கரன் பின் வாங்குவதாக இல்லை. இடித்துத் தள்ளுவது தள்ளுவதுதான். அதைத் தடுக்கக் கூடாது. அவனுடைய அறையிலேயே உட்கார்ந்துகொண்டான். 'அவ்வளவுதான் மண்டித்தெருக்காரங்க ஆடிப் போயிடப் போறாங்க..."

ஆனால் நடந்தது வேறு.

அமைச்சர், நகராட்சி அதிகாரிக்கும், தாசில்தாருக்கும் போன் பண்ணி விட்டார்.

எம்.எல்.ஏ. பதவி பெரிசா, அமைச்சர் பதவி பெரிசா?

அமைச்சர் சொல்வதைத்தான் கேட்பார்கள்.

இடிப்பதை நிறுத்தி விட்டுப் போய் விட்டார்கள்.

விஞ்ஞானம் வளர்ந்து விட்டதற்காக அப்போதுதான் முதல்முறையாக வருத்தப்பட்டான். சீக்கிரத்தில் தகவல்கள் போய் விடுகிறது, மேலிடத்திற்கு. மாற்றங்கள் என்பது மணித்துளிகளில் நிகழ்வதற்கு விஞ்ஞானம் காரணமாயிருக்கிறது.

மறுபடியும் அமைச்சரிடமிருந்து போன்.

"உடனே வந்து என்னைப் பார்."

போனான்.

விட்டால் கடித்துக் குதறி விடுவார் போல் எகிறினார். "என்னய்யா மனுஷன் நீ, எம்.எல்.ஏன்னா கொம்புன்னு நினைப்பா? கட்சி இல்லையா? நாங்க இல்லையா? எங்களையெல்லாம் கேட்காம உன் பாட்டுக்கு வேஷம் கட்டிக்கிற... இளம் ரத்தம் துடிக்குதா? விசுவாசமா இருப்பேன்னுதான் உனக்கு ஸீட் தந்திருக்காங்க. நீ எம்.எல்.ஏ.



**"த்சொ த்சொ! அதிர்ச்சியில் செத்துப் போயிட்டாரா... எப்படி?"**

**"அவரிடம் ஒரு கிழியாத ஐந்து ரூபாய் நோட்டைக் கொடுத்தேன்!"**

**— வெ. ராஜாராமன்**

## பிங்காவைத் தெரியுமா?

இந்திய கிரிக்கெட் அணியின் புதுமுகமான விஜய் பரத்வாஜ் பெங்களூரில் செட்டிலானவர் என்றாலும் திருச்சியில் பிறந்தவர். இத்தனை சீக்கிரம் இந்திய அணியில் இடம் கிடைக்குமென்று எதிர்பார்த்தீர்களா என்றபோது, "ஆமாம். நான் எடுத்த ரன்கள் எனக்காகப் பேசின!" என்றார்... இவரது செல்லப் பெயர்: பிங்கா.

— உமாமணி

ஆலது எப்படி-ன்னு யோசிச்சியா? ஜனங்க உனக்கா வோட்டுப் போட்டாங்க... கட்சிக்கு, கட்சி சின்னத்துக்கு, தலைவர் மூஞ்சிக்கு... கட்சி வளர்க்கிறதுக்கு யார் காசு தர்றாங்களோ அவங்க மடியிலேயே கை வைச்சா எப்படி? அடுத்த எலக்சன்லயும் ஸீட் கிடைக்கணும். அதுக்கு வழியைப் பாரு. ஏதோ ஆட்சில இருக்கிறபோதே தொகுதில இருக்கிற புறம்போக்கை வளைச்சி போடுய்யான்னா..."

அமைச்சர் திட்டுவது போலவும், அறிவுரை கூறுவது போலவும் கூறினார்.

"எப்படிங்க? அவங்க செய்றது நியாயமே யில்லை. யாரும் கடை வாடகைக்கு விடக் கூடாதுன்னு கண்டிஷன் போட்டிருக்காங்க... இத்தனை காலமும் போட்டி இல்லாம ரொம்பக் கம்மியா ஏலம் கேட்டு எடுத்து வந்திருக்காங்க... அவங்களை எடுக்க விடாம பண்ணதால இப்போ கவர்மெண்ட்டுக்குக் கோடிக் கணக்குல வருமானம்."

"அப்படிங்களா... அப்படிங்களா...? கவர்மெண்ட்டுக்குக் கோடிக் கணக்குல வருமானங்களா? கவர்மெண்ட் உங்களுக்கு மவுண்ட் ரோட்ல சிலை வைக்கப் போகுதுங்களா? அறிவுகெட்ட முண்டம்! கவர்மெண்டாவது, வெங்காயமாவது... கவர்மெண்ட்டை நீ வாழ வைக்காதே.. கவர்மெண்ட்டே வாழ்ந்துக்கும். நம்ம கவர்மெண்ட் பொழைக்குமா, யோசிச்சியா? தீவிரவாதிங்கள கைல போட்டுக்கிட்டு நாலு இடத்தல பாம் வைச்சிட்டு, எதிர்க்கட்சியைக் கத்த விட்டுடுவாங்க.. சட்டம் ஒழுங்கு சரியில்லை கலைன்னு. நாம வீட்ல போய் தலைமேல துண்டு போட்டுக்கிட்டு உட்கார்ந்துக்க வேண்டியதுதான். அவ்வளவுதான் போ... அவருக்குத் தெரியாம இருக்குமா, அவரை நான் பார்த்துக்கிறேன். நானே கண்டிச்சதாச் சொல்லிக்கிறேன். மண்டித் தெருக்காரங்களோட நல்லபடியா போயிடு. அது உனக்கு நல்லது."

அமைச்சர் மீது கோபம் கொதித்துக் கொண்டு வந்தது. அமைச்சரிடம் கோபத்தைக் காட்ட முடியவில்லை.

'மக்கள் இவங்களை நம்பி கவர்மெண்ட்டை தர்றாங்க... இவனுங்க நாசமாக்கறாங்களே...'

தலை கவிழ்ந்து வேதனையுடன் நின்றான்.

"என்ன யோசிக்கிற? இதுக்குத்தான் அரசியலுக்கு புதுசாக் காலெடுத்து வைக்கிறவங்களை ஸீட்ல உட்கார வைக்கக் கூடாதுங்கறது... போ... இதுல யாருக்குப் பாதிப்பு தெரியுமா? உனக்குத்தான். அரசு அதிகாரிங்களும் மண்டிக்காரங்க கையில... புரிஞ்சுதா. நீ அரசாங்க இடத்தல இருக்கிற பில்டிங்கை இடிக்கச் சொல்லிக் கேட்டே. நோட்டீஸ் அனுப்பின போதே அவங்க வந்து என்னைப் பார்த்துட்டாங்க.. எதையும் இடிக்க வேணாம்னு நான் சொல்லிட்டேன். ஆனாலும் உன் கட்டடத்தை இடிக்கிறதுக்காகவே வந்திருக்காங்க... இடிச்சது உன்னோட கட்டடம் மட்டும்தான். இது மண்டித்தெரு ஆளுங்களோட கட்டளை. அதிகாரிங்க அவங்க சொன்னதைக் கேட்டு உன் பில்டிங்கை இடிச்சிருக்காங்க... அவங்க நினைச்சிருந்தா உன் பில்டிங்கை இடிக்காம விட்டிருக்கலாம்."

கேட்க, கேட்க நொறுங்கிப் போனான்.

கண்களில் நீர் முட்டியது.

மண்டித் தெருக்காரர்கள் மீது இன்னும் கோபம் அதிகமாயிற்று.

அடி வாங்க, அடி வாங்கத்தான், பாம்புக்குக் கோபம் அதிகரிக்கும்.

(தொடரும்)

# பலன் மிக்கதும் பாதுகாப்பானதும்
# TDFC யின் முதலீட்டு திட்டங்களே!

## 13.14%

36 மாதம் அதற்குமேல்
13% மாதாந்திர வட்டி உண்டு
1வருடம் 12.12% மற்றும்
25 மாதங்கள் 12.63% காலாண்டிற்கு

## 18.18%

60 மாதங்களுக்கு
வருடவட்டி 13% மாதந்தோறும்
கூட்டுவட்டி முறையில் கணக்கிடப்படும்.

- Rating from CRISIL FA(+) indicates adequate safety.
- Registered with RBI as NBFC vide Regn. No.: 07.00403

மேலும் விபரங்களுக்கு



## தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதி நிறுவனம் லிமிடெட்.

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : 39, கிரீம்ஸ் சாலை, எம்.எஸ். அலுவலக வளாகம், சென்னை-6.

**தொலைபேசி : 8292059, 8292917, 8293351, தந்தி :TAFCON. P.B.No.719**

கிளைகள் :

★ டிடிசி பேருந்து நிலையம், காந்திபுரம், கோயம்புத்தூர்-641 044, தொலைபேசி : (0422)497102
★ டிடிசி பேருந்து நிலைய வளாகம், திருச்சி-620 001, தொலைபேசி:(0431)464188
★ ராணி மங்கம்மாள் சத்திரம், மதுரை-625 001, தொலைபேசி:(0424)741686
★ முனிசிபல் அலுவலக வளாகம், காமராஜர் சாலை, ஈரோடு-638 001, தொலைபேசி : (0452)258204

- உள்ளூர் காசோலைகள் மற்றும் சென்னை வரைவோலைகள் மட்டுமே பெற்றுக்கொள்ளப்படும்.
- காசோலைகளும், வரைவோலைகளும், சனி மற்றும் ஞாயிற்றுக்கிழமைகளிலும் சென்னை அலுவலகத்தில் ஏற்கப்படும்

**உங்களது முதலீடு "டிடிஎப்சி" யில் பாதுகாப்பானது - பத்திரமானது**

இந்த விளம்பரம் கம்பெனியால் 29.9.99 தினகரனில் வெளியிடப்பட்ட சட்ட பூர்வ விளம்பரத்தின் தொடர்ச்சியாகும்.

DIPR/1267/DIS/99/ELEGANT

1999 தீண்டாமை ஒழிப்பு, மத நல்லிணக்கம் மற்றும் சமூக ஒற்றுமை ஆண்டு



(படம்: யோகா)

பழைய

குடும்பத்தில் மூத்த மகன் என்பதால், குடும்பப் பொறுப்புகளிலிருந்து விடுபட்டு, மேஜிக் ஷோ நடத்துவதற்காக நான் ஊர் ஊராகச் செல்வதை என் தந்தை விரும்பவில்லை. என் தந்தையின் மற்ற சகோதரர்களும் இதே கருத்தைத்தான் கொண்டிருந்தனர். எனக்குள்ள மேஜிக் ஆர்வம் காரணமாக எங்கே நான் வியாபாரத்தை விட்டுவிட்டு, முழு நேர மேஜிக் கலைஞனாக ஆகிவிடுவேனோ என்று அவர் உள்ளூர பயப்பட ஆரம்பித்தார். எனவே, மனம் திறந்து அவர் என்னிடம் தமது கருத்தை வெளியிட்டார். நானும் அவரது உணர்வுக்கு மதிப்பளித்து, சகோதரிகளின் திருமணம் முடிகிறவரை, என் தம்பிகள் வளர்ந்து, தலையெடுக்கிற வரையில், வியாபாரத்திலிருந்து என்னை விடுவித்துக் கொண்டு, முழு நேர மேஜிக் கலைஞனாகி விட மாட்டேன் என்று உறுதிமொழி அளித்தேன். அதன் பிறகுதான் அவருக்கு மனத்திருப்தி ஏற்பட்டது.

அப்பாவுக்குக் கொடுத்த வாக்குறுதி காரணமாகத்தான், என் மேஜிக் ஷோ அரங்கேற்றத்துக்குக் கிடைத்த பாராட்டுகளையெல்லாம் மீறி, மறுநாள், காலை எட்டு மணிக்கு, வழக்கம் போல கடையைத் திறந்தேன். அன்றைக்கு, என் அப்பா, உணர்ச்சி பொங்க, என்னைக் கட்டித் தழுவிக் கொண்டார்.

அந்தக் காலத்தில், மேஜிக் ஷோக்களின் போது, மேஜிக் கலைஞர்கள் பளபளக்கிற கறுப்பு நிற உடை அணிந்து மேடையில் தோன்றுவார்கள். மேடையின் குறைந்த வெளிச்சத்தில் அவர்களைப் பார்க்கக் கொஞ்சம் பயமாகக் கூட இருக்கும். முதல் காட்சியிலிருந்து கடைசி வரையில் அதே உடையில்தான் தோன்றுவார்கள். திருமணம் போன்ற வைபவங்களுக்கு வாசிக்கிற பாண்டு வாத்தியக் கலைஞர்களை, இரண்டு மேஜிக் ஐட்டங்களுக்கு இடைப்பட்ட, நேரத்தில் இசை எழுப்பச் செய்வார்கள். மேஜிக் கலைஞரும் சரி, அவருடைய உதவியாளர்களும் சரி, திரைக்குப் பின்னாலிருந்து நேரே மேடைக்கு வந்து, ஐட்டத்தை முடித்ததும் விடுவிடுவென்று உள்ளே சென்று விடுவார்கள்.

நான், என் கற்பனையைப் பயன்படுத்தி இவை எல்லாவற்றையும் மாற்றி அமைத்தேன். அந்தக் காலகட்டத்தில் அவை புரட்சிகரமான மாறுதல்கள் என்று சொன்னார்கள்! நான் அப்படி என்ன செய்து விட்டேன் என்கிறீர்களா?

முதலில் உடை. நான் துணி வியாபாரி என்பதால், அவற்றில் எனக்கு தனி ஈடுபாடு

உண்டு. நம் வீட்டுத் திருமணங்களில், மண மகனும், மணமகளும் வேளைக்கு வேளை புதுப்புது உடைகள் அணிவதுதானே வழக் கம்? அதைப் போலவே நான் விதம்விதமான உடைகளை அணிந்து கொண்டு மேடையில் தோன்றினேன். காட்சிக்குக் காட்சி உடை மாறுவது கூட மேஜிக் போல இருப்பதாகப் பாராட்டினார்கள்.

முழு நிகழ்ச்சிக்கும், மேடையில் ஒரே மாதிரியான வெளிச்சம் இருப்பதற்குப் பதிலாக, ஒளி அமைப்பில் பிரத்யேக கவனம் செலுத்தி வண்ணவிளக்குகளால், மேடையைப் பிரகாசிக்கச் செய்தேன். காட்சிகளுக்கு ஏற்ப பளீரென்ற வெளிச்சம், மிதமான வெளிச்சம், மின்னலடிக்கும் வெளிச்சம், சுழலும் ஒளி, மிதமான இருட்டு. மேடையின் குறிப்பிட்ட சிறு பகுதியில் மட்டும் மேலிருந்து பாயும் ஸ்பாட் லைட் என்று ஒளி அமைப்பைச் செய்தது, அனை வரையும் கவர்ந்தது.

அடுத்தது இசை. சினிமாவில் படம் முழுக்கப் பின்னணி இசை வந்து கொண்டே இருப்பது போல, நேர இடைவெளியை நிரப்ப இசை என் பதை மாற்றி, ஷோ முழுக்க காட்சிக்கு ஏற்ப பின்னணி இசை அமைத்தேன்.

# ஜிப்பாக்களை மாற்றினேன்!

இசை என்றால் கூடவே நடனமும்தான். மேஜிக் ஐட்டங்களில் இடம்பெறும் பெண் கள் மற்றும் உதவியாளர்கள் விஷயத்திலும் ஏதோ இயந்திரத்தனமாக 'வந்தோம் போனோம்' என்று இல்லாமல், நடனம் போல ஒரு நளினத்தைப் புகுத்தினேன்.

இவைகளைத் தவிர இன்னொரு முக்கியமான விஷயம், பொதுவாக, மேடை யில் மேஜிக் கலைஞர்கள் நிறையப் பேசு வார்கள். குறைந்த எண்ணிக்கையில் மேஜிக் ஐட்டங்கள் செய்வார்கள். ஆனால், என் குரு கீதா பாபுவின் ஆலோசனைப் படி பேச்சைக் குறைத்து, கிடுகிடு வென்று, ஷோ ஆரம்பித்த கையோடு, ஏழெட்டு ஐட்டங்களைச் செய்து காட்டி பார்வையாளர்களை அசத்தினேன்.

**1951**–ம் வருடம் ராக்சி அரங்கில் என் அரங்கேற்றம் நடைபெற்றது என்றா லும், என் குடும்பப் பொறுப்பு என்கிற வேலி, என் மேஜிக் ஆர்வத்துக்குத் தடை யாகவே இருந்தது. நானும் பொறுமையுடன் காத்துக் கொண்டிருந்தேன். ஆம்! சுமார் ஒன்பது வருடங்கள் காத்துக் கொண்டிருந் தேன். அப்போதுதான், ஒரு கஸ்டமர் உருவில் எங்கள் கடைக்கு அதிர்ஷ்டம் வந்து கதவைத் தட்டியது.

ஒருவர், எங்கள் கடைக்குத் துணி வாங்க வந்திருந்தார். கேஷுவலாக அவருடன் பேச்சுக் கொடுத்தபோது, அவர் மும்பை நகரைச் சேர்ந்தவர் என்றும், அங்கே உள்ள இந்தியன் நேஷனல் தியேட்டர் என்ற அமைப்பைச் சேர்ந்த முக்கியஸ்தர் என்றும் தெரிந்தது. அவர் எதற்காகக் கல்கத்தா வந்தார் என்று விசாரித்தபோது, அவர்களு டைய அமைப்பின் சார்பில் சில நாட் களுக்கு மேஜிக் ஷோ நடத்த, நல்லதொரு மேஜிக் கலைஞரைப் பார்த்துப் பேசி புக் பண்ணும் நோக்கத்துடன் கல்கத்தா வந்தி ருப்பதாகக் கூறினார். இதைக் கேட்டவுடன் எனக்குள்ளே ஒருவித குறுகுறுப்பு. அதற்கு மேலும் ரகசியத்தைக் காப்பாற்ற முடியாமல், "எனக்குக் கூட மேஜிக் செய் யத் தெரியும்" என்று சொன்னேன். ஆனால் துணி வியாபாரம் பண்ணுகிற எனக்கு மேஜிக் தெரிந்திருக்க சாத்திய மில்லை என்றும் நான் அவரைக் கிண்டல் பண்ணுவதற்காக இப்படிப் பேசுவதாகவும் நினைத்துக் கொண்டு விட்டார்.

அதனால், அந்த இடத்திலேயே அந்த மும்பைக்காரருக்கு சில மேஜிக் ஐட்டங் களைச் செய்து காட்டினேன். அவருக்கு ஆச்சரியம். மறுபடியும் என்னை வந்து சந்திப்பதாகச் சொல்லிவிட்டுப் போய்விட் டார்.

ஏதோ ஒரு வேகத்தில் இப்படிச் செய்து விட்டோமே, நாளைக்கே அவர் வந்து, 'உன் நிகழ்ச்சியையே ஏற்பாடு செய்கிறேன். மும்பை புறப்படு' என்று சொன்னால், அவருக்கு என்ன பதில் சொல்லுவது? அப்பாவின் சம்மதம் கிடைக்காது. அவரது சம்மதம் இல்லாமல் மும்பை செல்லவும்

**மேஜிக் நிபுணர் கே. லால்**

முடியாது. அதன் காரணமாக, 'நான் மும்பை வருவதற்கு இயலாது' என்று சொன்னாலும் பிரச்னைதான். 'அப்புறம் எதற்காக மேஜிக் செய்து காட்டினீர்கள்? மும்பை வர முடியாதபட்சத்தில் சும்மா இருக்க வேண்டியதுதானே? நான் வேறு யாரையாவது புக் பண்ணியிருப்பேன் இல்லையா?' என்று கேட்பாரே! என்று எனக்குள் ஒரே குழப்பம்.

நான் எதிர்பார்த்தபடியே, சில தினங்கள் கழித்து, அந்த மும்பைவாசி கடைக்கு வந்து, என்னைச் சந்தித்தார். என்னிடம் ஒருசில காகிதங்களைக் கொடுத்துப் படித்துப் பார்க்கச் சொன்னார். பதினைந்து தினங்களுக்கு மும்பையில் மேஜிக் ஷோ நடத்துவதற்கு என்னை ஒப்பந்தம் செய்யும் காண்ட்ராக்ட் பேப்பர்கள்தான் அவை. எடுத்த எடுப்பிலேயே பதினைந்து நாட்கள் ஷோ நடத்துவதற்கு வாய்ப்புக் கிடைத்ததற்காக சந்தோஷப்படுவதா? இல்லை அதை ஏற்றுக் கொள்ள முடியாத சூழ்நிலைக்காக வருத்தப்படுவதா?

அவரை கடையின் தனிமையான பகுதிக்கு அழைத்துக் கொண்டு போனேன். என்னுடைய மேஜிக் ஆர்வம், எங்களுடைய குடும்பம், பிசினஸ் இவற்றில் எனக்குள்ள பொறுப்பு ஆகியவற்றை விளக்கிச் சொல்லிவிட்டு, 'நான் இன்னமும் துணி வியாபாரி தான்; முழு நேர மேஜிக் கலைஞன் ஆகும் அதிர்ஷ்டமில்லாதவன்' என்று ஆதங்கப்பட்டேன்.

என் உணர்வையும், ஆர்வத்தையும் அந்த நல்ல மனிதர் புரிந்து கொண்டார். "நீங்கள் உங்கள் தந்தையிடம் பேசிப் பாருங்கள். நானும் வேண்டுமானால் பேசுகிறேன்" என்றார். அப்படியே பேசினார். "பதினைந்தே நாட்கள். காந்திலாலை மும்பைக்கு அனுப்பி வையுங்கள். அதன்பின் வழக்கம் போல வியாபாரத்தை கவனித்துக் கொள்ளட்டும்" என்றார். நானும் அதையே சொல்லி அப்பாவிடம் அனுமதி கேட்டேன். என் நல்ல காலம் என் அப்பாவின் சம்மதம் கிடைத்தது. நான் வானில் பறப்பது போல உணர்ந்தேன்.

மும்பையில் புதிதாகக் கட்டப்பட்ட பாரதிய வித்யா பவன் அரங்கில், என் ஷோ ஏற்பாடாகியிருந்தது. முதல் நாளே ஷோ சூப்பர் ஹிட். 'இதுபோல ஒரு மேஜிக் ஷோவைப் பார்த்ததே இல்லை' என்று பலரும் பாராட்டினார்கள். டிக்கெட்களுக்கு ஏக டிமாண்டு. பதினைந்து நாள் ஷோ என்பது ஒரு மாதம் ஆனது. ஒரு மாதம் என்பது இரண்டு மாதமானது. பார்வையாளர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி, மூன்றாவது மாதமும் தொடர்ந்தது. வெற்றிகரமாக நூறு நாட்கள் நிகழ்ச்சியை நடத்தி முடித்துவிட்டு, மும்பையை விட்டுப் புறப்பட்டேன்.

மும்பையில் நிகழ்ச்சி தொடங்கிய ஒரு வாரத்தில் ஒரு முக்கியமான சம்பவம் நிகழ்ந்தது. ஒருநாள் இரவு நிகழ்ச்சி முடிந்தபின், மும்பை ஸ்பான்சர் என்னை வந்து சந்தித்த போது, அவருடன் கூட வந்தவரைப் பார்த்து எனக்கு ஒரே ஆச்சரியம். அவர் வேறு யாருமில்லை! என் அப்பாவேதான்! என் நிகழ்ச்சியின் வெற்றியைப் பற்றிச் சொல்லி, எனக்குத் தெரியாமலேயே அவரை மும்பைக்கு வரவழைத்து, என் நிகழ்ச்சியைப் பார்க்க ஏற்பாடு செய்திருக்கிறார்.

என் தந்தை, என்னைத் தட்டிக்கொடுத்துப் பாராட்டினார். அப்போது என் ஸ்பான்சர், என் அப்பாவிடம், "இவரை இனி மேலும் உங்கள் துணிக்கடையில் வைத்துக் கொள்ளப் போகிறீர்களா?" என்று கேட்டார். அதற்கு என் அப்பா கண்கலங்க, நா தழுதழுக்க, என்னைப் பார்த்துச் சொன்னார்: "துணிக்கடை என்கிற ஜெயிலில் உன்னை வைத்து விட்டேன். எத்தனை முட்டாள்தனமான செயல் அது? இனி நீ என் மகன் காந்திலால் இல்லை; இந்த உலகத்தின் லால் (மகன்)!"

(தொடரும்)

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

**"என்னை மாநில அரசியல்வாதி என்று இனி மேலும் யாரும் சொல்ல முடியாது.... எனக்கு ஆந்திராவில் ஒரு பங்களாவும், கேரளத்தில் பிரம்மாண்டமான பண்ணை வீடும், கர்நாடகத்தில் ஒரு தொழிற்சாலையும், டில்லியில் ஐந்து நட்சத்திர ஹோட்டலும் இருப்பதால் நான் இந்தியா முழுவதும் சுற்றிக் கொண்டிருக்கும் தேசிய அரசியல் தலைவர் என்பதை அடக்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்!"**

– சீர்காழி வி. ரேவதி



# ஆரோக்கியமான தூக்கத்திற்கு அருமருந்து!

DP Foam வழங்கும் PUF மெத்தைகள், களைத்து வரும் முதுகுகளுக்கு மிருதுவான மருந்து. நாளெல்லாம் உழைத்த சோர்வு தீர உறங்க சுகமான படுக்கைகள். DP Foam மெத்தைகள் மற்ற Foam மெத்தைகளைவிட அடர்த்தியாக இருப்பதால் முதுகிற்கு இதமான பாதுகாப்பு தருகின்றன. நீண்டகாலம் உழைக்கின்றன. பருத்தி மெத்தைகளில் ஆவது போல் தூசி படாது. கழுவலாம். சுலபமாக மடித்தும் வைக்கலாம்.

குடும்பத்தில் அனைவரும் நிம்மதியாக தூங்கி புத்துணர்ச்சியுடன் விழித்தெழ, உங்கள் மெத்தைகள் DP Foam ஆக இருக்கட்டும்.




Sweet Dreams

Mattresses

DP Foam ஸ்வீட் ட்ரீம்ஸ் மெத்தைகள், காண்டோர் தலையணைகள், அதிஅடர்த்தி மெத்தைகள், கன்வல்யூட் மெத்தைகள், கேரி காட், ஸ்போர்ட் கிட்ஸ் மற்றும் போல்ஸ்டர்கள், சென்னையிலும் பாண்டியிலும் உள்ள எங்கள் கம்பெனி கடைகளில் மட்டுமே கிடைக்கும்.

நீடிப்பான தூக்கத்திற்கு, நிம்மதியான இரவுகள்.




- சென்னை: 180, லஸ் சர்ச் சாலை, கடை எண் 29, T. N. H. B. ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ், லஸ் கார்னர், மைலாப்பூர், சென்னை-4. (காமதேனு தியேட்டர் அருகில்) போன்: 498 2663.
- பாண்டிச்சேரி: 13, ரங்கப்பிள்ளை தெரு, பாண்டிச்சேரி-605001 போன்: 221095

FIDELIS -DP FOAM-366

# நடக்கலைன்னா, நடக்கும்!



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

நீங்க கொஞ்சம் அடக்கி வாசிக்க வேண்டிய கட்டாயத்துல இருக்கீங்க. கோபம், பொறாமை, எரிச்சல் இதெல்லாம் உதவாது. சாந்த சொரூபியா இருந்தாத்தான் உங்களுக்கு நல்லது. வீண் சண்டைகள்ல மாட்டிக்காதீங்க. கணவன் மனைவி உறவுல பிணக்கு வரும்போது முதல்ல நீங்க விட்டுக் கொடுங்க. புது வியாபார ஒப்பந்தங்கள், வீடு வாங்கறது, ஷேர் எதுவும் இப்ப வேணாம்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

கிரகங்கள் சாதகமாத்தான் இருக்குது. நினைச்ச காரியம் நடக்கும். சிலர் அவங்க துறைல சாதனை புரியற அளவுக்கு ஜொலிப்பீங்க. எதிரிகள் காணாம போயிடுவாங்க. வழக்குகள்ல வெற்றியே கிடைக்கும். வீட்டுல ஒரு நல்ல காரியம் நடக்கும். உறவினர்களால ஆதாயம் உண்டு. பணப் பிரச்னையும் இருக்காது.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

இந்த வாரம் நீங்க நினைச்சிட்டிருக்கற முக்கியமான திட்டம் ஒண்ணு நல்லபடியா நடந்து முடியும். வெளி நாட்டுலேருந்து ஒரு நல்ல சேதி வரும். பணம் பல வழிகள்ல வரும். உறவினர்களால ஆதாயம் உண்டு. ஆனா, நண்பர்களிடம் எச்சரிக்கையா நடந்துக்கங்க. இரவுப் பயணம் வேண்டாம்.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

அலைச்சல் நிறைய இருக்கும். ஆனா, காரியங்கள் அத்தனை சுலபமா நடக்காது. நண்பர்களால பிரச்னை ஏதும் வரலாம். வியாபாரத்துல ஏற்றத் தாழ்வுகள் வரும். கடல் வாணிபம் அத்தனை ஆதாயம் தராது. குடும்பத்துல சிறு குழப்பங்கள் வரலாம். அரசு ஊழியர்களுக்குப் பழைய பாக்கிகள் வந்து சேரும். விளையாட்டுத் துறையினருக்குப் புகழ் கூடும் வாரம்.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

அந்தஸ்து கூடும். எதிரிகள் ஓடிடுவாங்க. உங்களுக்கு எதிலும் வெற்றிதான். நிர்வாகத் துறையினருக்கு, தொழிலாளிகள் சப்போர்ட் கிடைக்கும். புதிய வியாபார ஒப்பந்தங்கள் ஏற்படும். கலைஞர்களுக்கும்

## அக்டோபர் 20 முதல் 26 வரை

வெற்றியே கிடைக்கும். வயசானவங்க உடல் நலத்துல அக்கறை செலுத்துங்க. சிறு மருத்துவச் செலவுகள் மட்டும் அடிக்கடி வரலாம்.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

கஷ்டம் உண்டுன்னாலும் வெற்றி உங்க பக்கம்தான். இந்த வாரம் எழுத்தாளர்கள், ஆசிரியர்களுக்கு லாபகரமா இருக்கும். வழக்குகள் வெற்றிகரமாக முடியும். அரசியல்வாதிகள் கொஞ்சம் நிதானமா நடத்துக்கணும். சிலருக்கு வயிற்று உபாதைகள் வரலாம். வெளியூர் பயணங்களைத் தவிர்த்திடறது நல்லது.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

ஏற்ற இறக்கமான வாரம். பண விஷயத்துல ரொம்ப எச்சரிக்கையா இருங்க. கடன் குடுக்கறதோ, வாங்கறதோ வேணாம். எந்த முக்கிய காரியமானாலும் நாலு பேர் கிட்டே கருத்து கேட்டுட்டு ஆரம்பிங்க. இஞ்சினீயர்கள், கம்ப்யூட்டர் ஆசாமிகளுக்கு இது ஆதாயமான வாரம். பெண்களுக்குப் புதுப் புடைவை யோகம் இருக்கும். குழந்தைகள் விளையாட்டுலே லேசா அடி பட்டுப்பாங்க.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

நண்பர்களும் உறவினர்களும் ஆதரவா இருப்பாங்க. இதுவரை இருந்து வந்த பணக் கஷ்டம் நீங்கிடும். கணவன், மனைவி உறவு சுமுகமா இருக்கும். கூட்டுத் தொழில் செய்யறவங்களுக்கு ஆதாயமான கால கட்டம். மாணவர்களுக்கு இஷ்டப்பட்ட காலேஜ்ல சீட் கிடைக்கும். வீடு, மனை வாங்க, உகந்த நேரம். டூ வீலர் பயணம் மட்டும் வேணாம். சாலை விபத்துக்கு வாய்ப்பு இருக்கு.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

வெற்றிகரமான வாரம்தான். துணிஞ்சி எதிலும் இறங்கலாம். சொத்து வாங்கறதோ, வேலை தேடறதோ, வெளிநாடு போறதோ - இந்த வாரம் செய்தா பலன் உறுதி. பெண்கள் செயற்கரிய காரியம் செய்து புகழடைவாங்க. அரசியல்வாதிகள் பேச்சுல கவனமா இல்லாட்டி, மேடைல அவமானப்பட நேரிடும். வயசானவங்களுக்கு, உல்லாசப் பயண யோகமும் இருக்கும்.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

உங்க காரியங்களுக்கு நிறைய குறுக்கீடுகள் வரும். நண்பர்களே எதிரி ஆவாங்க. நிறைய அலைச்சலும் உழைப்பும் இருக்கும். ஆனா, பலன் அவ்வளவா இருக்காது. வீட்டுல பெரியவர்களை அவமரியாதையா பேசாதீங்க. அக்கம்பக்க வம்புகள்ல தலையிடாம இருக்கறதும் நல்லது.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்க புத்திசாலித்தனம் வெளிப்படாறப்பல சில காரியங்கள் செய்வீங்க. பொதுப்பணிகள்ல ஈடுபாடு உள்ளவங்களுக்குப் புகழ் கூடும். ஆசிரியர்கள், பெண்கள், குழந்தைகளுக்குப் பண வரவும் காரிய பலிதமும் கண்டிப்பா உண்டு. சிலருக்கு வெளியூர் மாறுதல் இருக்கும். உல்லாச அனுபவங்கள் கிடைக்கும். பயணத்துல எச்சரிக்கையா இருங்க. பிக்பாக்கெட்ல பணம் இழக்க வாய்ப்பிருக்கு.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

சாதனை செய்யற வாரம். உங்க எதிரிகள் ஓடி ஒளிவாங்க - புகழ் கூடும். பணப் பிரச்னை இருக்காது. சிலருக்குத் திருமண ஏற்பாடு நடக்கும். மாணவர்கள் படிப்புல கவனம் செலுத்தாம ஜாலி பண்றது நல்லதில்லை. வீட்டுல சிறு குழப்பங்கள் எழும். சண்டைகூட வரலாம். எதிலும் விட்டுக் கொடுத்து நடத்துக்கங்க.



ரிஷப ராசிக்காரரான டைரக்டர் விக்ரமனுக்கு நினைச்ச காரியம் நடக்குமாம். வீட்டுலயும் நல்ல காரியம் நடக்குமாம்!

## நீங்கள் கேட்டவை – தராசு

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
என். ஜெயராமசந்திரன்,
ஆர்.வி.ஜி. டிரான்ஸ்மிஷன் லிமிடெட்,
270 வினோபா நகர்,
ஷிமோகா - 577 204.



• கட்சிகளின்....



• ... தோல்வி!

● ந. விநாயகமூர்த்தி, இராயபுரம், சென்னை.

? *நாம் மறந்து போக வேண்டியது எது? மறந்து போகக் கூடாதது எது?*

! மறக்க வேண்டியது : நியூஸிலாந்துக்கு எதிராக முதல் இன்னிங்ஸில் இந்தியா 83 ஆல் அவுட்! மறக்கக் கூடாதது : அதே பந்தயத்தில் ஸ்ரீநாத் 45 ரன் மட்டுமே கொடுத்து எடுத்த ஆறு விக்கெட்.

● ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.

? *த.மா.கா. இனி சொந்தக் காலில் நிற்க முடியுமா?*

! முடியும் என்று மூப்பனார் நம்புகிறார். அவரது நம்பிக்கையை வாழ்த்துவோம்.

● தே. இராதாதேவன், வேலூர் – 1.

? *மதிப்புமிக்க மன்மோகன் சிங், திருமிகு சிதம்பரம் போன்றோரின் தோல்வி பற்றி தங்களின்...*

! அது அவர்களுடைய தோல்வியல்ல; அவர்கள் சார்ந்துள்ள கட்சிகளின் மேல் மக்களுக்கு உண்டான அதிருப்தியின் விளைவு தான்.

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? *ஆறு சட்டசபைத் தொகுதிகளுக்கும் நானே எம்.எல்.ஏ.யாகவும், எம்.பியாகவும் நானே அரசாகவும் இருந்து செயல்படுவேன் என்று முன்னாள் சபாநாயகர் பி.எச். பாண்டியன் கூறியுள்ளாரே?*

! பி.எச். பாண்டியன் தொகுதிக்கு நல்லது செய்யக்கூடியவர் என்பதில் என்னளவும் சந்தேகமில்லை. ஆனால், 'நானே அரசாகவும்' என்று அவர் சொன்னதுதான் இடிக்கிறது. அது 'தாதா' வேலையல்லவா!

● ஆ.ச. மாரியப்பன், புதுக்கோட்டை.

? *'போப் ஆண்டவரும் ஜகத்குருதான். அனைத்து மதத்தினரும் அவரை வரவேற்கச் செல்ல வேண்டும்' என காஞ்சி பெரியவர் கூறியுள்ளது எதைக் காட்டுகிறது?*

! பாரத பண்பாட்டை.

● என். ஜெயராமசந்திரன், ஷிமோகா. ❑

? *தமிழக சட்டசபை இடைத் தேர்தலில் அ.தி.மு.க. கூட்டணி வென்று விட்டதே?*

! நாடாளுமன்றத் தேர்தல் வெற்றியில் தி.மு.க. இதை மறந்து விடாமல் இருப்பது தான் அதன் எதிர்காலத்துக்கு நல்லது.

● என். பாலகிருஷ்ணன், மதுரை – 1.

? *ப. சிதம்பரத்தின் தோல்வியை எதிர்பார்த்தீர்களா?*

! ஓரளவுக்கு எதிர்பார்த்தேன் – காண்க – 22.8.99 கல்கி முதல் பக்கக் கட்டுரையின் கடைசி வரிகள்.

● வி.பி. காந்திமதி, பெத்தானியாபுரம்.

? *பெரும்பாலான மாநிலங்களில் ஆளுங் கட்சி தோல்வியடைந்துள்ள நிலையில் ஆந்திராவில் மீண்டும் சந்திரபாபு நாயுடுவின் பெரிய வெற்றி பற்றி...?*

! Politics of Progress இப்படிப் பலனளிக்கும் போது ஜாதி அரசியல், மதவாதம், எதிரணித்



• பண்பாட்டுப் பிரதிபலிப்பு



• காவிரி ப்ளீஸ்!



• இன்றும் ஜீவனுடன்...



• தோற்றாலும்....



• 'சர்வ' வல்லமை!



• எடுத்துக்காட்டு அரசியல்

தாக்குதல் என இறங்கி அழியத் தேவையில்லை என்பதற்கு எடுத்துக்காட்டு.

● சி. அருள்மொழி, கீழ்க்குருவாடி.

? தராசுக்குக் காதலை எடைபோடத் தெரியுமா?

! எடைபோடுகிற அளவுக்கு இருக்கும் ஒன்று எப்படி காதலாக இருக்க முடியும்?

● கே.ஆர். உபேந்திரன், தஞ்சாவூர்.

? தி.மு.க.வுக்கு நிகராக அ.தி.மு.க.வும் கணிசமான இடங்களைப் பெற்றிருப்பது அதன் பலத்தினாலா

# த.மா.கா. இனி சொந்தக் காலில் நிற்குமா?

அல்லது தி.மு.க.வின் பலவீனத்தினாலா?

! த.மா.காவின் தடுமாற்றத்தினால்!

● இரா. கமலக்கண்ணன்,
நாமகிரிப்பேட்டை.

? 'தமது நாட்டைப் பொறுத்தவரை – அதுவும் தமிழில் – எழுத்தை மட்டும் பிழைப்பாக வைத்துக் கொள்வது சிரமம்' என்று பட்டுக்கோட்டை பிரபாகர் கூறுகிறாரே?

! எழுத்தாளர் தேவிபாலா கார் வாங்கியிருப்பதாக ஒரு செய்தி சமீபத்தில் படித்தேன் – எழுத்தால் மட்டுமே சம்பாதித்த பணத்தில்!



• சிரமம்....



• ...சாத்தியம்!

● ஆர். வேணுகோபால்,
பெரியகுளம்.

? மற்ற இதழ்கள் தீபாவளி மலருடன் இலவச பொருட்கள் வழங்கியதைக் குறைகூறிய தராசே! இப்பொழுது கல்கியே சந்தாதாரருக்கு தீபாவளி மலரை இலவசமாக அளிப்பதாக விளம்பரம் செய்வது சரிதானா?

! சரிதான். மற்ற இதழ்கள் 'லாட்டரி' ரகப் போட்டிகள் நடத்திப் பரிசு கொடுப்பதாக அறிவித்தன. கல்கி சந்தா செலுத்துவோர் ஒவ்வொருவருக்கும் இரண்டு வருடத்துக்கு உத்தரவாதமாக கல்கி கிடைப்பதுடன் இந்த ஆண்டு தீபாவளி மலரும் கிடைக்கும். மேலும், தீபாவளி மலரை தனியே விலைக்கு வாங்க விரும்புவோர் அதற்கான விலை கொடுத்து வாங்கத் தடையேதும் இல்லை.

● எம். பிச்சைக்கனி, திருமால்பூர்.

? 'காவிரிப் பிரச்னையில் கர்நாடக முதலவருக்குப் பரிந்து பேசும் ஒரு கேவலமான முதலமைச்சரை தமிழகம் பெற்றிருப்பது துரதிர்ஷ்டவசமானது' என்கிறாரே ஜெயலலிதா?

! இனி கர்நாடகத்தில் ஜெ. கூட்டணி வைத்துள்ள காங்கிரஸ் ஆட்சிதானே! இனி ஜெ. சொல்லும்போதெல்லாம் தண்ணீர் திறந்து விடுகிறார்களா என்று பார்க்கத்தானே போகிறோம்.

● எஸ். அம்ருதா ராம்மோகன்,
சென்னை – 33.

? ஓவியர் கோபுலுவுக்கு எம்.ஏ.சி. அறக்கட்டளை ஐம்பதாயிரம் ரூபாயும் கலைமாமுகில் பட்டமும் கொடுத்துள்ளதே?

! தகுதியுள்ள நபர்தான். இன்றைக்கும் விகடனில் பிரபஞ்சன் தொடருக்கு ஜீவனுள்ள படங்கள் வரைந்து கொண்டிருக்கிறார். ●



# சுமி சூப்பர் மார்க்கெட்

என் ஃப்ரெண்ட் கணேஷோட மகாபலிபுரத்துக்கு ஒரு ஜாலி ட்ரிப் போயிருந்தேன். ஒரு ரோடு முழுக்க ஆயனரோட ரிலேடிவ்ஸ். 'ணக் ணக் ணக்'னு செதுக்கிட்டேயிருக்காங்க. காது கொள்ளாக் காட்சி. ஒரு பெரிய கல்லில் யானை செய்ய (பிள்ளையாராகவும் இருக்கலாம்!) ஆரம்பிச்சிருந்த என் வயசுப் பையன் ஒருத்தன்கிட்டே, 'இது முடிய எவ்ளோ நாள் ஆகும்'னு கேட்டேன். அப்போதைக்குக் காது செதுக்கிட்டிருந்த அந்த இளம் சிற்பி, 'ஒரு காதுக்கு ஒரு வாரம் ஆகும்'னு சொன்னது ஆச்சர்யமா இருந்தது. இன்னொரு காதுக்கு இன்னொரு வாரம். அப்புறம் மூக்கு, முதுகு, கால் எக்ஸட்ரா. 'டோட்டலா மூணு மாசத்துல முடிப்பீங்களா?'னு லூஸ் மாதிரி கேட்டதுக்குக் கிடைச்ச பதில்: "ஆர்டர் பண்ணீங்கன்னா இன்னும் சீக்கிரம்கூட முடிச்சிடலாம். பண்றீங்களா? முப்பதாயிரம்தான்!"

நம்மால இந்தக் கலையையெல்லாம் தூர நின்னு பார்த்து ரசிக்கத்தான் முடியும். ஓட்றா சாமி!

பழைய லைட் ஹவுஸ் சிகரத்துல ஒரு ஆள் சில்லதா ஒரு கடை போட்டிருந்தான். கடல் கற்களைச் செதுக்கி செஞ்ச குட்டிக் குட்டி நகைகள். ஒண்ணோட விலை கேட்டேன். ட்வென்டி ருபீஸ் சொன்னான்.



• பாக்யராஜ்

நம்ம தேசிய குணம் விடுமா? பேரத்தை ஆரம்பிச்சேன். 'பதினஞ்சுன்னா ஓகே'ன்னு கறாரா ஒரு புடி புடிச்சேன்.

அந்த ஆள் கீழே கைகாட்டினான். அங்கேயும் வரிசையா அதே கடைகள்.

"நீங்க அங்க போயிக் கேளுங்க. இதையே இருவத்தஞ்சு ரூபா சொல்லுவாங்க. அவங்க இருபதுக்குத் தர்றதா சொல்லிட்டாங்கன்னா, வாங்காம மேல வாங்க. நான் கண்டிப்பா பதினைஞ்சுக்குத் தரேன்."

அதையும் பார்க்கலாம்னு தோணிச்சி. இருந்தாலும் போனா போறான்னு அவன் சொன்ன விலைக்கே வாங்கிட்டு கீழே வந்து விசாரிச்சேன்.

அங்கே விலை பதினஞ்சுதான்! மறுபடியும் போய் அவனை ஒரு பிடி பிடிக்கலாம்னு கோபம் வந்தது. பட், என்னமோ ஒண்ணு தடுத்து, ஏறாம திரும்பிட்டேன்.

வர்ற வழில நான் யோசிச்சேன். எத்தனை காலமா அவன் அங்க கடை போட்டிருப்பான்! என்னை மாதிரி எத்தனை பேரைப் பார்த்திருப்பான்!

மறுபடியும் அத்தனை படி ஏறி வந்து விசாரிக்கற வழக்கம் புண்ணிய பாரத தேசத்து மகளிரணிக்குக் கிடையாதுங்கற சைகாலஜி கரதலபாடமாயிருக்கறதாலதானே அவ்ளோ கான்ஃபிடன்டா கீழ போயி விசாரிக்கச் சொன்னான்?

அந்த நம்பிக்கைக்குத் தான் அந்த எக்ஸ்ட்ரா ஃபைவ் ருபீஸ்னு நினைச்சி சமாதானப்படுத்திக்கிட்டேன்.

*** *** ***

பாக்யராஜோட 'வாங்க, சினிமாவைப் பத்திப் பேசலாம்'ங்கற புஸ்தகம் தற்செயலா அகப்பட, ஒரே மூச்சுல படிச்சி முடிச்சேன்.

இதை நான் படிக்கறதைவிட இன்னிக்கு ஃபீல்டுல இருக்கற அத்தனை யங்ஸ்டர்ஸூம் அவசியம் படிச்சா பத்துல பாதிப் படமாவது பழுதில்லாம வரும்.

ஒரு அரிச்சுவடி எளிமையோட, ஃப்ரெண்ட்லியா பேசறா மாதிரியே எழுதறார் பாக்யராஜ். ஸ்டோரி, ஒன் லைன், ஸ்கிரீன் ப்ளே, செண்டிமெண்ட், பஞ்ச், சஸ்பென்ஸ், டயலாக்ஸ் அது இதுன்னு கமர்ஷியல் சினிமா தொடர்பான சகல விஷயங்கள்லேயும் சக்ஸஸ்ஃபுல்லா சாதிக்கற வழி முறைகளை, பல வெற்றிப் படங்களை அடிப்படை உதாரணமா காட்டியே விளக்கறார்.

இதுல பெரிய ஆச்சர்யம் என்னன்னா தன் படங்கள் சிலதோட தோல்விக்கும் அவர் யோசிச்சி, கரெக்டான காரணம் கண்டுபிடிச்சி, 'இந்தத் தப்பை நீங்க பண்ணிடாதீங்க'ன்னு கோடிகாட்டறது தான்.

இந்தப் புஸ்தகத்தை கவனமா படிச்சா, உடனே ஒரு யங் டைரக்டர் சில்வர் ஜூபிளி படம் குடுக்க முடியும்னு நான் சொல்ல மாட்டேன். பட், அவரால ஒரு ஃபெயிலியரைத் தவிர்க்கக் கண்டிப்பா முடியும்.

*** *** ***

# கச்சேரியை நிறுத்தி இட்டு அரட்டை!

அரிசி, பருப்பு, மொளகால ஆரம்பிச்சு, டூத் பேஸ்ட், ஷேவிங் க்ரீம் வரைக்கும் தீபாவளி மலரோட இலவசப் பொருள்கள் தர்ற காலத்துல, தீபாவளி மலரையே இலவசமா தரப்போறதா சொல்லிருக்கு கல்கி. (மன்ற உறுப்பினர்கள் யார் யாரெல்லாம் சப்ஸ்கிரைப் பண்ணியிருக்கிங்க?)

பை தவே, இந்த இலவசப் பொருள்கள், பரிசுப் பொருள்கள் மூலமா மலர் விற்பனையைக் கூட்டற கோஷ்டியெல்லாம் இந்த வருஷம் ஆப்ஸண்ட் ஆயிட்டதை கவனிச்சீங்களா?

வாராந்தர அவசரத்துல செய்ய முடியாத சில ஸ்பெஷல் விஷயங்களை-காலத்துக்கும் நிலைச்சி நிற்கக் கூடிய சமாசாரங்களைத் தர்றது மூலமா வாசகர்களை நிரந்தர மகிழ்ச்சிக்குள்ளாக்கறதுதான் தீபாவளி மலர்களோட அர்த்தமா இருந்துட்டு வருது-பலகாலமா.

என்கிட்டே சிக்ஸ்டீஸ்ல (நான் பிறக்கறதுக்குப் பலப்பல வருஷம் முன்னால!) வந்த சுதேசமித்திரன் தீபாவளி மலர் காப்பி ஒண்ணு இருக்கு. ஜானகிராமன், அசோகமித்திரன் மாதிரி ஜாம்பவான்லோட ஜெம்ஸெல்லாம் அதுல இருக்கு. இன்னிக்கு எடுத்துப் படிச்சாலும் புதுசா இருக்கு. ஒவ்வொரு கதையுமே ஒரு பரிசு மாதிரி! ஆனா, சுதேசமித்திரன், இலவச சீக்கா பொட்டலமெல்லாம் தந்ததில்லை!

*** *** ***

கச்சேரிக்கு நடுவுல பேச்சு வைக்கறதா வேண்டாமான்னு மியூசிக் லவர்ஸ் பட்டிமன்றம் நடத்தறாங்க. ஆனா ஆட்டிஸ்டே அரட்டை அடிச்சா..? அதெப்படின்னு கேட்காதீங்க!

சமீபத்துல செஞ்சு காட்டினவங்க சுதா ரகுநாதன்! கச்சேரிக்கு நடுவுல, இன்டர்நெட்ல உலக ரசிகர்களெல்லாம் கேள்வி கேட்க, சுதா அவங்க டிரெஸ் மாதிரியே (பளிச்!) பதில் சொல்லியிருக்காங்க.

'வீட்டையும் பாட்டையும் ஒரே சமயத்துல எப்படி சமாளிக்கறீங்க?'

- 'இன்னும் எத்தனை காலம் இப்படி லைம்லைட் பாடகியா இருக்க எதிர்பார்க்கறீங்க...?'

- இந்த ரகத்துல கேள்விகள்.

சுதாவோட கச்சேரியும் பதில்களும் இன்டர்நெட்ல நேரடியா ஒலிபரப்பாகியிருக்கு.

இந்த நிகழ்ச்சி w.w.w.carnaticmusic.com வெப் ஸைட்டோட முதல் ஆனிவர்சரிக்காக ஸ்பெஷல் ஏற்பாடு.

ஆனா ஒண்ணு... என்னதான் ஹைடெக்காகி இன்டர்நெட்லாம் வந்தாலும் கச்சேரிக்குப் போகறவங்க போய்கிட்டுத்தான் இருப்பாங்க- கேட்கறதுக்கில்லைன்னாலும் பார்க்கறதுக்கு!

— சுமி



# பா.ம.க. அக்கினிப் பிரவேசம் செய்ய வேண்டுமா?


• வைகோ

● "அ.இ.அ.தி.மு.கவின் வோட்டு வங்கி அப்படியே இருக்கிறது. 2001ல் நாங்கள் ஆட்சியைப் பிடிப்போம்!" என்று ஜெ. முழங்கியதில் விஷயம் உள்ளதென்று அ.தி.மு.க. பிரமுகர்கள் கூறுகிறார்கள். "தெற்குப் பகுதியில் எங்கள் கொடி பறக்கிறது. வடக்குத் தமிழ்நாட்டில் சரியான கட்சியுடன் கூட்டணி கண்டால் வெற்றி எங்களுக்குத்தான். எனவே பா.ம.கவுடன் சட்டமன்றத் தேர்தலுக்கு முன் நெருங்கி வருவதற்கான வாய்ப்புகள் 'பளிச்'சென்று இருக்கின்றன!" என்கிறார்கள் அவர்கள். இதற்கு ஆதாரமாக தேர்தலுக்கு முன்பிருந்தே ஜெயலலிதாவும் டாக்டரும் பரஸ்பரம் ஒருவரையொருவர் தாக்கிக் கொள்ளாமல் இருப்பதைச் சுட்டிக் காட்டுகிறார்கள். இதுபோன்ற சந்தேக ஊசி தங்கள் மேலிருப்பதைக் குறித்து பா.ம.க. பிரமுகர்கள் சிறிதும் கவலைப்படவில்லை. "இதற்காக அக்னிப் பிரவேசமா செய்ய வேண்டும்?" என்று கேட்கிறார்கள் அவர்கள்!

சற்றும் விட்டுக் கொடுக்காமல் சுகாதாரம் மற்றும் குடும்ப நலத்துறையையும், பெட்ரோலியம் இணை அமைச்சர் பொறுப்பையும் பிரதமரிடமிருந்து பெற்ற டாக்டரை வாயாரப் புகழ்கிறார்கள். இதற்கிடையில், 2001ல் காமராஜ் ஆட்சியைக் கொண்டு வருவோம் என்ற த.மா.காவின் லட்சியத்தைக் கிண்டல் செய்த ஜெ.வைக் கண்டித்து அறிக்கை விட்ட பா.ம.கவின் துணைத் தலைவர் ரவீந்திரன் துரை சாமியை இதுபோன்ற விஷயங்களில் கொஞ்சம் அடக்கி வாசிக்கும்படி தலைமை கேட்டுக் கொண்டுள்ளதாம்.

● 101 குற்றச் சாட்டுக்களை திண்டிவனம் ராமமூர்த்தி மேல் சொல்லிவிட்டு, தலைமை மாற்றத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கிறார்கள் தமிழக காங்கிரஸ்காரர்கள். குமரி.அனந்தனிலிருந்து துவங்கி, மீதி இருக்கின்ற முன் வரிசைத் தலைவர்கள் அனைவருமே, தனித் தனியாக தில்லியில் உள்ள தங்கள் தொடர்புகளின் மூலம் முயன்று கொண்டிருக்கிறார்கள். தேர்தலுக்கு முன்பு த.மா.காவிலிருந்து விலகி காங்கிரஸில் இணைந்த அருணாசலம் கடுமையாக முயற்சி செய்கிறாராம். ஆனால் பச்மாரியில் நடந்த காங்கிரஸ் மாநாட்டில் எடுத்த முடிவின் படி, கட்சியிலிருந்து விலகிவிட்டு மீண்டும் இணைபவர்களுக்கு இரண்டு வருடங்களுக்குக் கட்சிப் பொறுப்பு ஏதும் கொடுக்கப்படகூடாது என்பதால் அருணாசலம் அடிபட்டுப் போகிறார். மயிலாடுதுறையில் வெற்றி பெற்ற மணி சங்கர் அய்யருக்கும் இது பொருந்துமாம். காரணம் 1998ம் ஆண்டு தேர்தலுக்கு முன்பு மம்தாவின் திரிணமூல் காங்கிரஸில் இணைந்து மீண்டும் திரும்பியவர் அவர். இந்த நிலையில், சமீபத்திய பாராளுமன்றத் தேர்தலில் வேட்பாளராக முயற்சி செய்து அதற்காகப் பெருந் தொகையை 'டெபாஸிட்' செலுத்திய சிலர் தனிப்பட்ட முறையில் நீதிமன்றத்தின் கதவைத் தட்டப் போகிறார்களாம்.


• டாக்டர் ராமதாஸ்

● வாஜ்பாய், தமக்குக் கேபினட் பொறுப்பு கொடுத்தும் அதை பெற்றுக் கொள்ளாமல், மிகப் பெருந்தன்மையுடனும், தியாக மனப்பான்மையுடனும், கேபினட் போஸ்ட்டுக்குப் பதிலாக இரு இணை அமைச்சர் பதவியைப் பெற்று கண்ணப்பனுக்கும் செஞ்சி ராமச்சந்திரனுக்கும் கொடுத்த வைகோவை புகழோ புகழ் என்று புகழ்கிறார்கள் ம.தி.மு.கவினர். ஆனால் கொடுக்கப்பட்டிருக்கும் இலாக்காக்களைப் பற்றி கட்சியினருக்குக் கொஞ்சம் வருத்தம் இருக்கிறது.

● சந்திரபாபு நாயுடு போல அமைச்சரவையில் தி.மு.கவும் பங்கு பெறாமல் இருந்திருக்கலாமே என்று தி.மு.க. பிரமுகர்கள் மத்தியில் ஒரு சிந்தனை இருக்கிறது. "இன்னமும் ஒன்றரை வருட காலத்திற்குள் சட்ட மன்றத் தேர்தல் வரும் நிலையில், மாநில மத்திய என்று இரு அரசுகளின் செயல்பாடுகள் கட்சி மீது விழுகிற பெரும் அபாயம் இருக்கிறது" என்கிறார் ஒரு தி.மு.க. பிரமுகர்.

— சஞ்சயன்





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்


16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர், (வழி) தாம்பரம், சென்னை-63.
**Tel & FAX: 2376129, Cell Ph: 98410-53309**
**E.mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com**
**Please visit our website at: www.intamm.com/sspeetam**


## தீபாவளி நல்வாழ்த்துக்கள்

பேரன்புடையீர் ! வணக்கம், வரும் தீபாவளி திருநாளில் தங்களுக்கு அனைத்து நலன்களும் உண்டாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பிரார்த்திக்கின்றோம்.

தங்களின் அன்பினாலும், ஆதரவினாலும், குருகுலத்தில் 137 மாணவ, மாணவியர்கள் நல்ல முறையில் படித்து வருகின்றார்கள். குருகுல மாணவர்களின் முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு ஒரு உயர்நிலைப்பள்ளியும் மற்றும் **13/09/99** விநாயக சதுர்த்தி அன்று கம்ப்யூட்டர் பயிற்சி மையமும் துவக்கப்பட்டுள்ளது.

## தீபாவளி திருநாளில்

* குருகுல மாணவர்களோடு உங்களுடைய மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளுங்கள்.
* குருகுல மாணவர்களின், உணவு மற்றும் இதர செலவுகளுக்கு, கல்வி கற்பதற்கு கம்ப்யூட்டர் பயிற்சி பெறுவதற்கு, கட்டிடம் கட்டுவதற்கு, மற்றும் நிரந்திர வைப்பு திட்டத்திற்கு தங்களின் மேலான நன்கொடைகளை அளிக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி ( 137 பேருக்கு ) | ரூ | 750/- |
| • மதிய உணவு (இனிப்புடன்) | ரூ | 1,500/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ | 500/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) | ரூ | 3,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ | 6,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ | 1,50,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு **Cheque/ DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்



# யார் நல்லவர்கள்?

## நல்ல மனிதர்களுக்கு முதலில் மனம் முதிர்ச்சி அடைந்த பிறகு உடல் முதிர்ச்சி அடையும்.

**எங்களது சுவையான இனிப்பு மற்றும் கார வகைகளை வாங்கி நல்லவர்களுக்கு விநியோகம் செய்யவும்.**



திருமணம் மற்றும் விசேஷங்களுக்கு அதிரசம், அப்பம், திரட்டுப் பால், சீர் முறுக்கு, சீர் முள்ளுத் தேன்குழல் செய்து தரப்படும்.

**இனிப்புகள்:** அதிரசம், வெல்லச்சீடை, மனோகரம் உருண்டை, பொறி விளங்காய் உருண்டை, ரவாலாடு மற்றும் பல இனிப்புகள் செய்து தரப்படும்.

**காரவகைகள்:** சீப்புச்சீடை, ரயில்கட்டிடம், கார்ன் ப்ளக்ஸ் மிக்ஸர், தேன்குழல் முள்ளுத் தேன்குழல் மற்றும் பல கார வகைகள் செய்து தரப்படும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2-வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை – 600 020.
போன்: 4915662, 4914213

"இதயத் தொடர்ப்பு" ... (vertical decorative title in right margin)

✉ 'தங்கத்துக்கு வந்த புது வாழ்வு!' அட்டைப் படக் கட்டுரை படித்தேன். தங்கம் விலை திடீரென உயர்ந்தது மட்டும்தான் இதுவரை தெரியும். ஆனால், இப்போதுதான் அதன் பின்னணி பற்றித் தெரிந்துகொண்டோம். வேறு எந்தப் பத்திரிகையிலும் வெளிவராத செய்தி இது. வெல்டன்!
மொரட்டுப்பாளையம், சுநா. இராஜேஸ்வரன்.

✉ 'பங்குச் சந்தையைப் பந்தாடியவர்' என்ற தலைப்பில் வி. கோபாலன் எழுதிய கட்டுரையைப் படித்தேன். பங்குச்சந்தையைப் பந்தாடி, இந்தியாவையே ஒரு கலக்குக் கலக்கிய ஹர்ஷத் மேத்தாவுக்கு 5 ஆண்டுகள் சிறைத் தண்டனை என்பது அற்பமானது!
லால்குடி - 1, எம். இராஜேந்திரன்.

✉ 'வளர்ச்சிக்கு வழி காட்டும் கிராமப் பெண்கள்' கட்டுரை படித்தேன். மிகவும் அருமை. சாதி சமயச் சண்டைகள் இல்லாமல் ஒற்றுமையுடன் திகழும் கிராமப் பெண்களின் முயற்சி பாராட்டுக்குரியது. தாங்கள் குறிப்பிட்டதுபோல் அரசியல்வாதிகள் அந்தப் பகுதியில் காலடி எடுத்து வைக்காமல் இருந்தால் இன்னும் அக் கிராமம் முன்னேறும் என்பதில் சந்தேகமில்லை!
கண்டரமாணிக்கம், டி. விஸ்வநாதன்.

✉ பெண்களை ஆக்கப்பூர்வமாக, சுதந்தரமாக சிந்தித்துச் செயல்பட வைத்தால், எத்தகைய அற்புதத்தையும் நிகழ்த்திக் காட்டலாம் என்பதைப் பறை சாற்றியது பரசநல்லூர் கிராம மக்களின் வளர்ச்சி பற்றிய கட்டுரை.
வடபழனி, சி. மகேஷ்.

✉ பிரச்னைகளை அரசியலாக்குவது என்றால் எப்படி என்ற கேள்விக்குச் சரியான உதாரணங்கள் கொண்டு தராசு விளக்கியிருந்தார். இதன் மூலம் கற்றுக்குட்டி அரசியல்வாதிகள் கல்கிக்கு என்றென்றும் கடன்பட்டவர்கள் ஆவர்.
குட்டலாடம்பட்டி, கே. மூர்த்தி.

✉ இவ்வார (3.10.99) இதழில் வெளியாகியுள்ள 'மௌனம்' கவிதையைப் படித்து மகிழ்ந்தேன். மௌனத்தின் சிறப்பை, திறனை, பயனை மற்றும் தேவையைக் கூறாத நூல்களே இல்லை. பகவத்கீதை தொடங்கி ஞான வாட்சு ஈறாக! ஆயினும், வசந்தராஜன் தம் சிறு கவிதை மூலம் விளக்கியிருப்பது அவரை ஞானி ராஜன் என்றே கூற வைக்கிறது!
புதுடில்லி-87, தி.வி. கிருஷ்ணமூர்த்தி.

✉ 'உனக்காக எல்லாம் உனக்காக' படம் பார்த்துச் சிரிக்கிறோமோ இல்லையோ, விமர்சன வரிகள் சிரிக்க வைத்தன.
அனுப்பானடி, இரா. கல்யாணசுந்தரம்.

✉ சுமி சூப்பர்மார்க்கெட்டில், பெரியாரின் வெங்காயத் தத்துவத்தைச் சரியாக உரித்துக்காட்டிய வாலியின் கவிதை சூப்பர்! இன்று பெரியார் இருந்தால் கவிஞரைப் பெரிதும் பாராட்டியிருப்பார்!
பொறையாறு, கங்கா கணேசன்.

### மறுக்கிறார் வீரமணி

✉ 'கல்கி' (10.10.99) இதழில் 'காதில் விழுந்தவை' என்ற தலைப்பில், கீழ்க்கண்ட செய்தி வெளியாகியுள்ளது:

'பகுத்தறிவுப் பகலவனின் சொத்து மற்றும் கொள்கைகளுக்கு வாரிசான அவரது அமைப்பு, சில அரசியல்வாதிகளின் பணத்தை வெளிநாடுகளில் முதலீடு செய்ய உதவி வருவதாக மத்திய புலனாய்வு ஏஜென்சிகள் கருதுகின்றன. பா.ஜ.க. கூட்டணி மீண்டும் ஆட்சிக்கு வரும்போது, விசாரணை தீவிரமாகலாம்.''

தந்தை பெரியார் அவர்களது இயக்கமான திராவிடர் கழகத்தை மறைமுகமாக இது குறிப்பிடுவதாக இருக்குமேயானால் - இந்தப் புகாரில் கடுகளவுகூட உண்மை இல்லை என்பதால், பி.ஜே.பி கூட்டணி மட்டுமல்ல; வேறு எந்த ஆட்சி மத்தியில் வந்தாலும், எப்போதும் எந்த விசாரணைக்கும் ஆட்படத் தயாராக இருக்கிறது திராவிடர் கழகம்.
சென்னை, கி. வீரமணி,
பொதுச்செயலாளர்,
திராவிடர் கழகம்.

அசேஷ சித சித் வஸ்து

சேஷினே சேஷ சாயினே - என்பதற்கு விளக்கம் சொல்லிக் கொண்டிருந்தேன்.

மூன்று காரணங்களாகவும் அவனே இருப்பதனாலே; அவனைத் தவிர காரணம் வேறில்லை என்பதனாலே; காரணம், அகாரணம், நிஷ்காரணமாய் அவனே இருப்பதனாலே; அவனே இந்த உலகமாகப் பரிணமிப்பதனாலே, அவனைத் தவிர வேறொரு காரியம் இல்லை என்பதனாலே

அயேவ காரியம்

அயேவ காரணம்

என்று சொல்லப்பட்டது.

அதைத்தான் 'அசேஷ சித சித் வஸ்து, சேஷினே'- என்ற வாக்கியம் உணர்த்துகிறது.

எல்லா வஸ்துக்களுக்கும் சேஷியாய் இருக்கக் கூடியவன், எல்லாவற்றுக்கும் நியம் தாவாய் இருக்கக் கூடியவன், எல்லாவற்றையும் நியமிப்பவனாய் இருக்கக் கூடியவன், எல்லாவற்றுக்கும் மூலாதாரமாக இருக்கக் கூடியவன், எல்லாவற்றையும் தாங்குபவன், அவையவை அதனதனிடத்தில் இருப்பதற்குக் காரணமானவன்; அவையவை செயல்படுவதற்குக் காரணமானவன்-

ஆகையினாலே பிரேரகன் அவன் என்பதை உணரவேண்டும்.

அசேதன வஸ்துகூட செயல்படுவதற்கு அவன்தான் காரணம். 'அவனன்றி ஓரணுவும் அசையாது, என்ற சாமான்ய வசனம் உலகத்திலே அதனால்தான் ஏற்பட்டது.

அவனல்லாமல் ஒரு புல்கூட நகரமுடியாது. ஓரிடத்திலிருந்து அது நகர்ந்ததானால் அப்படி நகர்வதற்கு அவன் சங்கல்பிக்க வேண்டும்.

ஒரு த்வஷ்டாவைக் குறித்து வேதமானது சொல்கிறது.

த்வஷ்டா என்றால் சிற்பி. சிலை வடிக்கிறவன். அவன் நித்யமே சிலை வடிக்கிற தொழிலைச் செய்கிறான். ஒரு பாறாங்கல் இருக்கிறது- பெரிய பாறாங்கல். அந்தக் கல் மேலே எத்தனையோ நாள் அவன் உட்கார்ந்திருக்கிறான். உட்கார்ந்து, வேறொரு கல்லைச் செதுக்கிக் கொண்டிருப்பான். அழகான வடிவங்களை உண்டாக்குவான்.

ஒரு நாள் என்ன தோன்றிற்று அவனுக்கு... இத்தனை நாளாக உட்கார்ந்திருந்த அந்தக் கல்லிலேயே ஒரு ஸ்ரீநிவாசனை வடிக்க வேண்டும் என்று அவன் மனத்துக்குத் தோன்றிற்று.

உடனே அதைச் செயல்படுத்தினான். அழகான ஸ்ரீநிவாஸ விக்ரஹம் வந்து விட்டது!

வேறு ஒரு ஊரிலேயிருந்து வந்து சிலர், தங்கள் ஊரிலே ஸ்ரீநிவாஸனை-வேங்கடேச பெருமாளை பிரதிஷ்டை பண்ண வேண்டும் என்றார்கள்.

"இதோ இருக்கிறதே!" என்றான்.

பிரதிஷ்டை விசேஷமாக நடந்தது. அந்த ஊரில் அவ்வளவு பேரும் வந்து சேவிக்கிறார்கள். இன்னும் வேறு ஊர்க்காரர்களும் வந்து சேவிக்கிறார்கள்!

திருப்பதிக்குப் போக முடியாவிட்டால் இங்கேயே அந்தப் பிரார்த்தனையைச் செலுத்தலாம்- அப்படி ஒரு பெயர் வந்துவிட்டது அந்த ஊருக்கு! அப்படி ஒரு பெருமை ஏற்பட்டுப் போயிற்று! எல்லாம் ஸ்ரீநிவாஸன் விக்ரஹத்தினாலே!

இது சிற்பியினுடைய சங்கல்பமா அவனுடைய சங்கல்பமா என்பதைப் பாருங்கள்!

எத்தனையோ நாள் அவன் இருந்தான்; ஆனால் அதைச் செயல்படுத்தவில்லை. பகவான் சங்கல்பித்தான் - 'இந்தச் சிலையிலே நான் ஏற வேண்டும்' என்று அவன் சங்கல்பித்தான் - அது செயல்வடிவமாயிற்று!

ஒரு அசேதனமான பதார்த்தம் செயலால் உயிர்பெற அவன்தான் சங்கல்பிக்க வேண்டும்.

அவன் சங்கல்பித்ததால்தான் நாம்

# குறையொன்றுமில்லை

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

செயல்படுகிறோம்.

ஸ்ரீரங்கத்திலே நடந்த ஒரு சம்பவம். 'எம்பார்' என்றொரு மகான் எழுந்தருளியிருந்தார். ராமானுஜருடைய சிஷ்யர் அவர். அப்பேர்ப்பட்ட எம்பார் காலட்சேபம் செய்தபோது பல பேர் போய் அவரிடத்திலே பிரும்ம சூத்ர பாஷ்யம் கேட்டார்கள்.

அதே ஸ்ரீரங்கத்திலே ஒருத்தர் உட்கார்ந்து கொண்டு, வாசல் திண்ணையிலே, காலாட்டியபடி இருப்பார்.

'காஞ்சிபுரத்தில் காலாட்டிக் கொண்டே வாழ்க்கையை நடத்தலாம்' என்று ஒரு வசனம் சொல்வதுண்டு.

ஒருத்தர் என்ன பண்ணினார்; கிடுகிடுவென்று காஞ்சிபுரத்துக்குப் போய், காலை ஆட்டிக் கொண்டே உட்கார்ந்திருந்தார். அவருக்கு ஒன்றுமே கிடைக்கவில்லை!

அங்கேயிருந்து திரும்பி வந்தார். 'காஞ்சிபுரத்



39

திலே போய் காலாட்டினால் பிழைக்கலாம் என்று சொன்னீரே... போய் உட்கார்ந்து ஆட்டிப் பார்த்தேன். பிழைக்க முடிய லையே...' என்றார்.

காஞ்சிபுரத்தில் காலாட்டுவது என்றால் என்ன அர்த்தம்?

தறி! தறி ஓட்டுவதற்குக் காலாட்ட வேண் டும் அல்லவா? தறி நெய்வது அங்கே விசேஷமாக நடைபெறும் தொழில். காஞ்சி புரம் பட்டு பிரசித்தம். ஆகவே, காலாட்டிப் பிழைக்கலாம் என்று சொன்னால், வெறுமே காலை ஆட்டியபடி உட்கார்ந்திருந்தே பிழைக்கலாம் என்று அர்த்தமாகாது!

காஞ்சிபுரத்திலேயிருந்து திரும்பவும் ஸ்ரீரங்கத்துக்கு வருவோம் – அங்கே காலாட் டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாரே ஒருத்தர், அவரிடம் வருவோம்!

எம்பாருடைய காலட்சேப கோஷ்டிக்கு வரக்கூடியவர்கள், "இப்படி வீணாகக் காலட்சேபம் பண்ணுகிறீர்களே! அங்கே வந்து காலட்சேபம் பண்ணணுமே, நல்லதாக நாலு விஷயம் காதிலே விழுமே! இப்படி வீணாகப் போகிறதே உமது வாழ்க்கை. வர மாட்டீரா?" என்று அவரிடம் கேட்டனர்.

அவர் அசையவே இல்லை. இவர்கள் எல்லோரும் கூப்பிட்டார்கள், ஆனால் அவர் எழுந்து வரவில்லை.

இப்படியே அவர்கள் கூப்பிடுவதும் அவர் வராமல் போவதுமாக பல நாள், பல மாதம் ஆயிற்று.

திடீரென்று ஒருநாள், 'நானும் வரேன்' என்று கிளம்பினார் திண்ணைக்காரர்! உபன்யாசத்திலே வந்து உட்கார்ந்தார். கேட்டவுடனே பரம சந்தோஷம் அவருக்கு. கண்களில் தாரை தாரையாக ஜலம் வருகிறது!

மறுநாளிலேயிருந்து எல்லோருக்கும் முன்னே வந்து அவர் உட்கார ஆரம்பித்து விட்டார்!

எம்பார் எல்லோரையும் பார்த்துக் கேட் கிறார் :

"இவர் இவ்வளவு பக்தராக ஆகியிருக் கிறார் என்றால் இதற்கு இவரே காரணம் என்று சொல்பவர்களெல்லாம் கையைத் தூக்குங்கள்."

சில பேர் கையைத் தூக்கினார்கள்.

"இவர் அல்ல, உபன்யாசத்தைச் சொல லக் கூடிய நானே இந்த மாற்றத்துக்குக் கார ணம் என்று சொல்பவர்களெல்லாம் கைதூக்குங்கள்."

உபன்யாசம் சொல்லக்கூடியவர்களுக்கும் கொஞ்சம் வாக்கு வன்மை இருந்தால்தானே எதிரே இருக்கிறவர்கள் கேட்க முடியும். சொல்லக்கூடியவர்கள் சரியாகச் சொல்ல வில்லையானால் எதிரே இருப்பவர்கள் எப்படி கேட்டுக் கொண்டிருக்க முடியும்? அதனாலே 'சொல்கிறவனான ஆசார்யன் நான் காரணமா?' என்று கேட்டார்.

இதற்கும் சில பேர் கை தூக்கினார்கள்.

இன்னும் ஒரு கேள்வி கேட்டார் : "இங்கே 'வாரும், வாரும்' என்று அழைத்துக் கொண்டு வந்தார்களே அவர்கள் காரணம் என்று சொல்கிறவர்களெல்லாம் கை தூக் குங்கள்" என்றார்.

அதற்கும் சில பேர் கையைத் தூக்கி னார்கள்.

அப்புறம் பார்த்தால், எல்லோரும் கை தூக்கிவிட்டிருந்தார்கள். ஒவ்வொரு கேள்விக்கு ஒவ்வொருத்தர் கைதூக்கியாகி விட்டது. கை தூக்காதவர்களே பாக்கி யில்லை.

கையைத் தூக்காத ஒரே ஒருவர் ஆசார் யர் ஒருத்தர்தான்!

அவர் சொல்கிறார் : "நீங்கள் சொன்ன எதுவும் காரணம் அல்ல. நான் காரணமல்ல; வந்தவர் காரணம் அல்ல; அழைத்துக் கொண்டு வந்தவர்களும் காரணம் அல்ல.

இத்தனை நாள் கூப்பிட்டும் வராதவ னுக்கு, இன்று போக வேண்டும் என்ற எண்ணத்தைக் கொடுத்தவன் யார்?

## அருள்வாக்கு

'அறுசுவை என்று சொல்வதில் தித்திப்பு நீங்கலாகப் பாக்கி ஐந்தையும் பகவான் இங்கே ரஸம் என்று சொல்லி விட்டாரே-உப்பு, புளி, மிளகாய் இல்லாமலே சாப்பிட முடியுமா? துவர்ப்பு உடம்புக்கு நல்லது; கசப்பு ஞான விருத்தி என்றும் சொல்வதுண்டே." என்றால், இந்த ஐந்திலே எதையும் அதிகமாகச் சேர்த்துக் கொள்ளாமல் மிதமாகப் பிரயோஜனப்படுத்த வேண்டுமென்றே பகவான் சொல்வதாக வைத்துக் கொள்ளலாம். ரொம்பவும் ஞான வைராக்யமாகப் போகும்போது உப்பு, புளி, மிளகாயை அடியோடு தள்ளி விடுவதுதான் நல்லதென்றாலும், கீதை ஸாமான்ய மனுஷ்யனையும் அவன் இருக்கிற

பகவான் – அவன்தான் காரணம்!

அதுதான் முக்கியம். பகவான் நினைத்து அவரை அங்கே போக வைத்தான் பாருங்கள்; அதுதான் ரொம்ப முக்கியம். அவன் போய் அங்கே உட்கார வைக்கிறான். கேட்க வைக்கிறான். பக்தி உண்டுபண்ணும்படியாக அவன் பண்ணுகிறான்.

ஆகையினாலே, அசேதன பதார்த்தம் ஒரு பெருமை அடையும்படியாகப் பண்ணுகிற காரணமும் அவன்தான். சேதன பதார்த்தமான நாம் பெருமையடையும்படியாகப் பண்ணுபவனும் அவன்தான்.

இதைத்தான் 'அசேஷ சித சித்வஸ்து, சேஷினே' என்றது – எல்லாம் அவனுடைய சொத்தானதனாலே, தனது சொத்தை உடையவன் எப்படிக் காப்பானோ, அந்த மாதிரி அவன் சொத்தான நம்மையும் அனர்த்தப்படாதபடி அவன் காக்கிறான்.

ஸ்வம் – ஸ்வாமி என்ற சொற்கள் இருக்கின்றன.

ஸ்வம் என்றால் அவனைச் சேர்ந்த பொருள் என்று அர்த்தம்.

ஸ்வாமி – பொருளையுடையவன். ஸ்வாமி என்றால் அந்தப் பொருளுக்கு அதிகாரி.

நம்மை ரக்ஷிக்க வேண்டிய பொறுப்பு அவனுக்கு இருக்கிறது. ஆகையினாலே எல்லாவற்றுக்கும் சேஷியாய் அவன் இருக்கிறான்.

சேஷ சாயினே என்றதிலே அந்தர்யாமித்வமும் அடங்கியிருக்கிறது.

சேஷசாயினே என்பது ஆதிசேஷன் மேல் படுத்திருப்பவன் என்பதையும் குறிக்கும். அந்தர்யாமித்வத்தையும் உணர்த்தும்.

எல்லாவற்றுக்குள்ளும் உட்புகுந்து அவன் இருக்கிறான் என்பதை சேஷசாயினே என்ற சொல்லில் நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

எவனொருவன் மனத்திலே இருக்கிறானோ, எவனொருவன் இந்த ப்ருத்வியிலே இருக்கிறானோ,

எவனொருவன் ஆத்மாவுக்கு ஆத்மாவாய் இருக்கிறானோ

– இப்படி சர்வத்துக்குள்ளேயும் உறைபவனான அந்த பரபிரும்மத்தை நீ உணர்வாயாக என்கிறது உபநிஷத்.

அதை அப்படியே தமிழ்ப்படுத்தினார் ஆழ்வார்.

மனத்துள்ளான்
மாகடல் நீருள்ளான்
மலரான் தனத்துள்ளான்
தண்டுழாய் மார்பன்.

திருத்துழாய் – துளசி மாலை அணிந்த மார்பன். மனத்துள்ளே உட்கார்ந்திருக்கிறான். அவனுக்குத் தெரியாமல் ஒன்றும் பண்ணவே முடியாது. பார்த்துக் கொண்டேயிருப்பான்!

(தொடரும்)



இடத்திலிருந்தே கொஞ்சங்கொஞ்சமாக உசத்திக் கொண்டு போவதால், உப்பு, புளிப்பு, உறைப்பு, துவர்ப்பு, கசப்பு முதலானதுகளை அளவாக, மிதமாகச் சேர்த்துக் கொள்வது என்று வைத்துக் கொள்ளலாம். எந்த 'எக்ஸ்ட்ரீ'முக்கும் போகாமல் மத்தியில், மிதமாகப் போவதைத்தான் பகவான் எல்லா விஷயத்திலுமே விதித்து இதே கீதையில் பேசியிருக்கிறார். ஒரேயடியாகத் தின்னக் கூடாது, முழுப்பட்டினியும் போடக் கூடாது; ஒரே தூக்கமாய்த் தூங்கப்படாது, கொட்டு கொட்டென்று ராப் பூரா முழித்துக் கொண்டும் இருக்கப்படாது; எல்லாக் காரியத்திலேயும் மிதமாயிருக்கணும்; அப்படிப்பட்டவன்தான் யோகியாக முடியும் என்று அங்கே சொல்கிறார். அதையே இங்கேயும் 'அப்ளை' பண்ணி, (ஆஹாரத்தின்) அளவில் மிதமாயிருக்கணும் என்ற மாதிரியே, அதன் ருசியில் மிதமான உறைப்பு, புளிப்பு முதலானவை உள்ளதாக போஜனம் செய்ய வேண்டும் என்று வைத்துக் கொள்ளலாம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.



• கார்கில் யுத்தத்தின்போது நவாஸ் ஷெரீஃப்புடன் பர்வேஸ் முஷாரஃப்

# நமது உளவுத்துறை தூங்கிவிட்டதா?

**பா**கிஸ்தானின் முன்னாள் வெளியுறவுச் செயலாளர் நியாஸ் நாயக், சென்ற மாதம் டெல்லி வந்திருந்தார். இப்போது ரகசிய இடத்தில் சிறைவைக்கப்பட்டிருக்கும் பாக்கின் முன்னாள் பிரதமர் நவாஸ் ஷெரீஃப்பின் அந்தரங்கத் தூதுவராகத்தான் அவர் வந்திருந்தார். இந்திய உதவி இல்லையென்றால் பாக்கில் ராணுவப் புரட்சி வெடிக்கும் என்று உதவி கோரினார் என்பதை நாம் முன்பே கல்கியில் வெளியிட்டிருந்தோம். அதன்படியே இப்போது நடந்து விட்டது.

இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால், பாக்கில் ராணுவப் புரட்சி வெடிக்கும் என்ட [illegible] நமது ரகசியப் புலனாய்வுத் துறையினரால முன்னதாகவே கண்டுபிடிக்க முடியவில்லை என்பதுதான்!

பாக்கில் ராணுவப் புரட்சி நாடகம் அரங்கேறிக் கொண்டிருந்த அந்த மாலை நேரத்தில் நமது ரா (ரிசர்ச் அண்ட் அனாலிசிஸ் விங்) அமைப்பின் தலைவர் ஏ.எஸ். துலாத்தை சந்திப்பதற்காக அவரது அலுவலகத்துக்குப் பத்திரிகையாளர்கள் சென்று காத்திருந்தபோது, அவர் தமது இல்லத்தில் 'ரிலாக்ஸ்' செய்து கொண்டிருப்பதாகக் கூறப்பட்டது.

அண்டை நாட்டில் இப்படியொரு நிலை அரங்கேறிக் கொண்டிருக்கும்போது, ரா தலை

வர் தமது அதிகாரிகளுடன் எந்தவிதமான ஆலோசனைக் கூட்டத்தையும் கூட்டி விவாதிக்கவில்லை என்பது பத்திரிகையாளர்களுக்கு ஆச்சரியமாக இருந்தது.

அதே மாலை நேரத்தில் நமது ராணுவத் தளபதி வி.பி. மாலிக்கும், விமானப் படைத் தளபதி ஏ.ஒய்.டிப்னிஸும் பாதுகாப்புத் துறையின் கண்காட்சியைக் கண்டு களித்து விட்டு, ஐந்து நட்சத்திர ஹோட்டலான மௌர்யா ஷெரட்டனில் இரவு விருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். கடற்படைத் தளபதி சுஷில் குமார் அன்று பாங்காக்கில் இருந்தார்.

பாக்கில் ராணுவப் புரட்சி வெடிப்பதற்குப் பதினைந்து தினங்களுக்கு முன்பு, இந்திய உளவுத் துறை தெரிந்து வைத்திருந்த தகவல், 'கார்கில் யுத்தத்தில் பர்வேஸ் முஷாரஃப் தோல்வியடைந்து விட்டதாகப் பாக். அரசியல் தலைமை கருதுவதால், ஜியா என்பவர் பாக். ராணுவத் தளபதியாகப் பதவியுயர்வு பெறலாம்' என்பது மட்டும்தான்.

சென்ற வருட அக்டோபரில் பாக்கின் ராணுவத் தளபதி ஜெனரல் ஜஹாங்கிர் கேரமத் பதவி நீக்கம் செய்யப்படப் போவது பற்றி முன்னரே உளவறிந்து சொல்லவில்லை என்பதற்காக, நமது 'ரா'வின் அப்போதைய தலைவர் அர்விந்த் தபே பதவி மாற்றம் செய்யப்பட்டார்.

ஆனால், இன்று? பாக். நிலவரம் பற்றி மாலை 5:30 மணிக்கே நமது பாதுகாப்பு அமைச்சர் ஜார்ஜ் பெர்னாண்டஸிடம் தெரிவிக்கப்பட்டு விட்டது. இருந்தாலும் எதுவுமே நடக்காதது போல் மௌர்யா ஷெரட்டனில் இரவு விருந்தில் கலந்து கொண்டார் அமைச்சர்.

மறுநாள் இதுபற்றியெல்லாம் பிரதமர் அலுவலகத்தில் விசாரித்த போது, அன்று இரவு ரா தலைவர் பாக். நிலவரம் பற்றி பிரதமரிடம் தொலைபேசியில் பேசி விளக்கினார் என்று சொல்லப்பட்டது. உடனடியாக இந்திய – பாக். உறவு பற்றி பிரதமர் இல்லத்தில் ஓர் அவசரக் கூட்டம் நடத்தப்பட்டதாகவும் பத்திரிகையாளர்களுக்குத் தகவல் தரப்பட்டது.

• ராணுவப் புரட்சியை ஆதரிக்கும் மக்களின் உற்சாகம்.





• டி.வி. நிலையத்தைக் கைப்பற்றும் ராணுவம்

இஸ்லாமாபாதில் ராணுவம் ஆட்சியைப் பிடித்துக் கொண்டிருந்த போது டெல்லியிலுள்ள பாக். தூதரகத்தில் அமைதி

குடிகொண்டிருந்தது. இஸ்லாமாபாதில் ஒன்றுமே நடக்காதது போல் தூதரக அதிகாரிகளும் ஊழியர்களும் இயங்கிக் கொண்டிருந்தார்கள்.

பாக். தூதர் அஷ்ரஃப் ஜஹாங்கிர் காஸியின் இல்லமும் எப்போதும் போல் அமைதியாகத்தான் இருந்தது. காஸியின் அன்றாட நிகழ்ச்சிகளும் சந்திப்புகளும் எப்போதும் போல் நடந்து கொண்டுதானிருந்தன. பாக். ராணுவம் இஸ்லாமாபாத் வீதிகளில் புரட்சி நடை நடந்து கொண்டிருந்தபோது, காஸி ஓர் இரவு விருந்தில் கலந்து கொண்டிருந்தார்.

பாக். தூதரகத்தில் விசாரித்த போது, "பி.பி.சி. செய்திகளிலிருந்துதான் விஷயத்தைத் தெரிந்து கொண்டோம்!" என்றார் தூதரக அலுவலர் ஒருவர்!

"பாதுகாப்பு பற்றிய பயம் ஏதும் இல்லையா?" என்று கேட்டபோது, "பாகிஸ்தானில் இருந்தால்தானே நாங்கள் பயப்பட வேண்டும். அங்கிருந்தால்தான் ஷெரீஃபின் ஆதரவாளர்கள் என்று கருதப்படும் அதிகாரிகளை ராணுவம் கைது செய்யும். இங்கே இருக்கும்போது எங்களுக்கு என்ன பயம்?" என்று அமைதியாகப் பதில் சொன்னார் ஓர் அதிகாரி!

சரி, லாகூரிலிருந்து டெல்லிக்கு வரும் பஸ் பயணிகளாவது பாக். ராணுவப் புரட்சி பற்றி ஏதாவது நேரடி ரிப்போர்ட் தருவார்களா என்கிற ஆர்வத்தில் பஸ் பயணிகளை மொய்த்தார்கள் பத்திரிகையாளர்கள்.

32 பயணிகளில் ஓரிருவரைத் தவிர வேறு எவருக்கும் முதல் நாள் இரவு நடந்த செய்தியே தெரியவில்லை. "லாகூர் பஸ் நிலையத்தில் சக பயணி ஒருவர் சொல்லித்தான் எனக்கே விஷயம் தெரியும்!" என்றார் ஒரு பயணி.

சுலேக்கா காட்டூன் என்ற கராச்சிவாசி ஒருவர், "செவ்வாய்க்கிழமை பின்னிரவு வரை கூட கடைகளெல்லாம் வழக்கம் போலவே திறந்திருந்தன. ஒரு ராணுவ வீரரைக் கூட நான் தெருவில் பார்க்கவில்லை" என்றார்.

பாக். தினசரி ஒன்றில் புகைப்படப் பத்திரிகையாளராகப் பணியாற்றும் ஜாவேத் ஷெரீஃப், "எங்களுக்கு ஒன்றுமே தெரியவில்லை. அந்த அளவுக்கு மௌனமாக ஒரு ராணுவப் புரட்சி நடந்திருக்கிறது!" என்று ஆச்சரியத்தோடு சொன்னார்.

பஸ் டிரைவர் ராம்குமார், "செவ்வாய்க்கிழமை எங்களை போலீஸ் வேறு வழியில் நடத்திச் சென்றது. அன்றிரவு எங்களை ஹோட்டலை விட்டு வெளியே வர வேண்டாமென்று லாகூரிலுள்ள சுற்றுலாத் துறை அதிகாரிகள் சொன்னார்கள். ஆனாலும் வழக்கம் போல் காலையில் பஸ் புறப்படலாம் என்றும் சொன்னார்கள். இது எனக்கு அப்போது ஆச்சரியமாக இருந்தது. பிறகு செய்தி தெரிந்ததும்தான் விஷயம் புரிந்தது. அப்பாடா! எப்படியோ தாய்நாடு வந்து சேர்ந்து விட்டோம்!" என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டார்.

**டெ**ல்லியிலுள்ள ராஜதந்திர வட்டாரங்கள் இதுபற்றி என்ன நினைக்கின்றன? ராணுவ ஆட்சி நடந்தாலும் பணிந்து போகும் நிலையைத்தான் பாக். மேற்கொள்ளும் என்று கணிக்கின்றனர்.

"அமெரிக்கா, ஜப்பான், பிரான்ஸ் உள்பட பல நாடுகளும் பாக். ராணுவப் புரட்சியைக் கண்டித்திருக்கின்றன. சர்வதேச நிதி நிறுவனமும் (ஐ.எம்.எஃப்) பாக்குக்கு அளிப்பதாக இருந்த நிதியுதவியை நிறுத்தியிருப்பதாக அறிவித்திருக்கிறது. இதனால் பாக்கின் புதிய ராணுவத் தலைமை, இந்திய விரோதப் போக்கை மேற்கொள்ளாது!" என்றே பலரும் கருத்துக் கூறுகிறார்கள்.

இருந்தாலும் புரட்சியை அமைதியாக நடத்திய ராணுவம் ஆட்சியையும் அமைதியாகவே நடத்துமா என்றும் – கார்கில் தோல்வியைச் சரிக்கட்டுவதற்காக பாக். ராணுவம் ஏதேனும் 'வீரதீரச்' செயல்களில் ஈடுபடுமா என்கிற கோணத்திலும் நமது ராஜதந்திரிகள் அலசிக் கொண்டுதான் இருக்கிறார்கள். கூடவே நமது உளவுத் துறையின் தூங்குமூஞ்சித்தனத்தின் மேல் பலருக்கும் அதிருப்தி நிலவத்தான் செய்கிறது.

தில்லியிலிருந்து : **வெங்கட்**

படங்கள் - நன்றி: **தினமலர்**

## குவிஸ் போட்டி – 9 முடிவு!

*சரியான விடைகள்* : **1) மாத்ரி 2) சுந்தரன் 3) திரிசடை 4) ரகுவம்சம் 5) பப்ருவாகனன் 6) கணையாழி 7) மேனகை 8) தாருகன்**

சரியான விடைகளை ஏராளமான வாசகர்கள் எழுதியிருந்தார்கள். அவர்களுள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு ரூ. 200 பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி:

**பூமா வாசுதேவன், 5, வடக்கு அடவளஞ்சான், ஸ்ரீரங்கம், திருச்சி – 620 006**

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம :

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் 64-வது ஆசார்யாள் அவர்களின்

## வார்ஷிக ஆராதனை மஹோத்ஸவம்

(ஸ்ரீ மஹாஸ்வாமிகளின் பராத்பரகுரு)

**9-11-1999 செவ்வாய்க்கிழமை**

**வடகோடி பிருந்தாவனம், கும்பகோணம் - 612 001.**

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தை அலங்கரித்த 64-வது ஆசார்யாளான ஸ்ரீ சந்திரசேகரேந்த்ர சரஸ்வதி ஸ்ரீ சரணர்களின் வார்ஷிக ஆராதனை இவ்வருஷம் கிருத்திகா சுக்ல த்விதீயா(9-11-99) செவ்வாய்க்கிழமை தினம் கும்பகோணம் ஸ்ரீமடத்துத் தென்புறம் அமைந்துள்ள அன்னாரது அவதார கிரஹத்தில் 32 வேதவித்துக்களைக் கொண்டு நடத்துவதற்கு ஸ்ரீ மஹா ஸந்நிதானங்கள் அனுக்ரஹித்திருக்கிறார்கள். ஸ்ரீ கிருஷ்ணப்ரேமி மஹராஜ் அவர்கள் மூன்று தினங்கள் இந்த வைபவத்தில் கலந்து கொண்டு உஞ்சவிருத்தி, திவ்யநாமம் பஜனை, உபன்யாஸம், செய்ய இசைந்துள்ளார்கள்.

இந்தப் புனிதமான ஆராதனையை நடத்த லக்ஷக்கணக்காக பணம் தேவைப்படுவது பக்தகோடிகள் நன்கு அறிந்ததே. பக்தகோடிகளின் பொருளுதவியாலேயே செய்யப்படும் இந்த மஹத்தான கைங்கர்யத்தில் எல்லா அன்பர்களும் நேரிடையாக கலந்து கொண்டு எல்லா அம்சங்களிலும் ஒத்துழைத்து திரவ்ய உபகாரம் செய்து இப்புனிதமான ஆராதனையை விமரிசையாக நடத்திக் கொடுத்து ஸ்ரீமஹநியர்களின் பரிபூர்ண அனுக்ரஹத்திற்குப் பாத்திரர்களாகும்படி கேட்டுக் கொள்கிறோம்.

இங்ஙனம்

Dr. N. விழிநாதன்
(Retd. Head of the Dept. University of Madras)
19, I Cross Street,
C.I.T. Colony, Chennai - 600 004.

T.S. குருமூர்த்தி
(Retd. Chief Cashier, UCO Bank)
Managing Trustee & Convener
No. 2, டபீர் நடுத் தெரு.
கும்பகோணம் – 612 001.

குறிப்பு : இந்தப் புனிதமான தர்ம கைங்கர்யத்தில் கலந்து கொள்ளும் அன்பர்களுக்கு அந்த மஹநியர்களின் அருளால் குடும்பத்தில் அமைதி, சந்துஷ்டி, பூர்ணமான லக்ஷ்மி கடாக்ஷம் யாவும் சித்திக்கும்.

நன்கொடை அளிப்பவர்கள் M.O. விலும் கடிதத்திலும் தங்கள் விலாஸம் பின்கோடு உட்பட தெளிவாக எழுதியனுப்ப கோருகிறோம். நன்கொடையளிக்கும் அன்பர்களுக்கு ஆராதனை முடிந்த பிறகு பிரசாதத்துடன் ரசீதும் சேர்த்து அனுப்பப்படும். நன்கொடை அனுப்புவோர் வடகோடி பிருந்தாவனம் டிரஸ்ட் என்று குறிப்பிட்டு – குலபதி கே.ஜி. கிருஷ்ணமூர்த்தி 24 டபீர் நடுத் தெரு, கும்பகோணம் – 612 001 என்ற முகவரிக்கு அனுப்ப கேட்டுக் கொள்கிறோம்.

தலைவர் பிரதான ஸ்தானத்தில் உட்கார்ந்திருக்க, எதிர் வரிசையில் மிஸ்டர் தாமு, ராணுவ ஜெனரல், உளவுத் துறைத் தலைவர், மற்றும் உள்துறை அமைச்சர்.

உள்துறை அமைச்சர் பேச்சை ஆரம்பித்தார் :

"நாம் இங்கே ஒரு முக்கியமான விஷயத்துக்காகக் கூடியிருக்கிறோம். செவ்வாய் பயணத்தில் சூர்யா இடையில் புகுந்து ஒரு பெருங்குழப்பத்தை ஏற்படுத்தி விட்டாள். இது நாம் எதிர்நோக்காத விபத்து...."

# உயிர்களைத் தேடித் தேடி... 7

ராணுவ ஜெனரல் கோபமாய்க் குறுக்கிட்டார்.

"அவங்க ஏற்கெனவே மேனியாக் டிப்ரஷன் உள்ள பர்ஸனாலிட்டி. நாம் ஜாக்கிரதையாக இருக்கத் தவறி விட்டோம். தலைவரும், மிஸ்டர் தாமுவும் என் மீது கோபிக்க வேண்டாம். ஒரு மனநலமில்லாத நபரை எப்படி ஒரு கீ போஸ்ட்ல வெச்சிருக்கீங்க இவ்வளவு நாட்களும்?"

தாமு உணர்ச்சிகளை அடக்க சிரமப் படுவது தெரிந்தது.

உளவுத் துறையின் தலைவர் அலட்சியமாக எழுந்து குறுக்கிட்டார்.

"சூர்யாவின் பிஹேவியரைப் பற்றிப் பேசுவதற்காக இந்தக் கூட்டம் கூட்டப்படவில்லை என நினைக்கின்றேன். அத்துடன் அதைத் தீர்மானிக்கக்கூடிய டாக்டர்கள் எவரும் நம்மிடையில் இல்லை."

"எஸ்! விஷயத்திற்கு வருவோம். இது எப்படி நடந்தது? எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த ப்ராஜக்ட் இது? இதிலேயே இத்தனை கேர்லெஸ். யுவர் ஹைனஸ்! இதில் சம்பந்தப்பட்டவர்கள் அனைவரும் கடுமையாகத் தண்டிக்கப்பட வேண்டும்."

"அதிருக்கட்டும். செக்யூரிட்டிகள் எங்கே போனார்கள்? அவர்களுக்குத் தெரியாமல் அந்த ஐந்து நிமிஷம் - எல்லா சிஸ்டங்களும் நின்று போன ஐந்து நிமிஷம் எப்படி ஏற்பட்டிருக்க முடியும்? எவ்வளவு செக்யூரிட்டிகள்? அவர்களைக் கண்காணிக்க எட்டுப் பேர் கொண்ட குழு. சொல்லப் போனால் சமீப காலமாய் செக்யூரிட்டி பணிகளுக்குத்தான் அதிகம் செலவழிக்கின்றோம். எல்லாம் வீண்!"

"அவர்கள் அனைவரையும் அன்றைக்கே கஸ்டடியில் கொண்டு வந்து விட்டோம். ராணுவ கோர்ட் இதை விசாரிக்கிறது."

"சார்! நான் வெளிப்படையாகப் பேச விரும்புகிறேன். மிஸ்டர் தாமுவுக்கும் இதில் பங்கிருக்கும். அவர் ஒத்துழைப்பில்லாமல் சூர்யா போயிருக்க முடியாது. மக்கள் பேசிக் கொள்கிறார்கள்."

எல்லோரும் தாமுவைப் பார்க்க அவர் எழுந்து தலை கவிழ்ந்து நின்றார். எதையும் அவரால் பேச முடியவில்லை. கண்கள் கோத்துக் கொள்ள உதடுகள் துடித்தன. நிலைமையை உணர்ந்து உளவுத் துறையின் தலைவர் உஷ்ணமாய்க் குறுக்கிட்டார் :

"நம் ஜெனராலுக்கு மிஸ்டர் தாமுவின் மேல் என்ன ஆத்திரம் இருக்கக்கூடும் என்று புரியவில்லை. எப்படியிருப்பினும் இந்த அறைக்குள் நுழையும்போதே தத்தம் விருப்பு

செய்யாறு தி. தா. நாராயணன்

வெறுப்புகளை வெளியில் கழற்றி வைத்து விட்டுத்தான் வர வேண்டுமென்பது எழுதப்படாத சட்டம். நடுநிலையில் நின்று தான் பிரச்னைகளைப் பேச வேண்டும், பேசி வருகிறோம். இந்த விஷயத்தில் யாரையும் குற்றம் சுமத்துவதில் எனக்கு



உடன்பாடில்லை. தவறுகள் எல்லா காலங்களிலும் நடப்பவைதான். பல தடவைகள், ராக்கெட் லாஞ்சிங்கின் போது கடைசி நிமிடங்களில் தவறுகள் கண்டுபிடிக்கப்பட்டு ஏதாவது நிறுத்தப்பட்டிருக்கிறது. கடைசி வரையிலும் தவறுகள் கண்டுபிடிக்கப்படாமலேயே நடுவானில் வெடித்துச் சிதறி, பல உயிர்கள் புகையாய்ப் போனதைப் பார்த்து மனம் வெதும்பிப் புலம்பியிருக்கிறோம்....

"இது கம்ப்யூட்டர் யுகம். நாம் மூளைச் சோம்பல் மனிதர்கள். எல்லாவற்றுக்கும் கம்ப்யூட்டர் சொல்வதுதான் நமக்குச் சரி! அதனால் சூர்யா போன்ற கம்ப்யூட்டர் விஞ்ஞானிக்கு நம்மை இப்படி ஏமாற்றி விட சாத்தியம் உண்டு."

தலைவர் எல்லோரையும் தீர்க்கமாய்ப் பார்த்தார்.

''உங்களனைவரின் ஒட்டுமொத்த அபிப்ராயம்?''

"சட்டத்திற்கு முன்பு அனைவரும் சமம்."

"ஓ.கே! மிஸ்டர் தாமுவை நான் நன்கு அறிவேன். எனக்குக் கெடுதல் பண்ணக் கூடிய நண்பரல்ல அவர். நான் இப்போது சொல்வதைக் கேட்டுக் கொள்ளுங்கள். இடையில் சூர்யா வந்து புகுந்தது நமக்குக் கிடைத்த ஒரு நல்ல திருப்புமுனை. இந்தப் பயணத்தின் உள்நோக்கத்தைத் தேடி எதிரிகளின் ஒற்றர்கள் சுற்றிக் கொண்டிருக்கின்றனர். ஆராய்ச்சிக்காக என்ற நம் அறிக்கையை அவர்கள் நம்பவில்லை. அவர்கள் மூளையை இதில் மழுங்க அடித்து விடலாம். இனி சூர்யாவுடன் பேசும் எல்லா சம்பாஷணைகளையும், செவ்வாயில் தரையிறங்கியபின் அவன் சொல்லும் ஒவ்வொரு

தகவலையும் உலக அளவில் எடுத்துச் செல்லுங்கள். ஐ.டி.எஸ்ஸின் எல்லாச் சேனல்களும் ஒளிபரப்பட்டும். பேட்டிகளில் தவறாது சொல்லுங்கள்."

எல்லோரும் அசந்து போனார்கள். 'தலைவர் எவ்வளவு சாதுர்யமாய்க் காயை நகர்த்துகிறார்?'

"நல்ல உபாயம் சார்! தலைவர்... வாழ்க, தலைவர்... வாழ்க!" - எல்லோரும் எழுந்து நின்று கோஷமிட அவர் முகம் சுளித்தார்.

"சாரி சார்! எங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்த ஒரு வாய்ப்பு" - அத்துடன் கூட்டம் கலைந்தது.

**தா**மு வீட்டுக்குச் சென்றபோது அவருடைய சீக்ரெட் ஏஜெண்ட் ஒரு அவசரத் தகவலுடன் காத்திருந்தான்.



**"நேத்துதான் குடை கொண்டு வராம மழையில் வழியில் மாட்டிக்கிட்டே, லேட். இன்னிக்கு ஏன்யா லேட்? குடை இருக்கே!"**

**"மழை வரதுக்காக வெயிட் பண்ணினேன் சார்!"**

**– வெ. ராஜாராமன்**

"சார்! சூர்யாவை செவ்வாயிலேயே தீர்த்துக்கட்ட திட்டம் போடுகிறார்கள்."

"யார்?"

"தலைவரும் நம் ஜெனரலும்."

அவன் போய் விட்டான். நெடுநேரம் சிலையாக உட்கார்ந்திருந்தார். 'சூர்யா உன் அவசர புத்தியும், முரட்டுத் துணிச்சலும் தான் உனக்கு எமனாகப் போய் விட்டதே. தலைவன் அடிக்கடி வந்து பேசிப் பாசமாய் கட்டியணைக்கும்போதே நான் சந்தேகப்பட்டிருக்க வேண்டும். விஷ ஜந்துவாயிற்றே அவன்! எதிர்ப்பது தெரிந்து விட்டால் உலகின் எந்த மூலைக்குச் சென்றாலும் தப்பிக்க முடியாது.'

தாமு அவசரமாய்த் தரைக்கட்டுப்பாட்டு நிலையத்திற்கு விரைந்தார். ஆனால் அங்கே அவருக்கு முன்னதாக தலைவரின் ஒற்றர் படைக்காரனும் மயனும் இருந்தனர்.

"ஓ! வாருங்கள் சார்! தலைவரின் கையாள் கட்டியணைக்க, தாமுவுக்கு வெறுப்பு கொப்பளித்தது. மயன் அவரைப் பார்த்துச் சிநேகமாய்ச் சிரித்தார்.

"மிஸ்டர் மயன்! இவருடைய மகன் நிரம்பவும் துணிச்சலான பெண். யாராவது இத்தனை ரிஸ்க் எடுப்பார்களா?"

"எஸ்... எஸ்! எதிர்காலத்தில் பிரமாதமாக வருவார்."

"தேங்க்யூ ஜென்டில்மேன்!" - அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு தன் அறைக்குள் புகுந்து கொண்டார். கொஞ்ச நேரம் எதையோ மும்முரமாகப் படிப்பதாக, படித்துக் குறிப்பெடுப்பதாகப் பேர் பண்ணிக் கொண்டிருந்தார். எங்கிருந்தாவது அவருடைய செயல்கள் கண்காணிக்கப் படும்.

கொஞ்ச நேரமாயிற்று. மேற்படி கையாளும், மயனும் அந்தக் கட்டடத்திலேயே இல்லை என்பதை ஊர்ஜிதம் செய்து கொண்டு எழுந்தார். நேராய் கண்ட்ரோல் ரூம் எய்ட்த் போர்டு. கோபக்ஸைக் கூப்பிட்டார். செய்திகள் எவராலும் இடைமறித்துக் கேட்கப்படாமலிருக்கும் பொருட்டு ஆர்.எஸ்.ஏ. என்கிரிப்ஷன் முறையில் சம்பாஷிக்க ஆரம்பித்தார்.

"எஸ் மிஸ்டர் தாமு!"

"கோபக்ஸ்! மிஸ்டர் மயனிடமிருந்து அல்லது தலைவரிடமிருந்து உனக்கு ஏதும் உத்தரவுகள் வந்துள்ளனவா?"

"எஸ்! செவ்வாயிலிருந்து திரும்புவதற்குள் சூர்யாவை நான் கொன்று விட வேண்டும்."

தாமு பதற்றத்துடன் "கோபக்ஸ்! கோபக்ஸ்! நீ அப்படி செ.." - அதற்குள் லிங்க் போய் விட்டது.

"ஹலோ... ஹலோ!" - அங்குமிங்கும் மாற்றி தொடர்புக்காகப் போராடிப் பார்த்தார்.

"என்ன தாமு?" - தலைவர் புன்முறுவலுடன் அறையில் நின்று கொண்டிருந்தார்.

"என்ன? லிங்க் கிடைக்கவில்லையா? இல்லை கட் ஆகிவிட்டதா?" - கேட்டு விட்டுப் பதிலை எதிர்பார்க்காமல் போய்க்

கொண்டேயிருந்தார். தாமுவுக்குப் புரிந்து போயிற்று. தலைவனுக்கு என் மீது புள்ளி விழுந்து விட்டது. கோபக்ஸ் லைனை இவன்தான் துண்டித்திருக்கிறான்!

பின்னால் வந்து கொண்டிருந்த மயன் இவரைச் சற்று ஏற இறங்கப் பார்த்துவிட்டு நகர்ந்தார்.

அன்று மாலை வீட்டிற்குக் கிளம்பிய போது மெதுவாய் மயன் வந்து நின்றார்.

"என்ன மயன்?"

அவர் அவசர அவசரமாக சுற்றுமுற்றும் பார்த்தவாறு அடித் தொண்டையில் கிசுகிசுப்பாய்,

"சார்! சூர்யாவைக் கொல்ல திட்டம் போட்டிருக்கிறார்கள்."

'இவன் தலைவனின் அடிவருடியாயிற்றே! என்னை வேவு பார்க்க வந்திருக்கிறானா? இந்த விஷயம் ஏற்கெனவே எனக்குத் தெரியுமா? என்று வேவு பார்க்கின்றானா?'

"ஆ! ஐயோ சூர்யா! உன் துணிச்சல் உனக்கு எமனாகி விட்டதே ஐயோ!"

"சார்... சார்! ப்ளீஸ் சப்தம் போடாதீர்கள். நான் உங்களிடம் சொல்லி விட்டது தெரிந்தால் தலைவர் என்னையும் தீர்த்து விடுவார். ப்ளீஸ் தெரிந்த மாதிரி காட்டிக் கொள்ளாதீர்கள். நான் பார்த்து வளர்ந்த பெண். அதனால் மனம் பொறுக்காமல் உளறி விட்டேன்" - அவர் கலவரமாய் தாமுவின் கையைப் பற்றி அழுத்திவிட்டு, வேகமாய் வெளியேறினார்.

மறுநாளிரவு வந்த செய்தி அவரைத் தாக்கி வேதனை தந்தது. விஷயத்தின் தீவிரத்தையும் உணர்ந்து கொள்ள முடிந்தது.

"மயன் கொல்லப்பட்டார்!" அடையாளம் தெரியாத தேச விரோத சக்திகள் என்று டீ.வி. பெண்மணி சொல்லிக் கொண்டிருந்தார்.

எஸ்.ஈ. அமைதியாகப் போய்க் கொண்டிருந்தது. சூன்யப் பிரதேசம். தூசுப் படலமின்மையால் ஒளிச் சிதறல்களின்றி ஒரே இருட்டு. இருட்டு. மையிருட்டு.

"அக்கா! உன் தைரியம் அசாத்தியம்."

"இல்லைடா சாத்தியம். நான் அப்பா மாதிரி நினைச்சதை அடையாமல் விடமாட்டேன். சாதிக்கும் வரை தூக்கம் வராது."

"அப்ப நான்?"

"சின்ஸியர் ஒர்க்கர். ஏன் எதற்கு என்பதெல்லாம் உன்னைப் பொறுத்தவரைக்கும் அனாவசியம். சொன்னதைச் சரியாகச் செய்யக்கூடியவன். எனக்கு வாழ்க்கையில் த்ரில் வேண்டும். உனக்கு வாழ்க்கை மட்டுமே போதும். அம்மா மாதிரி."

"உம்..." செல்லமாய்ச் சிணுங்கினான். சூர்யா சிரித்தான்.

"அம்மா கூட அப்பாவிடம் இப்படித்தான் சிணுங்குவா இல்லே?"

"ஏய்!" - புறங்கையால் அவனை அடிப்பது போல் பாசாங்கு செய்தான்.

"இந்த ஸ்டைல் கூட அம்மாதான்" - இருவரும் சிரித்தார்கள். அப்புறம் சாப்பிட்டார்கள். இல்லை கொறித்தார்கள் செறிவூட்டப்பட்ட டேப் லட்டுகளாக.



**''யோவ்! காதுக்குள்ள எறும்பு போனதுகூட தெரியாமல் அப்படி என்னய்யா தூக்கம்?''**

**''மத்தியில் 'நிலையான அரசு' அமையற மாதிரி கனவு கண்டுட்டிருந்தேன் டாக்டர்!''**

**– செ.க. புதூர் குமார்**

அவ்வப்போது பல அரிய காட்சிகளை, மலை மலையாய்ச் சுற்றிக் கொண்டிருக்கும் ஆஸ்ட்ராயிட்களை பூமியின் நிலா மாதிரியான தோற்றத்தை, படங்கள் பிடித்து பூமிக்கு அனுப்பிக் கொண்டிருந்தார்கள்.

தந்தையுடன் பேசினார்கள். இந்தச் சம்பவங்களுக்குப் பின்பு அவர் பழைய இயல்புகள் சிலவற்றை அடியோடு இழந்து விட்டிருக்கிறார் என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது. சின்னச் சின்ன விஷயங்களுக்குக் கூட அழுது விடுகிறார். பேச்சை ஆரம்பிக்கும்போதே குரல் தழுதழுக்கிறது. "ரஷ்ஷு", சூர்யா!" எனும்போதே குரல் கம்மிப்

போகிறது. வயது ட்னஸ் சம்பவங்களின் தாக்கம் துணைக்கு எவருமில்லாமை... இருவரும் சிறிது நேரம் அவருக்காக வருந்தினார்கள். அப்புறம் பேசினார்கள். சோர்வு தட்டிய போதெல்லாம் ராக்கெட்டை விட்டு வெளியே வந்து மிதந்தார்கள். பயிற்சியின்மையால் சூர்யா தடுமாறினாள். எடையற்ற நிலையில் போட்டது போட்டபடி உறைந்து போய் சவம் போல.. ஒரு வித்தியாசமான அனுபவம். சுயவலிமையால் ஒரு அங்குலம் கூட உடலை அப்படி இப்படி அசைக்க முடியவில்லை. சந்தோஷத்தில் சிரித்தான். 'சாதித்தது என் கம்ப்யூட்டர் அறிவு!' ரேடியோ அலைகளின் மூலம் ரஷ்ஷுவுடன் பேசிக் கொண்டேயிருந்தான்.

"ரஷ்ஷு! நாம் இப்போது மணிக்கு 40,320 கி.மீட்டர் வேகத்தில் போய்க் கொண்டிருக்கிறோம் என்பதை நம்பவே முடியவில்லை. அசையாமல் ஜடமாகக் கிடப்பதாகத் தோன்றுகிறது" - சொல்லிவிட்டு மூச்சை இழுத்து விட்டுக் கொண்டாள். அவர்கள் மேலும் கீழுமாய் இருபதடி இடைவெளியில் ராக்கெட்டுக்கு இணையாகப் போய்க் கொண்டிருந்தனர்.

"இல்லை அக்கா! நாலாவது கட்ட என்ஜின் வெடித்த பிறகு கடந்த இருபது நிமிடங்களாக நம் வேகம் மணிக்கு 60,400 கி.மீ."

ஒரு சந்தர்ப்பத்தில் திரும்பிய சூர்யா பார்த்தபோது ராக்கெட்டின் ஒரு பாகத்தில் ஜன்னல் போன்ற சின்ன அமைப்பு வழியே கோபக்ஸின் தலை தெரிந்தது. இவளையே பார்த்துக் கொண்டிருந்தது. அதைப் பார்த்து கையை ஆட்டினாள்.

திடீரென்று அவளுக்கு மூச்சு முட்டு வதைப் போல் அடைத்தது. 'என்னாயிற்று எனக்கு?' மேலும் கீழும் இரைத்தது.

"ரஷ்ஷு... ரஷ்ஷு! என்னவோ வித்தியாசமாகப்படுகிறது. என்னவோ எனக்கு மூச்சு அடைக்கிறது" - அவன் பக்கம் திரும்பினாள். அவன் இவள் சத்தலைப் பொருட்படுத்தாமல் எதிர்ப்படும் ஆஸ்ட்ராயிட்களையே பார்த்த வண்ணமிருந்தான்.

"ஐயோ... ரஷ்ஷு... என்னால் முடியவில்லை" - வேகவேகமாக மார்பறைகள் காற்றுக்காக ஏங்க மேலும் கீழும் இழைய, ஒரு நிமிடத்தில் சடக்கென்று அவள் தலை தொங்கியது.

(தொடரும்)



கற்பனைக்கெட்டாத அளவு விகாரமான முகமுடைய ஒருவன். இழப்புகளும் அவமானங்களும்தான் அவன் வாழ்க்கை.

வேதனையால் வாடுபவனுக்கு ஒரு முகமூடி கிடைக்கிறது. முகத்தில் அதனை ஒட்டிக் கொண்டு விடும்போது திரையுலகம் அவனை நட்சத்திரமாக்க, ரசிகர்கள் கடவுளாக்கி விடுகிறார்கள்.

'இது முகமூடிகளின் காலம்; சுயருபத்துக்கு மதிப்பில்லை' என்பதுதான் படம் தரும் செய்தி.

இதைச் சொல்வதற்கு இயக்குநர் துண்டு துண்டாகத் தருகிற பல காட்சிகள், ஒரு திரைப்படமாக முழுமை பெறாமல் தனிக் காட்சிகள் பலவற்றின் 'ரஷ்' பார்ப்பது போன்ற உணர்வையே தருகிறது. .

தவிர, யதார்த்த சினிமா இயக்குநர்களுள் ஒருவராகத் தம்மை அடையாளப்படுத்திக் கொள்ள விரும்பும் ராஜசேகரன், இந்தப் படத்தில் கையாண்டுள்ள 'மிகைப்படுத்தும் உத்திகள்' கோடம்பாக்கத்து மசாலா மன்னர்களையே பிரமிக்கச் செய்யும் அளவுக்குச் செயற்கைத்தனமும் 'ஒட்டாத குணமும்' கொண்டிருக்கின்றன.

# முகம்

'காதலிப்பதற்கு ஒரு தனி முகம் வேண்டும்' என்று சொல்லி, கதாநாயகனை வாட்டமுறச் செய்கிறாள் ஒரு பெண்.

எல்லா தகுதிகளும் இருந்தாலும் இராணுவத்தில் சேர்த்துக் கொள்ள, அந்த முகம் காரணமாகவே மறுக்கிறார் இராணுவ அதிகாரி. (இந்திய இராணுவத்தை இப்படியா அவமதிப்பது?)

கட்சிக் கூட்டத்துக்கு ஆள் சேர்ப்பவர்கள் கூட நமது கதாநாயகனை விலக்கி விடுகிறார்கள். காரணம்? அந்த முகம்!

நம்ப முடியாத காட்சிகளின் வரிசையான அணிவகுப்பு ஒருபுறம் என்றால் படத்தின் அத்தனை கதாபாத்திரங்கள்



பேசும் வசனங்களிலும் முகம் முகம் முகம் முகம் முகம் என்று ராமஜெபம் மாதிரி முகஜெபம் வருகிறது. மொத்தம் எத்தனை முறை 'முகம்' என்ற சொல் பயன்படுத் தப்பட்டிருக்கிறது என்று எண்ணி எழுது பவர்களுக்கு எவர்சில்வர் வாளியோ எள்ளுப் புண்ணாக்கோ தருவதாக ஒரு பரிசுத் திட்டம் அமைக்கலாம், தயாரிப் பாளர் தானு.

ஒரு நிமிடம் கூட ஒன்றிப்போய் ரசிக்க முடியாத இந்தப் படத்துக்காக உயிரைக் கொடுத்து உழைத்திருக்கும் நான்கு சிறந்த கலைஞர்களைப் பாராட்டாமல் முடிப்பது தர்மமல்ல.

பி.சி. ஸ்ரீராம் - துக்கமும் ஏக்கமும் அவ மான உணர்வும், நிராகரிப்பினால் விளையும் சோகமும் தன் இயல்பாகக் கொண்ட கதாநாயகனைச் (வெளுத்து வாங்கியிருக் கிறார் நாஸர்.) சுற்றியே படரும் திரைக் கதைக்கு, விஷுவலிலும் அந்தச் சோகத்தின் சாயை படர்வது போல மஞ்சளும் சிவப்பும் கலந்த ஒரேவித ஒளியமைப்பை இறுதி வரை கையாண்டிருப்பது.

இளையராஜா - பாடல்களில்லாத இப் படத்தின் பிரதானமான பலம் ராஜாவின் பின்னணி இசை. முதல் காட்சியில் ஒற்றை வயலினில் தொடங்கும் அந்த மேற்கத்திய பாரம்பரிய இசை இழை, முழுப் படத்திலும் ஒரு நதியாகப் பொங்கிப் பரவி, பரவச மூட்டுகிறது. தனியே எடுத்து ஒரு கேசட் ஆக்கினால் அதுவே ஒரு தனிக்கதை சொல் லும்.

லெனின் - விஜயன் : அற்புதமான எடிட் டிங். அல்லாத பட்சத்தில் அத்தனை சிறிய படமாக ஆகியிருக்க முடியாது.

கலை இயக்குநர் மருது : நாஸரின் குடியிருப்புப் பகுதியை ஏழைமையும் ஏக்க உணர்வும் ஒருங்கே வெளிப்படும்விதமாக, ஒரு முகம் பார்க்கும் கண்ணாடியைச் சுற்றி அந்த போர்ஷன் இருப்பது போல் அமைத் திருக்கும் கலைநயம் பாராட்டுக்குரியது.

இத்தனை திறமைகளும் ஒரு நல்ல கலைப் படத்தில் இணைந்திருந்தால் விருது நிச்சயம். அல்லது ஒரு வணிகப் படத்தில் இணைந்திருந்தால் விளைச்சல் நிச்சயம்.

இரண்டுங்கெட்டானான ஒரு படத்தில் சங்கமித்திருப்பதால், 'கண்டுகொள்ளப் படாமல் போகும் சாத்தியமே அதிகம்.

— ஔரங்கசீப்

# மும்பை மசாலா :

# மும்பையில் நடந்த காமெடி ஷோ!

## யாருக்கு மாப்பிள்ளை யாரோ...

ஒண்ணரைக் கண், தெற்றுப்பல், திக்கு வாய்ப் பெண், பெரிய ஸ்ரீதனத்துடன் வந்தால் பேரழகியாகத் தெரிவதில்லையா? அது போலத்தான் சிவசேனைக்கும் முதலில் NCP யிடம் பல குறைகள் தெரிந்தன. முதலாவதாக, சிவசேனையிலிருந்து காங்கிரஸுக்குத் தாவி, தற்சமயம் NCP யின் தலைமைப் பீடத்திலிருக்கும் பரமவைரியான சகன் புஜ்பலுடன் கைகுலுக்க வேண்டிய சங்கடம்; அடுத்து, பிரசாரக் காலத்தில் கன்னா பின்னாவென்று தூஷித்த பவாரை, இன்முகத்துடன் போற்ற வேண்டிய தர்மசங்கடம். அதனால் NCPயில் பிளவு ஏற்படுத்த முடியுமா என்றுதான் முதலில் முயன்றிருக்கிறார். அது முடியாமல் போகவே, மண்டபமும் புக் பண்ணி மாப்பிள்ளையும் ரெடியானபட்சத்தில், இவர்களது தேவைக்கு மேல் (25 சீட்டுகள்) இரு மடங்கு ஸ்ரீதனத்தை (58 சீட்டுகள்) கொண்டு வந்த பவாரைக் கைப்பிடிக்க அரை மனத்துடன் சம்மதித்தார். ஆனால் அந்தப் பெரிய இடத்துப் பெண் மாப்பிள்ளையையே மாற்றிவிடப் பார்த்த போது அரண்டு விட்டார். பி.ஜே.பி.யின் முயற்சியால்தான் பவார் கிடைக்கிறார் என்பதால், அவர்கள் கோபிநாத் முண்டேவை முதல்வராக்குவதில் மும்முரமானார்கள். பி.ஜே.பி.யைக் காட்டிலும் அதிக வோட்டுகளைப் (பி.ஜே.பி. - 57; சி.சே - 69) பெற்றுவிட்டு, இப்படி ஒரு தலை குனிவை சந்திக்க தாக்கரே தயாராயில்லை. "பவாரும் வேண்டாம் ஒன்றும் வேண்டாம்; பவர்தான் வேண்டும்" எனக் கடுப்பாகி விட்டார். நல்ல சம்பந்தத்தைக் கெடுக்கிறாரே என்று முண்டேவுக்குத் தாக்கரே மீது சற்று கோபம்தான். ஆனால் இங்கே சம்பந்தம் பேசிக் கொண்டே, (காங்கிரஸ்) அங்கேயும் ஒரு கண் வைத்திருக்கிறார் பவார் என்றதும் கப்சிப்பாகி விட்டார். ஆக மொத்தம், விதான் சபை முடிவுகள் வெளிவந்த பிறகு, எந்தத் தரகரும் பார்த்திராத அளவு ஜோடிப் பொருத்த நிகழ்ச்சிகள் இங்கே அரங்கேறி விட்டன!

## மில்லினிய காமெடி

மில்லினிய முதல்வரை தேர்ந்தெடுக்கும் நடவடிக்கைகளில், மில்லினியத்தின மிகப் பெரிய 'காமெடி ஷோ'வைக் காணும் பேறு மராத்திய மக்களுக்குக் கிட்டியிருக்கிறது. அதிலிருந்து சில காட்சிகளையாவது உங்களுடன் பகிர்ந்து கொள்ள வேண்டாமா? முதலில் செமை அடி வாங்கிய பவார், தோல்விக் களை சொட்டச் சொட்ட, "நான் எங்கு காங்கிரஸிலிருந்து விலகினேன்? அவர்களால் அல்லவா விலக்கப்பட்டேன்? இப்போதும் ஒன்றும் குறைந்து விடவில்லை; இரு கட்சிகளும் விவேகத்துடன் செயல்பட்டால் ஒரு முடிவுக்கு வரலாம்" என்றார். சகன் புஜ்பல் அழாக்குறையாக, "ஒரு ஃபோன் செய்யக்கூடாதா? ஒரு கடிதம் அனுப்பக் கூடாதா? எங்கள் தரப்பில் எத்தனை முறை முயன்று விட்டோம்?" என்றார் காங்கிரஸாரைக் குறித்து. காங்கிரஸ் தரப்பில் பிரதாப் ராவ் போஸ்லே இது எதையும் கண்டு கொள்ளாமல், "எங்களுடையது single largest party (78 சீட்டுகள்). மக்கள் தெளிவாக

• கனில் தத்



சிவசேனை - பி.ஜே.பியை எதிர்த்து வாக்களித்துள்ளார்கள்; அதனால் ஆட்சி அமைக்கப் போவது நாங்களே" என்று பெருமிதத்துடன் அறிவித்து விட்டு ஆளுநர் மாளிகைக்குச் சென்றார்.

மறுநாள், மூன்றாம் பேஸ் அடித்த முகத்துடன் "நாங்கள் NCPகாரர்களுக்கு ஃபோன் செய்தோம்; அஃபிஷியல் லெட்டர் கூட அனுப்பினோம்; ஒன்றும் அவர்களிடமிருந்து பதிலேயில்லையே" என்றார் குரல் கரகரக்க. இப்போது கண்டுகொள்ளாதிருந்தது புஜ்பல் அண்ட் கோ. (பி.ஜே.பியிடமிருந்து தூது வந்திருந்ததே!) "நாங்கள் ஆலோசனை செய்து கொண்டிருக்கிறோம்; நல்ல முடிவெடுப்போம்; நாளை நமதே (எனதே!)" என்றார் புஜ்பல் அமர்த்தலாக.

'சோனியா பிரதமராகாததால், காங்கிரஸ்காரர்களுடன் எனக்கு மனஸ்தாபமில்லை' என்று காற்று வாக்கில் சொல்லிவிட்டார் பவார். உடனே சிந்தியா தில்லியிலிருந்து பறந்து வந்து, NCPயுடன் பேச்சுவார்த்தை நடத்த ஆவலாகக் காத்திருக்கிறோம், விலாஸ் ராவ் தேஷ் முக்கே முதல்வர்" என்றார் படபடக்கும் நெஞ்சுடன். "சகன் புஜ்பல் முதல்வர் என்றால்தான் பேச்சுவார்த்தை" என்றனர் NCPகாரர்கள். அடுத்த நாள், "உதவ் தாக்கரே தான் முதல்வராவார்" என்று சொல்லிக் கொண்டிருந்த சிவசேனைக்காரர்கள் "ராணேதான் தாக்கரே அண்ட் வாஜ்பேயியால் ஆசீர்வதிக்கப்பட்டவர்" என்று சொன்னார்கள். பின்பு, NCPயைச் சார்ந்த சுதாகர்ராவ் நாயக், "அநேகமாக நாங்கள் ராணேவுக்கு கைகொடுப்போம். ஆனால் இரண்டு டெபுடி சி.எம்.கள் இருப்பார்கள்; ஒன்று முண்டே, இரண்டாவது புஜ்பல்" என்றார். (ஏன் 58 கேட்டிருக்கலாமே?) மதியம், ராணே ஆட்சி அமைக்கும் முயற்சிகளை கைவிட்டு விட்டதாக (தாற்காலிகமாக) செய்திகள் வந்தன.

இந்த "டென்ஷன் பாக்ட் காமெடியின் முடிவு? வெள்ளித் திரையில்... சீச்சீ... வெள்ளைத் தாளில் (நியூஸ் பேப்பரில்) காணலாம்.

திரிசமங்களை விளைவித்த திரிசங்கு நிலையை விதான் சபைத் தேர்தல்கள்தான் தந்தன. லோக்சபை முடிவு காவிப் படைக்கே தெள்ளத் தெளிவான வெற்றியைத் தேடித் தந்திருக்கிறது. மும்பையின் 6 லோக் சபை சீட்டுகளில் ஒன்றே ஒன்று மட்டும் காங்கிரஸுக்கு (சுனில் தத்). சிவசேனைக்காரர்களான மனோகர் ஜோஷியும், மோகன் ரவாலேவும் அலட்டிக் கொள்ளாமல் வென்று விட்டனர். பி.ஜே.பிகாரர்கள்தான் திணறி விட்டனர். வடக்கு மும்பையிலிருந்து வெற்றி பெற்ற ரயில்வே நாயகரான ராம் நாயக்தான் சிரமமில்லாமல் வென்று, வெற்றி பெறுவதில் புதிய ரெக்கார்டையே உருவாக்கி இருப்பவர். ஆனால் நவராத்திரி நாயகரான கிரீத் சோமையாவும், தென் மும்பையிலிருந்து ஜெயவந்தி பென் மேத்தாவும் தத்தளித்துத் திணறி விட்டார்கள். சோமையா முதல் ரவுண்டில் வென்றால் அடுத்த ரவுண்டில் குருதாஸ் காமத்தின் (காங்) கை ஓங்கும். இப்படியே மாற்றி மாற்றி இருவரின் இதயத் துடிப்பையும், பிளட் பிரஷரையும் ஏற்றிய பிறகு, 78வது ரவுண்டில் மெல்லிய இழையில் (7000 வோட்டுகள்) சோமையா வெற்றி பெற்றார். முரளி தேவ்ராவுடன் போராடிய ஜெயவந்திபென், 19,000 வோட்டுக்களைப் பெற்று காங்கிரஸ் வோட்டுக்களைப் பிரித்த எஸ்.பி. வேட்பாளர் கருணையால், கடைசி சுற்றில் 10,000 வோட்டுக்களில் வென்றார். ஹும்... கஷ்டப்பட்டு போராடி என்ன பயன்? 'மைசூர்பா'வை டில்லிக்கு அனுப்பி விட்டு, இதோபதேசம் தாங்கிய காலி அட்டைப் பெட்டியை மும்பையில் வைத்துக் கொண்ட கதையாகி விட்டதே?

**பின்குறிப்பு** : நவராத்திரி துவங்கி முடிந்தும் விட்டது! எங்கே 'பாண்டியா நியூஸ்?' என்கிறீர்களா? இந்த அரசியல்வாதிகள் போடும் ஆட்டத்தில் அந்தக் கோலாட்டமெல்லாம் அமுங்கி விட்டதே! அடுத்த வாரம் பார்த்துக் கொள்ளலாம்...

— **ஜெயஸ்ரீராஜ்**

அப்பா! பட்டாசு லிஸ்ட் ரெடி... பார்க்கறீங்களா?

ஷட் அப் அண்டு கெட் அவுட்!

அப்பாதான் கத்தறார். நீயாவது லிஸ்டைப் பாரேன்...

நேரங்காலம் தெரியாம அவர்கிட்டே லிஸ்டை நீட்டறியே... அறிவிருக்கா?

# குப்பியின் குடும்பம்

அலமு; அரஸ்

இந்த லிஸ்டுக்கெல்லாம் குறைச்சல் இல்லே.... மார்க் லிஸ்ட்தான் கண்றாவி!

சரி! சரி! கத்தாதே!

எல்லாத்தையும் அடிச்சுட்டே....?

இந்த வீட்டுக்கு வெடிகளே வேண்டாம்!

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392/ 99 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka